
LIFEBUOY
SOAP

# வருங்காலத்து

# மாந்தர்கள்

வருங்காலத்து மாந்தர்களுக்கு பூகோள சாஸ்திரத்தில் ஒரு பாடம்—ஆம், இந்த ஆடவர்களும், பெண்டிர்களும்தான் வருங்காலத்தில் நமது புதிய இந்தியாவை பெரியதாக்கப் போகிறவர்கள்.

இவர்கள் இப்பொழுது பழங்காலத்து கிராம திண்ணைப் பள்ளிக்கூடங்களில் படிக்காமல், இக்காலத்து நவீன பாடசாலைகளில் படித்து வருகிறார்கள். நம் நாட்டின் புதிய பள்ளிக்கூடங்கள் மற்றும் கலாசாலைகளில் பெரும்பாலும் ஏஸிஸி மற்றும் சங்கர் பிராண்ட் ஸிமெண்டையே உபயோகித்துக் கட்டப்பட்டு வருகின்றன. கட்டட வேலைகளுக்கு உபயோகப்படும் சாதனங்களுக்குள் இவை மிகவும் உறுதியானவை, நீண்டகாலம் நிலைக்கக்கூடியவை.

**ஸிமெண்ட் முன்னேற்றத்திற்கு அறிகுறி**




தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனிஸ் லிமிடெட்
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்
தி இந்தியா ஸிமெண்ட்ஸ் லிமிடெட்

# கல்கி பொருளடக்கம்

பிலவ, வைகாசி 29 ❋ ஜூன் 11, 1961



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



சிகரெட்டின் விலை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு தாமும் உயர்வு என்ற கருத்து பற்பலரிடம் உண்டு. இது எப்போதுமேயோ, எல்லா விஷயங்களிலுமேயோ உண்மையாகிவிடுவதில்லை. ஏனென்றால், அத்தகைய விலையில் மிகப் பெரும் பங்கு பற்பலவான வரிகளுக்கே போய்ச் சேருகின்றன.

## புகையிலையின் வரலாறு... 10

Panama

20

CIGARETTES

RUPEE

# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**

**இறுதிவரை இன்பமூட்டுவது**




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில மிகப் பெரியது.

GT 710 TM

Greens' Advtg.



மலர் 20 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 46

# காவடியின் வெற்றி!

இந்திய அரசாங்கத்தாரின் யாசகம் வெற்றி பெற்றது. அமெரிக்கா, இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி, ஜப்பான், கனடா ஆகிய சுதந்திரக் கொள்கையுள்ள நாடுகள் கண்ட்ரோல் நாடாகிய இந்தியாவுக்கு 2286 மில்லியன் டாலர் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு வெளிநாட்டு உதவியாக அளித்திருக்கின்றன.

மேற்கு ஜெர்மனியும், ஜப்பானும், கனடாவும் இவ்வளவு பெருந்தொகையை இந்திய அரசாங்கத்துக்குக் கொடுக்கத் தயங்கின. நேருஜியின் சர்க்காருக்கு இவ்வளவு பெரிய தொகை கொடுக்கவில்லையானல், இந்தியாவில் கம்யூனிஸம் வந்து விடும் என்று அமெரிக்கா பயந்து வற்புறுத்தியதின் விளைவாகவே முடிவில் இணங்கின.

அமெரிக்கா, தனி மனிதர்களின் சுதந்திரத்தை மதிக்கும் நாடுகளில் முன்னணியில் இதுவரை நின்றது என்பது உலகறிந்த விஷயம். அந்த அரசாங்கம், தயங்கித் தயங்கி நின்ற வேறுசில நேச நாடுகளையும் சேர்த்துக் கொண்டு இந்தியாவுக்குப் பெருவாரியாக உதவியளித்து விட்டது. இந்திய அரசாங்கம் தன் இஷ்டப்படி செலவு செய்ய உதவி அளித்து விட்டது. இனி, இந்தியாவிலுள்ள தனித் தொழிலதிபர்கள் அமெரிக்க உதவியை அடைவதானலும், இந்திய சர்க்காரின் தயவை நாடியே நிற்க வேண்டும்.

தனி மனிதனின் ஊக்கத்தையும் ஆக்க சக்தியையும் நாசம் செய்யும் 'சர்வம் சர்க்கார் மயம்' என்கிற கம்யூனிஸ வழியில் இந்தியா போய்க் கொண்டிருக்கிறது. இதை இந்தியாவில் உள்ள பெரியோர்களும், அறிவாளிகளும் சொல்லி வந்தார்கள். ஆயினும் ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்குமுள்ள போட்டியின் காரணமாக அமெரிக்கா தனது கொள்கைக்கு மாருக உதவியிருக்கிறது!

அமெரிக்கப் பணத்துக்கு ஒரு விசேஷ ஜாதக பலன் உண்டு.

கம்யூனிஸ்ட் வலையில் விழக்கூடாது என்பதற்காக அது செய்து வரும் உதவியானது கம்யூனிஸ்ட் கட்சி வளர்வதற்கே பயன்படும் விந்தையை உலகில் பல அரங்குகளில் பார்த்து வருகிறோம்.

இந்தப் பரிதாப நிலை பாரத நாட்டில் இதுவரை ஏற்படாமல் இருந்தது. ஆனல் அமெரிக்காவில் இப்போது வந்துள்ள புதிய சர்க்கார், தாங்கள் முந்தைய ஆட்சியினரை விடத் தைரியமும் தாராள மனப் போக்கும் கொண்டவர்கள் என்பதைக் காண்பித்துக் கொள்ளும் ஆர்வத்தில் இப்படிச் செய்திருக்கிறார்கள்.

அமெரிக்கா தனது அயல்நாட்டு உதவிக் கொள்கையை மாற்றிக் கொண்டு பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருப்பவர்களின் ஊக்கமும் உற்சாகமும் குறையும்படியான முறையைக் கடைப்பிடித்திருப்பது வருந்தத்தக்க நிகழ்ச்சியாகும். இனி இந்தியாவின் நடுநிலைமைக் கொள்கை காற்றில் பறந்ததாகவே வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த 2286 மில்லியன் டாலர் கடனையும், இதற்கு முந்தி வாங்கிய வெளிநாட்டுக் கடன்களையும் எந்த விதத்தில், எந்த முறையில், எவ்வளவு ஆண்டுகளில் தீர்க்கப் போகிறார்கள் என்பதை மக்கள் ஒப்புக் கொள்ளக்கூடிய வகையில் திட்டம் போட்டுக் காங்கிரஸ் சர்க்கார் எப்போது வெளியிடுவார்களோ, தெரியவில்லை.

# காங்கிரஸ் – கம்யூனிஸ்ட் கூட்டு

கம்யூனிஸ்ட் கட்சியைத் தோல்வியடையச் செய்யக் கம்யூனிஸ்ட் கொள்கைகளையும் திட்டங்களையும் தானே மேற்கொண்டு விடலாம் என்று காங்கிரஸ் எண்ணுகிறது. இந்த முயற்சி எந்த விதத்திலும் வெற்றி அடையாது. அதற்கு மாறாகக் காங்கிரஸ் கட்சியே, கம்யூனிஸ்ட் கட்சியாக மாறி விடும்!

கம்யூனிஸ்ட்களைத் தோல்வியுறச் செய்ய வேண்டுமானால், நம்முடைய கொள்கைகளிலும் கோட்பாடுகளிலுமுள்ள பலத்தின் உதவி கொண்டுதான் எதிர்த்து வெற்றிகொள்ள வேண்டும். நமது பண்பாட்டையும் கொள்கையையும் புறக்கணித்துவிட்டு வெற்றிபெற முடியாது.

நாம் சுதந்திரம் பெற்றவுடன், தனி மனிதனுக்குப் பூரண சுதந்திரம் உண்டு; அவன் சொத்து வைத்துக் கொள்ளவும், அவன் விரும்பிய தொழில்களை நடத்தவும் பூரண உரிமையுண்டு என்ற அடிப்படை உரிமைகளை மக்களுக்கு வாக்களித்தோம். இப்போது கம்யூனிஸத்தோடு போரிட வேண்டுமானால் நமது ஜீவாதார உரிமைகளில் பூரண நம்பிக்கையும் உறுதியும் கொண்டு நாம் போராட வேண்டுமே தவிர, அந்த ஜீவாதார உரிமைகளைப் புறக்கணித்து விட்டுப் போராட முடியாது. நெருப்பை அணைக்க நெருப்பையே உபயோகிக்க முடியாது. கம்யூனிஸ்ட்களைத் தொலைக்க வேண்டும் என்று நமது சுதந்திரப் பொருளாதார வாழ்வைத் தியாகம் செய்துவிட்டால் என்ன நன்மை?

நமது சுதந்திரப் பொருளாதார வாழ்வைத் தியாகம் செய்வதுதான் கம்யூனிஸத்தோடு நடத்தும் போராட்டத்தில் கையாளப்பட வேண்டிய யுத்த தந்திரம் என்றால், போராட்டத்துக்குப் பொருளே இல்லாமற் போகிறது! தெரியாமல் இப்படிச் செய்தால் இதைப் போன்ற மடமை வேறு கிடையாது. வேண்டுமென்றே இந்த யுக்தியைப் பிரயோகிப்பதானால் காங்கிரஸ்காரர்களும், கம்யூனிஸ்ட்களும் சேர்ந்து சூழ்ச்சி செய்கிறார்கள் என்றே ஆகிறது. இந்தச் சூழ்ச்சியின் வளர்ச்சியைக் கண்டு கம்யூனிஸ்ட்கள் குதூகலத்தில் இருக்கிறார்கள். பிரிட்டிஷார் பலாத்கார முறைகளைக் கையாண்டு நம்மை அடக்கி யாண்ட போது, நாமும் பலாத்கார முறைகளைக் கையாள வேண்டும் என்று சிலர் நினைத்தும் சொல்லியும் வந்தார்கள். ஆனால் அது எவ்வளவு பெரிய தவறு என்பதைப் பின்னர் உணர்ந்தோம்.

நாம் சுதந்திரப் பொருளாதார முறையைக் கையாண்டு, நாட்டில் உற்பத்தியைப் பெருக்கிச் சுபிட்சத்தை ஏற்படுத்த வேண்டும். அதை விட்டு, நமது அடிப்படைக் கொள்கைகளிலேயே நம்பிக்கை யிழந்து, கம்யூனிஸ்ட்களின் சொத்துப் பறிமுதல் முறைகளுக்கு வேறொரு பெயரிட்டு அழைத்து, சுபிட்சத்தை உண்டாக்கப் பார்ப்பது தவறு. நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தில் வகுத்துக் கொண்டுள்ள முறைப்படிதான் சுபிட்ச லட்சியத்தை அடைய வேண்டும். அதைத் தவிர்த்து, கம்யூனிஸக் குறுக்குப் பாதையில் செல்ல முற்படுவது நாம் மக்களுக்கு வாக்களித்த உறுதிகளை மறுப்பதாகும்; கொள்கைகளைப் புறக்கணிப்பதாகும்; கம்யூனிஸ்ட்களிடம் தோல்வியடைந்ததாக ஒப்புக் கொள்வதே யாகும். நாம் முன்னேற வேண்டும் என்ற ஆத்திரத்திலும், அவசரத்திலும் இந்தியாவைக் கம்யூனிஸ்ட் சாம்ராஜ்யத்துடன் இணைத்து விடாமல் இருப்போமாக!

சுதந்திர இயக்கம், மக்களைச் சர்க்காரின் பிடியிலிருந்து விடுவிக்கும் இயக்கமாகும். அந்நிய ஆட்சியின் பிடிப்பிலிருந்து விடுபட நடத்திய சுதந்திர இயக்கத்தைப் போலவே சுதேசி சர்க்காரின் அநீதியான பிடிப்பிலிருந்து விடுபட நடத்தும் சுதந்திர இயக்கமும் புனிதமானது, உயர்வானது. சுதந்திரம் என்பது மக்களின் அன்றாட வாழ்வில் இருக்கிறது – அரசாங்கத்தின் வெளிநாட்டிலாகா காரியாலயத்தில் இல்லை. விடுதலை அடைந்த இந்தியாவில் வாழும் இன்றைய மக்கள் எந்த அளவுக்குச் சுதந்திரமாக வாழ வேண்டுமோ, அந்த அளவுக்குச் சுதந்திரமாக வாழ்கிறார்களா? காங்கிரஸ் கட்சி, இன்று மக்களுக்கு விதித்துள்ள கண்ட்ரோல்களும் கட்டு திட்டங்களும் மற்ற சுதந்திர ஜனநாயக ஆட்சிகளிலும் இருக்கின்றனவா? இந்தக் கட்டு திட்டங்கள், நேர்மையும் நியாயமும் நாட்டில் நிலவ உதவுகின்றனவா? எல்லாரும் சந்தோஷமாக வாழச் சம வாய்ப்புக்கள் அளிக்கின்றனவா?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் 'இல்லை; இல்லை' என்றே பதில் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆட்சி பீடத்திலிருப்பவர்கள் தங்களுக்கு வேண்டியவர்




களுக்கு வரம்பில்லாத லாபம் கிடைக்கச் செய்யவே இந்தக் கட்டுப்பாடுகள் உதவுகின்றன. மக்களின் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அழிக்கின்றன. மக்கள் புதுப் புதுத் தொழில்களில் ஈடுபட ஊக்கமும் உற்சாகமும் அளிக்கும் நாடு தான் நாடாகும். இக் கட்டுப்பாடுகள் அந்த ஊற்றுக் கண்களையே அடைத்து விடுகின்றன! உலகில், மற்ற நாடுகள் மக்களின் ஆக்க சக்திக்கு ஊக்கமளித்துத் தொழில் துறையிலும், விவசாயத் துறையிலும் வெகு சிறப்பாக முன்னேறி யிருக்கின்றன.

கேவலம், பொருள் துறையில் முன்னேற முடியாதபடி செய்யும் இக் கட்டுப்பாடுகள், மக்களின் தார்மீக, ஆத்மீகப் பண்புகளையும் நசிக்கச் செய்து விட்டன! தனி மனிதனின் பேராசை இன்று அபரிமிதமாக வளர்ந்திருக்கிறது. அத்துடன் ஒட்டிய மற்றத் தீய குணங்களும் வளர்ந்துள்ளன. பிரிட்டிஷார் போலீஸ் ஆட்சி நடத்திக் கொண்டிருந்த காலத்தில் கூடக் காணக் கிடைக்காத பயமும் பீதியும் இன்று மக்கள் அனுபவித்து வருகிறார்கள். பாரதப் பிரஜை, தன்னை அறியாமலே தனது ஆத்மாவை இழந்து வருகிறான்; பொருளாதாரத் துறையில் அடையும் வீழ்ச்சியை விட, இது மிக ஆபத்தான வீழ்ச்சியாகும்.

சுதந்திரத்தோடு கூடிய பொருளாதார சுபிட்சத்தை வற்புறுத்தும் காந்திய சோஷலிஸத்தில் நம்பிக்கை கொண்டு சில நல்ல பெரியோர்கள் வேலை செய்யத் தொடங்கினார்கள். ஆனால் பின்பு இந்தச் சுதந்திரப் பாதையின் தன்மை கண்டு அலுத்துப் போய், சுதந்திரத்தைவிடப் பொருளாதார முன்னேற்றமே முக்கியம் என்று கருதத் தொடங்கி விட்டார்கள். ஆகவே, இவர்களும் காங்கிரஸ்காரர்கள் வீழ்ந்துள்ள கம்யூனிஸ்ட் வலையில் விழுந்துவிட்டார்கள். ஆயினும் இவர்கள் பழக்கத்தின் காரணமாகத் தங்கள் கட்சியைத் தனியாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படிச் செய்வதால் கம்யூனிஸ்ட் வளர்ச்சியைத் தடுக்க முடியுமென்று எண்ணுகிறார்கள். ஏழை வாக்காளர்களுக்குக் கம்யூனிஸ்டுகள் சித்திரித்துக் காட்டும் சுவர்க்கத்தை அவர்கள் கம்யூனிஸ்டு வலையில் விழாமலே அளிக்க முடியும் என்று சொல்லி வோட்டுகளைப் பெறுவதற்காகவும் பழக்கத்தின் காரணமாகவும் இவர்கள் பிரிந்து தனித்து நிற்கிறார்களே தவிர வேறில்லை.

சுதந்திரத்தை விடப் பொருளாதார முன்னேற்றமே முக்கியம் என்று கருதுகிறவர்கள் அனைவரும் காங்கிரஸில் சேர வேண்டும். அப்போதுதான் சுதந்திரத்துக்கு ஆதரவாக இருப்பவர்கள் ஒரு கட்சியாகவும் சுதந்திரத்துக்கு எதிராக இருப்பவர்கள் ஒரு கட்சியாகவும் வெவ்வேறு லட்சியங்களோடு இயங்க முடியும். லட்சியங்களில் குழப்பம் கூடாது. பொதுமக்கள் மனத்தில் குழப்பம் விளைவிக்காதபடி, வாக்காளர்கள் முன் லட்சியங்களை நிலைநாட்ட வேண்டும். சுதந்திர ஆட்சி வேண்டுமா, லைசென்சு பர்மிட் ஆட்சி வேண்டுமா என்பதே பிரச்னையாக இருக்க வேண்டும். கட்சியின் மற்ற லட்சியங்கள், இந்த அடிப்படைப் பிரச்னையைப் பார்க்க விடாமல் தடுத்து, பர்மிட் லைசென்சு ஆட்சி நடத்தும் கட்சிக்குச் சாதகமாக முடிகின்றன. இந்திய அரசியலில் மக்கள் இரண்டே கட்சிகளாகப் பிரிந்து நிற்க வேண்டும். மற்றச் சிறு கட்சிகள் எல்லாம் காங்கிரஸிலோ, சுதந்திரக் கட்சியிலோ இணைந்துவிட வேண்டும். அப்போதுதான் சமநிலையிலுள்ள நிர்வாகமும், அரசியல் விழிப்பும், ஜனநாயகமும், பட்சபாதமின்மையும் நிலவும். ஆட்சி பீடத்துக்கு வெளியே உள்ளவர்களும் அப்போது உள்ளேயிருப்பவர்களைப் போலவே தேசத்துக்கு உபயோகமாக இருப்பார்கள்; சில சமயங்களில் உள்ளே யிருப்பதைவிடக்கூட வெளியேயிருந்தே அதிக சேவையும் செய்வார்கள்.

— ராஜாஜி

# சுதந்திரக் கட்சியைப் பின்பற்றுகிறது!

சுதந்திரக் கட்சியின் எந்த அடிப்படைக் கொள்கையை இதுவரை பரிகாசம் செய்து வந்ததோ, அதையே காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்கள் கடைப்பிடிக்க வேண்டும் என்று காங்கிரஸ் மேலிடம் நினைத்து வருகிறது.

கேரள சட்டசபையின், சபாநாயகர் சீத்தி சாஹேப் காலமான பிறகு அந்த ஸ்தானத்துக்கு ஏற்பட்டுள்ள போட்டியில் முஸ்லீம் லீக் அங்கத்தினரை நிறுத்துவதா, மற்றக் கட்சி அங்கத்தினரை நிறுத்தி வோட்டளிப்பதா என்று விழிக்கிறது காங்கிரஸ். மூஸ்லீம் லீகை மற்ற இடங்களில் சாதிக் கட்சி என்று காங்கிரஸ் நிந்தித்தாலும், கேரளத்தில் மட்டும் ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கிறது. ஆயினும், காங்கிரஸ் கேரளத்தில் ஒரு மாதிரியும், கேரளத்துக்கு வெளியே வேறொரு மாதிரியும் பேசினால் வெட்கக்கேடாகப் போய் விடுமே என்று தவிக்கிறது. இந்தச் சங்கடத்திலிருந்து விடுபட, கேரள காங்கிரஸார் ஒரு காரியம் செய்திருக்கிறார்கள். 'மூஸ்லீம் லீக் அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப்பட்டால் நலம். ஆயினும் இவ்விஷயத்தில் தங்கள் இஷ்டம் போல் வோட்டளிக்கக் கேரள காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்களுக்குப் பூரண சுதந்திரம் அளிக்கப்படும்' என்று காங்கிரஸ் கூறியிருக்கிறது.

காங்கிரஸ் அந்தரங்க சுத்தமின்றியே இப்படிச் சொல்லுகிறது. சுதந்திரக் கட்சியோ முன்பே தீர்க்கதரிசனத்தோடு கட்சியில் இருப்பவர்களுக்குப் பல விஷயங்களில் சுதந்திரம் தருவது நல்லது என்ற கொள்கையை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. அதைத்தான் இப்போது காங்கிரஸ் கையாளப் பார்க்கிறது.

பாரத தேசம் மிகப் பெரிய தேசம். பல்வேறு சாதியினர், பல்வேறு மொழியினர், பல்வேறு மதத்தினர் வாழும் தேசம். ஆகவே ஒரு கொள்கையை, ஒரு கட்டு திட்டத்தைக் காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரையில் ஒரே மாதிரி நிறைவேற்ற முடியாது. ஒரு ராஜ்யத்துக்கு நல்லதாக இருக்கக் கூடியது, மற்றொரு ராஜ்யத்துக்குத் தீமையாக விளையலாம்.

மொழியின் அடிப்படையில் ராஜ்யங்கள் பிரிவினை செய்யப்பட்டன. இந்தக் கொள்கை படிப்பதற்கு நியாயமாகவும் நேர்மையாகவும் இருக்கிறது. ஆனால் அஸ்ஸாம் மாகாணத்தில், அஸ்ஸாமியர் எவ்வளவு பேர்கள் இருக்கின்றனரோ, அந்த அளவுக்கு வங்காளியரும் இருக்கின்றனர். வங்காளியர் அஸ்ஸாமில் என்ன காரணமாகக் குடியேறினர்கள் என்பது இப்போது பிரச்னை அல்ல. அவர்கள் அஸ்ஸாம் ராஜ்ய குடி மக்கள். ஆயினும் அவர்கள் பேரில் அஸ்ஸாமியருக்குக் கோபம். ஆகவே மொழிவழி ராஜ்யப் பிரிவினை அங்கு பெருந்துன்பமாக விளைந்துள்ளது.

பஞ்சாபில் சீக்கியரும் ஹிந்துக்களும் ஏறக்குறைய சம அளவில் வாழ்கின்றனர். இருவரும் பேசும் மொழி பஞ்சாபி தான். அனேகமாக எல்லா வகுப்பினரும் உருது லிபியைத்தான் உபயோகித்து வந்தார்கள். அந்த லிபியை இப்போது விட்டு விட்டு, சீக்கியர்கள் குர்முகி லிபியையும், ஹிந்துக்கள் நாகரிலிபியையும் வற்புறுத்திவருகிறார்கள். முஸ்லிம் சமூகம் பஞ்சாபிலிருந்து மறைந்து போனவுடன் ஹிந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும், முக்கியமாகப் பட்டணக் கரைகளிலிருக்கும் சீக்கியர்களுக்கும் ஹிந்துக்களுக்குமிடையே பலமான அரசியல் போட்டி வளர்ந்து வருகிறது. சீக்கியர்கள் கேட்பது பஞ்சாபி பாஷையின் அடிப்படையின் மேல் ஒரு தனி ராஜ்யம். மற்றப் பிரதேசங்களில் கொடுக்கப்பட்டுள்ளபடி பஞ்சாபி பேசுபவர்களுக்கும் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். இப்படிச் செய்தால் பட்டணக்கரை ஹிந்துக்களின் செல்வாக்குக் குறைந்துவிடும் என்று இவர்கள் பயப்படுகிறார்கள். அதனால் அனேக ஹிந்துக்கள், பேசுவது பஞ்சாபியாயினும், தங்கள் தாய்மொழி ஹிந்தி என்கிறார்கள். வேறு எல்லாப் பிரதேசங்களிலும் கொடுக்கப்பட்ட உரிமையை நல்லதோ தீயதோ தங்களுக்கும் கொடுக்க வேண்டும் என்று சீக்கியர்கள் கேட்கிறார்கள். இதை மத்திய அரசாங்கத்தார் மிகக் கண்டிப்பாக எதிர்க்கிறார்கள். எதிர்த்த போதிலும் கிளர்ச்சி இருந்து கொண்டே வருகிறது. அதனால் உயிர்ச்சேதமும் பொருள் நஷ்டமும் மனக்கசப்பும் வளர்ந்து வருகின்றன.

இவை யெல்லாம், இந்த நாட்டை ஆள்வதில் மிகப் பரந்த நோக்கம் வேண்டும் என்பதையே வற்புறுத்துகின்றன. இதைக் கருதித்தான் ராஜாஜி, சுதந்திரக் கட்சியில் முக்கியமான ஒருசில கொள்கைகளைத் தவிர மற்ற விஷயங்களில் அடக்குமுறை இருக்கக் கூடாது என்று சொன்னார். மற்ற விஷயங்களில் முடிவு செய்வது அந்த அந்த அங்கத்தினரின் அறிவு, விவேகம், மனச்சாட்சி ஆகியவற்றைப் பொறுத்த விஷயம் என்றார்.




ஒரு பாட்டில்

**பிரில்க்ரீம்**

சிறந்த சிகை அலங்கார சாதனம்

ஒவ்வொரு பெரிய சைஸ்

**மக்ளீன்ஸ்**

பற்பசை

வெண்மை அல்லது குளோரோபில் சேர்ந்ததோ
வாங்கும்பொழுது கிடைக்கும்.




HTP/1/P/2/61-TAM

பெரிய சைஸ் மக்ளீன்ஸ் பற்பசையின் வழக்கமான விலைக்குக் கிடைக்கும்
இந்த பிரத்தியேகமான பெட்டியை வாங்குங்கள்.

ஆந்திரா, கேரளா, மதராஸ் மற்றும் மைசூர் முதலிய இடங்களில் கிடைக்கின்றன.

# அன்னபூரணி

பட்டாபிராம சாஸ்திரியார் வில்லிவாக்கத்தில் பௌரோஹித்யம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தார். எட்டு பெண் குழந்தைகள். முதல் மனைவி இரண்டு பெண் குழந்தைகளைப் பெற்றுக் கொடுத்து இறந்து விட்டாள். முதல் பெண்ணுக்கு அப்போது பத்து வயது. இரண்டாவது குழந்தைக்குத் தாயார் போய்விட்டபோது ஒரு வயது. அந்தக் குழந்தையைப் பார்த்துக் கொள்வதற்காக மறு விவாகம் செய்து கொண்டார் சாஸ்திரியார். அந்தக் காரணத்தைத் தான் எல்லோரிடமும் அவர் சொன்னார். அது உண்மையோ வெறும் சாக்கோ அதையே நாமும் எழுதினோம்.

*　　*　　*

பங்கஜவல்லியம்மைக்கு வெகு வேகமாகவே குழந்தைகள் ஒன்றன் பின் ஒன்றாக உண்டாயின. கதை ஆரம்பத்தில் ஆறு குழந்தைகள். ஆறும் பெண் குழந்தைகள். தாயில்லாத மூத்த பெண்ணுக்கு இருபது வயது ஆய்விட்டது. விவாகத்துக்காக என்னவென்னவோ செய்து பார்த்தார் சாஸ்திரியார். பயன் காணவில்லை. பெண் அழகாகத்தான் இருந்தாள். ஆனால் வந்தவர்கள் எல்லாரும் பணம் கேட்டார்கள்.

பணத்துக்கு சாஸ்திரியார் எங்கே போவார்? தினசரி காலட்சேபமே கஷ்டமாக இருந்தது. தவிர, தன் குழந்தைகளின் விசாரமே பங்கஜவல்லியம்மைக்குப் பெரிதாக இருந்தது. தன் பிறந்தகத்திலிருந்துகொண்டு வந்திருந்த சிறு தங்க ஆபரணங்கள் இருந்ததை விற்று விட்டு, மூத்தாள் பெண்ணுக்கு விவாகம் செய்வித்துக் கொடுக்க அனுமதிப்பாளா? நல்லவர்கள் கூடத் தயங்குவார்கள் அப்படியிருக்க நம்முடைய பங்கஜவல்லியம்மை எப்படி ஒப்புக் கொள்வாள்?

வில்லிவாக்கத்தில் பெரிய தெருவுக் கோடியில் ஒரு சின்ன தார்ஸ் வீடு. சொந்தக்கார முதலியார் பட்டணத்தில் ஜவுளி வியாபாரி. அவருக்கு முத்தியாலு பேட்டையிலும் ஒரு வீடு உண்டு. அதில் குடியிருந்துகொண்டு தம் ஜவுளி வியாபாரத்தைக் கவனித்து வந்தார். வில்லிவாக்கத்து வீட்டை வாடகைக்கு விட்டு விட்டார்.

*　　*　　*

ராமய்யர் அந்த வீட்டில் குடியிருந்தார். அவருக்கு வயது இருபத்தைந்து. வீட்டில் வேறு யாரும் இல்லை. பகல் எல்லாம் அவர் எங்கேயோ வெளியூருக்கு வேலையாகப் போய்விடுவார். இரவில் வில்லிவாக்கம் வந்து வீட்டில் படுப்பார் அவரே சமையல் செய்து சாப்பிட்டு வந்தார். இரவுச் சாப்பாடு தான் வில்லிவாக்கத்தில். காலையில் சந்தியாவந்தனம் முடித்துவிட்டு, பழையது சாப்பிட்டு விட்டு, வெளியே



**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

போய் விடுவார். அவர் போய் வேலை செய்துவரும் இடத்திலேயே மத்தியான்ன உணவும் முடித்துக் கொள்வார் போலிருந்தது. அதைப்பற்றி யாருக்கும் ஒன்றும் தெரியாது. அவர் யார், எந்த ஊர், என்ன தொழில் ஏதும் யாருக்குமே தெரியாது.



* * *

ஒரு நாள் திடீரென்று ராமய்யர் பட்டாபிராம சாஸ்திரியார் வீட்டுக்கு வந்தார். குசலப் பிரச்னைகள் முடிந்ததும், குமாரத்தி சரஸ்வதியைத் தமக்குக் கொடுத்து விவாகம் செய்ய இஷ்டமா என்ற கேள்வியை சாஸ்திரியார் முன் வைத்தார்.

"திடீரென்று கேட்கிறீர்கள். யோசித்துச் சொல்லுகிறேன்" என்றார் சாஸ்திரியார்.

"நான் ஒன்றும் பணம் கிணம் கேட்கவில்லை. பெண்ணுக்கு வயதும் ஆய்விட்டது. இப்படி வைத்துக்கொண்டிருப்பது பிராமணனுக்குச் சரியில்லை. அதனால் யோசித்துச் சீக்கிரம் முடிவு செய்யவும்" என்றார் ராமய்யர்.

"அப்படியே ஆகட்டும். விவாகம் செய்ய வேண்டியது அவசியம்தான். ஆனால் உங்களைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. யோசித்துத்தான் சொல்ல வேண்டும்" என்றார் பட்டாபிராம சாஸ்திரியார்.

* * *

"உங்களுக்கு ஒன்றுமே தெரிய மாட்டேன் என்கிறது. இந்த வயது ஆன குழந்தையை வீட்டில் எத்தனை நாட்கள் வைத்துக் காப்பது? உங்களுக்குக் கவலையில்லை, எனக்குத்தான் இந்தக் கஷ்டம். ஊரில் நிறைய போக்கிரிகள். இவராக வந்து கேட்கிறார். நல்லவர் போல் தோன்றுகிறது. தெய்வமே உதவுகிறது. கொடுத்து விடுவோம்" என்றாள் பங்கஜவல்லியம்மை.





## ஆரோக்ய நிலையில் அது பாதுகாக்கிறது



சக்தி

குன்றியபோது

ஊட்டமளிக்கிறது



வாழ்க்கையில் உற்சாகம் ஏற்படுத்துகிறது

உங்கள் இழந்த சக்தியை பரிபூரணமாய் அடைய உயரிய சாதனம். இன்றிலிருந்தே தினந்தோறும் இந்த ஊக்கமளிக்கும் அசல் டானிக்கைச் சாப்பிடுங்கள்.



# ரக்தோ பாஸ்போ மால்ட்

நம்பிக்கையின் சின்னமான  முத்திரை

ஸாண்டு பார்மசூடிகல் ஒர்க்ஸ் லிமிடெட்,

கோகலே ரோடு தெற்கு, பம்பாய்-28.

## ஆஸ்தமா பிராங்கைடீஸ் குளிர்சுரம்

முதலியவைகளை எப்படி அடக்குவது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல், சுவாசம் தடைபடுதல் ஆஸ்த்மா, ப்ராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து, இரத்தத்தின் மூலமாக சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சு விடுதல் இல்லாமல் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு இது நிச்சயமாக அளிக்கும்.

## பருக்கள் மறைந்து விடுகின்றன

சருமம் மிருதுவாகவும் மழமழப்பாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், கட்டிகள், செந்நிறத் தழும்புகள், மேலாகப் பரவும் படை, படர் தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப் பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

"இவர் யார், எந்தக் குலம், என்ன வேலை, எப்பேர்ப்பட்டவர், ஒன்றும் தெரியவில்லை. எப்படித் திடீரென்று ஒன்றும் விசாரிக்காமல் பெண்ணைக் கட்டிக் கொடுத்து விடுவது?" என்றார் சாஸ்திரியார்.

"வேலைக்காரி குச்சம்மா அவர் வீட்டிலும் பாத்திரங்கள் கழுவி வேலை செய்கிறாள். வீட்டில் நிறைய வெள்ளித் தட்டும் கிண்ணங்களும் இருக்கிறதாம். துணிமணி எல்லாம் பார்த்தால் அவர் நல்ல பணக்காரர் என்பது நிச்சயம் என்கிறாள். ஒன்றும் யோசிக்க வேண்டாம். இந்த மாதத்திலேயே நல்ல முகூர்த்தம் இருக்கிறது. முடித்து விடுங்கள்" என்றாள் பங்கஜவல்லி யம்மை.

வெள்ளிப் பாத்திரங்களைப் பற்றிச் சொல்லக் கேட்டதும் சாஸ்திரியாரின் சந்தேகங்கள் தீர்ந்து போயின. அவரும் நிச்சயம் செய்து விட்டார். அடுத்த வெள்ளிக்கிழமை இரவு எட்டு மணிக்கு மறுபடியும் ராமய்யர் வந்தார்.

என்ன தொழில், என்ன ஜீவனம் என்பதைப் பற்றிக் கேட்க சாஸ்திரியார் சங்கோசப்பட்டார். தவிர ராமய்யர் ஓர் உயர்ந்த பட்டுப் புடவையும் ரவிக்கைத் துண்டும் தட்டில் புஷ்பம் வெற்றிலைப் பாக்குடன் வைத்து பங்கஜவல்லியம்மையின் முன் வைத்து வணங்கி நமஸ்காரம் செய்ததைக் கண்டு, எல்லா ஐயப்பாடுகளையும் விட்டு விட்டார் சாஸ்திரியார். சரி என்று ஒப்புக் கொண்டு விட்டார்.

அடுத்த சில நாட்களுக்குள் கோயிலில் விவாகச் சடங்குகள் ஒரே நாளில் முடிவு பெற்று மங்கள சூத்திரம் கட்டியாய் விட்டது. குமாரத்தி சரஸ்வதி ராமய்யர் வீட்டில் போய்க் குடித்தனம் செய்ய ஆரம்பித்துவிட்டாள்.

எட்டு மாதங்கள் கழிந்தன. எல்லாரும் சந்தோஷமாகவே இருந்து வந்தார்கள். புருஷனைப் பற்றி சரஸ்வதி தகப்பனாரிடம் மிகவும் புகழ்ந்து பேசுவாள். சிறிய தாயார் இதைக் கேட்டுப் பொறுமையடைவாள்.

"உன் தகப்பனார் என்ன என்னவோ சந்தேகப்பட்டார். அவருக்கு என்ன தெரியும்? நான் செய்த கண்டிப்பினால் இது முடிந்தது" என்றாள் பங்கஜவல்லி யம்மை.

பக்கத்திலிருந்த சாஸ்திரியார் "அவருக்கு என்ன வேலை? என்ன தொழில்? விசாரித்தாயா?" என்றார்.

"அதைத்தான் சொல்ல மாட்டேன் என்கிறார். பகலெல்லாம் பட்டணத்தில் சென்று ஏதோ வேலையில் இருக்கிறார். இராத்திரிதான் வீட்டுக்கு வருகிறார்; ஏதோ நல்ல வேலையாகத்தான் இருக்க வேண்டும்" என்றாள் சரஸ்வதி.

"எவ்வளவு சம்பாதிக்கிறார்? உன்னிடம் ஏதாவது தருகிறாரா?" என்றாள் பங்கஜவல்லியம்மை.

"வீட்டில் இரும்புப் பெட்டிச் சாவி என்னிடம்தான் இருக்கிறது" என்று சொல்லிச் சாவியைப் பெருமையுடன் தாயாருக்குக் காட்டினாள்.

பங்கஜவல்லியம்மைக்குப் பொறாமை இன்னும் அதிகமாயிற்று.

"எவ்வளவு பணம் சேர்ந்திருக்கிறது?" என்றாள்.

"அது எனக்குத் தெரியாது. பாங்கிப் புஸ்தகம் இருக்கிறது. கணக்குகள் இருக்கின்றன. அதையெல்லாம் அவர் வேறு பெட்டியில் வைத்து அந்தச் சாவி அவரிடமே இருக்கிறது. தினமும் 20, 25 ரூபாய் கொண்டு வந்து, என்னிடம் கொடுத்து விடுகிறார். என்ன செலவு செய்தாய், என்று ஏதும் என்னைக் கேட்பதில்லை. செலவு போக மீதி சேர்ந்திருக்கும் பணத்தை மாதம் ஒரு தடவை எடுத்துப் போய் பாங்கியில் போட்டு விடுகிறார். அவர் சொல்லுவதிலிருந்து சொல்லுகிறேன். எனக்கு ஒன்றும் அதைப் பற்றித் தெரியாது. நான் ஏன் கேட்க வேண்டும்?" என்றாள் சரஸ்வதி.

"சித்தி பத்து ரூபாய் கடன் கேட்கிறாள். வீட்டில் அரிசி ஆகிவிட்டதாம். அப்பா கஷ்டத்தில் இருக்கிறார்" என்றாள் சரஸ்வதி.

"என்னை ஏன் கேட்கிறாய்? உன்னிடம் பணம் இருக்கிறதே. கொடுப்பதற்கென்ன?" என்றார் ராமய்யர்.

"உங்களைக் கேட்காமல் நான் எப்படிக் கொடுக்கலாம்?" என்றாள் சரஸ்வதி சிரித்துக் கொண்டு.

சரஸ்வதி பத்து ரூபாய் எடுத்துக் கொண்டு போய்ச் சிறிய தாயாரிடம் தந்தாள். இந்தத் தாராளத்தைக் கண்டு அவளுடைய பொறாமை இன்னும் அதிகமாயிற்று. புருஷனிடம் பேசும்போது இந்த வெறுப்பைக் காட்டினாள்

மறுநாள் காலை "அவர் ஏன் பகலெல்லாம் எங்கேயோ போய் மறைகிறார்? யாரிடமும் தம் உத்தியோகத்தைப் பற்றிச் சொல்லாமல் ரகசியமாக வைத்திருக்கிறார்? மனைவியிடம் கூடச் சொல்லாமல் இதுவென்ன ரகசிய வாழ்க்கை? இதில் ஏதோ மோசம் இருக்கிறது. கடைசியில் இது என்ன விபரீதமாகுமோ, தெரியவில்லை" என்றாள் பங்கஜவல்லியம்மை.

"ராத்திரி வீட்டில் வந்து தினமும் படுக்கிருர் எனக்கு அவரைப் பற்றிச் சந்தேகம் இல்லே. என்னவாயிருந்தாலும் நமக்கு என்ன அதைப் பற்றி? அவர்கள் சுகமாக இருந்தால் நமக்குப் போதும்" என்ருர் பட்டாபிராம சாஸ்திரி.

"அப்படியா? இந்த மாதிரி திருட்டு வாழ்க்கைக்கு ஏதோ காரணம் இருக்கும். இன்னெரு சம்ஸாரம் பட்டணத்தில் வைத்திருக்கிருர் என்று எண்ணுகிறேன். தினமும் நிறையப் பணம் கொண்டு வந்து கொடுக்கிருராமே, சூதாட்டம் ஆடிச் சம்பாதிக்கிருரோ என்னவோ?" என்ருள்.

சாஸ்திரி பேச்சை வளர்க்க வில்லே. ஆனல் அவரும் கொஞ்சம் பயந்தார். 'விசாரிக்கலாம்' என்று சொல்லி விட்டு, அன்று கோபாலகிருஷ்ணய்யர் வீட்டில் சிராத்தம் அதை நடத்தச் சென்ருர்.

"எப்படியாவது ரகசியத்தைக் கண்டு பிடி. இப்படியே ஒன்றும் தெரிந்து கொள்ளாமல் வாழ்க்கை நடத்துவது அபாயம்" என்று பங்கஜவல்லியம்மை சரஸ்வதியிடம் சொன்ஞள் ஒரு நாள்.

"நான் எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? கேட்க எனக்குத் தைரியம் இல்லே" என்ருள் சரஸ்வதி.

"நீ சுத்த உபயோகமற்றவள்" என்று மகளே ஏசினுள்.

இவ்வாறு அடிக்கடி பேச்சு நடக்கும். பிறகு பெற்ருேர் வீட்டுக்கு வருவதையே நிறுத்தி விட்டாள் சரஸ்வதி.

"நாம் வேறு ஊருக்குப் போய்க் குடியிருக்கலாமே" என்று புருஷனிடம் மெதுவாகச் சொன்ஞள்.

"ஏன்? உனக்கு இந்த ஊர் சலித்துப் போச்சா?" என்ருர் ராமய்யர்.

"இல்லே. சித்திக்கு என் மேல் இப்போதெல்லாம் கோபம். காரணம் ஒன்றுமில்லே. நாம் வேறே ஏதேனும் ஒரு ஊருக்குப் போய் விடலாம்" என்ருள்.

"நீ சொல்லுவதும் என் யோசனேயும் ஒன்ருய்ப் போச்சு. கொழும்புக்குப் போக எல்லா ஏற்பாடும் செய்து விட்டிருக்கிறேன். இந்த வாரமே கப்பல் ஏறுவோம்" என்ருர் ராமய்யர்.

ராமய்யரும் சரஸ்வதியும் கொழும்பு சென்று விட்டார்கள். சென்னே பீடர்ஸ் ரோட்டில் "பம்பாய் ஸலூன்" விளம்பரப் பலகை அன்று எடுத்து விடப்பட்டது. "வாடகைக்கு விடப்படும்" என்று ஒரு பலகை மாட்டப்பட்டிருந்தது. மாலேச் செய்தி பத்திரிகையில் செய்தி ஒன்று காணப்பட்டது.

"பிரபல முடி திருத்தும் ஸலூன் ஒன்று இன்று மூடப்பட்டது அதில் வேலே செய்து வந்தவர் கொழும்பு சென்று விட்டார். அவர் ஒரு பார்ப்பனர் என்றும், அவர் தினமும் தம்முடைய உடையை மாற்றி விட்டு, பொய் மீசை தரித்துத் தலேயில் பச்சை வஸ்திரம் கட்டிக்கொண்டு இந்த ஸலூன் தொழில் நடத்தி வந்ததாகவும் தெரிகிறது. பணமும் நிறைய சேர்த்து இந்தப் பார்ப்பனர் கொழும்பு சென்று விட்டார். பார்ப்பனர்களின் மோச நடவடிக்கைக்கு இது ஒரு உதாரணம்."

"பார்த்தீர்களா, விஷயத்தை" என்ருள் பங்கஜவல்லியம்மை.

"இது நம்ம மாப்பிள்ளே என்கிருயா?" என்ருர் பட்டாபிராம சாஸ்திரி.

"சந்தேகம் என்ன?" என்ருள் மனேவி.

"வாயை மூடு!" என்று கர்ஜித்தார் சாஸ்திரியார்.

பங்கஜவல்லியம்மை விம்மி விம்மி அழுதாள் "இந்த அவமானத்தைக் கொண்டு வந்து விட்டீர்கள்!" என்று புருஷன் மேல் குற்றம் சாட்டி அழுதாள்.

"என்ன அவமானம்! எந்தத் தொழிலில் என்ன அவமானம் இருக்கிறது? எல்லாம் ஈசன் மயம். குழந்தை சுகமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிருள். அது போதும்" என்ருர் சாஸ்திரியார்.

ஒரு மாதம் கழித்துக் கொழும்பிலிருந்து சாஸ்திரியாருக்கு ஒரு இன்ஷூர் கடிதம் வந்தது அதில் நூறு ரூபாய் நோட்டுகளாக ரூபாய் ஆயிரம் வைக்கப்பட்டிருந்தது.

"உங்கள் மாப்பிள்ளே இந்தத் தொகையை உங்களுக்கு அனுப்புகிருர். ஏதாவது பயன்படுத்திக் கொள்ளுங்கள். நாங்கள் க்ஷேமமாக இருக்கிருேம்" என்று சரஸ்வதி ஒரு சிறு கடிதம் அதில் வைத்திருந்தாள்.

சாஸ்திரியார் அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லே. ஆனல் உடனே முகம் கருத்தது. "ஸலூன் சமாசாரம் உண்மை போல் தானிருக்கிறது" என்று தமக்குள் எண்ணினுர்.

ரூபாய் வந்ததைப் பற்றி மனேவியிடம் சொல்லவில்லே. புரோகித வேலேயை நிறுத்திவிட்டார். இரண்டு வேலேக்காரப் பையன்களே வைத்துக் கொண்டு பட்டணத்தில் ஒரு சின்ன சாப்பாட்டுக் கடை, 'அன்னபூரணி' என்ற பெயரில் ஆரம்பித்தார். இரண்டு வருஷங்களுக்குள் வியாபாரம் பெருகி அடுத்த பெண்ணுக்கு விவாகமும் தடபுடலாகச் செய்யப்பட்டது.

# பிரிட்டானியா

# க்ளாக்ஸோ







## பிரிட்டானியா பிஸ்கட்டுகள்





# நாவல் பிறக்கிறது



நதிமூலத்தையும் சரி, ரிஷிமூலத்தையும் சரி ஆராய்ந்து பார்க்கக்கூடா தென்பார்கள். அந்த வரிசையில் கதை மூலத்தையும் தாராளமாய்ச் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால், ஆராயக் கூடாதென்கிற விஷயங்களை ஆராய்ந்து பார்ப்பதிலும் ஒரு தனி இன்பம் இருக்கத்தான் செய்கிறது. நான் அப்படிப்பட்டவன். கதைகளைப் படிப்பதோடு, கதாசிரியர்களைப் பற்றியும் அவர்கள் எப்படி எழுதுகிறார்கள் என்பது பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் எனக்கு நிறைய உண்டு.

**அகிலன்**

எனக்குள்ள அதே ஆவல் என் வாசகர்களாகிய உங்களுக்கும் இருக்குமென்பது இயற்கைதானே? ஆகவே, உங்களைச் சற்று என்னோடு, பத்து ஆண்டுகளுக்கு முன்பிருந்த எனது திருச்சியின் எழுத்தறைக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன். வந்து சிறிது எட்டிப் பாருங்கள்.

அதோ தெரிகிறதே அந்தச் சின்னஞ் சிறு அறை. அதற்குள் மேசைமேல் ஒரு கடிதத்தை வைத்துக்கொண்டு, பரிதாபமாக விழித்துக் கொண்டிருப்பது யார் என்கிறீர்களா? வேறு யார், நானேதான்! சுமார் இரண்டு மணி நேரமாக இதேபோல் உட்கார்ந்து தவியாய்த் தவித்துக்கொண்டிருக்கிறேன். வழி தெரியவில்லை.

மேசைமேல் இருக்கிறதே கடிதம், அது 'கலைமகள்' ஆசிரியர் திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் எழுதியது. முதலில் அதைப் படித்தவுடன் எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்தில் தலைகால் தெரியவில்லை. பிறகுதான், அந்தக் கடிதத்தில் இருந்த கடமையை உணரத் தொடங்கியவுடன்தான், தலை சுற்றிக் கொண்டு வந்தது. பரிதாபமாக அதையே பார்த்துக் கொண்டு அயர்ந்து போய் உட்கார்ந்து விட்டேன்.



அவர்கள் எழுதியிருந்தார்கள் :—

"நாவல் போட்டியில் கலந்து கொண்டு 'பெண்' எழுதிப் பரிசு பெற்ற பிறகு, நீங்கள் அடுத்த போட்டிகளில் கலந்து கொள்வதில்லை. உங்கள் முடிவு சரியானதுதான். ஆனால், உடனடியாக உங்களது அடுத்த நாவல் ஒன்று கலைமகளுக்கு வேண்டும். மாதாமாதம் பத்துப் பக்கம் வரும்படி எழுதியனுப்பினால் போதும். தாமதமின்றிக் கதைக் குறிப்பை அனுப்பி வையுங்கள்."

என்மீது இவ்வளவு நம்பிக்கை வைத்து ஆசிரியர் கடிதம் எழுதியிருந்ததால் ஒரு பக்கம் ஆனந்தம். அந்த நம்பிக்கைக்கு நான் உரியவன்தானா என்று நினைத்துப் பார்த்தவுடன் ஒரே தவிப்பு.

முதலில் அவர்கள் நாவல் போட்டி ஆரம்பித்து வைத்தபோது, ஏதோ ஆசிரியரின் தூண்டுதலால் எழுதி அனுப்பி விட்டேன். அவர்களுக்கும் அது முதல் போட்டி; எனக்கும் அது முதல் நாவல்: கிடைத்ததும் முதற் பரிசு. அந்த நாவல் வெளிவந்தபோது வாசகர்களின் பாராட்டுக் கடிதங்களோடு, பத்திரிகை ஆசிரியரும் உற்சாகமூட்டி எழுதியிருந்தார். வாசகர்களும், ஆசிரியரும் சேர்ந்து கொண்டு எழுதியதால், 'நமக்கும் நாவல் எழுதத் தெரியும் என்று நம்ப வேண்டியிருக்கிறதே!' என்று அரை மனத்தோடு நம்ப முற்பட்டேன்.

ஆனால் அடுத்தாற்போல் இப்படி ஒரு கடிதம் வந்தபோது, அது எனக்குப் பெரும் சோதனையாகவே தோன்றியது.

'சாதனையோ மிகப் பெரியது. என் சக்தி தெரியாமல் என்னிடம் ஆசிரியர் பொறுப்பைக் கொடுக்க விரும்புகிறார். கடவுளே! நான் எதை எழுதுவது? எப்படி எழுதுவது? ஒன்றுமே புரியவில்லையே! ஆசிரியரும் வாசகர்களும் நம்புவதுபோல் நீயும் எனக்கு எழுதத் தெரியுமென்று நம்புகிறாயா?'

கடவுள் மேல் பாரத்தைப் போட்டு விட்டு, சூடாக ஒரு கப் காப்பி குடித்து விட்டு, என்னுடைய சைக்கிளை எடுத்துக்

கொண்டு வெளியே கிளம்பினேன். திருச்சியில் உறையூர்ச் சாலை ரோடு மரங்கடர்ந்தது. அதன் வழியே சைக்கிளில் சென்று, பக்கத்து நெல்வயல்களில் மனத்தைப் பறி கொடுப்பது என் பொழுது போக்குகளில் ஒன்று. அன்றைக்கும் அதேபோல் சென்றேன். உறையூர் சுருட்டுக் கம்பெனிகளின் புகையிலைக் காற்று 'காரம், மணம், குணம்' இவற்ருேடு வெளிவந்துகொண்டிருந்தது. எதிரில் திருச்சி மலைக்கோட்டை உறுதியோடும் கம்பீரத்தோடும் தலைநிமிர்ந்து நின்றது. இவைகளை யெல்லாம் கதைக் கண்ணேட்டத்துடன் சுற்றிப் பார்த்துவிட்டு, கழுதத்தைப் பற்றிய சிந்தனையோடு (வழியில் யார் மீதும் சைக்கிளை மோதாமல்) பத்திரமாய் என் வீட்டுக்குத் திரும்பினேன். வீட்டில் என் வரவை எதிர்பார்த்துக் கொண்டு செட்டிநாட்டு நண்பர்கள் சிலர் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களைக் கண்ட உடனேயே எனக்குக் கதை கிடைத்துவிட்டது!

"திடீரென்று கதை கிடைத்துவிட்டதா? சில கதைகளில் வரும் 'கண்டதும் காதல்!' போலல்லவா இருக்கிறது?" இப்படிக் கேட்பீர்கள் என்று எனக்குத் தெரியாமல் இல்லை. இராமனைக் கண்டு காதல் கொண்ட சீதை, கண்ட மாத்திரத்தில் அவன்மீது காதல் கொண்டாள் என்ருல், அதன் பொருள் 'எத்தனையோ பிறவிகளாக அவர்களுக்குள்ளிருந்த தொடர்பு அப்போது வெளிப்பட்டது தான்' என்கிருர் கவி.

அதே போல்தான் அந்த நண்பர்களைக் கண்டவுடன் சில ஆண்டுகளாக எனக்குள்ளே அலைமோதிக் கொண்டிருந்த சிந்தனைகள் அந்தக் கணத்தில் ஓர் உருவம் பெற்றுப் பளிச்சிட்டன.

அது இரண்டாவது உலகப் பெரும் போர் முடிந்திருந்த சமயம். நண்பர்களில் சிலர் பர்மாவிலும் மலேயாவிலும் இருந்து, போரை அநுபவித்து, போரில் கலந்து கொண்டு, பிறகு தமிழ்நாட்டுக்குத் திரும்பியவர்கள். இந்திய நாட்டின் விடுதலைக்காக நேதாஜி சுபாஷ் போஸ் ஏற்படுத்திய தேசிய ராணுவத்தில் சேர்ந்து ஆயுதந் தாங்கிப் போர் புரிந்தவர்கள்.

இந்த இடத்தில் என்னைப் பற்றியும் ஒரு சில வார்த்தைகள் சொல்லிக் கொள்வது அவசியமாகிறது; நான் மாணவப் பருவத்திலிருந்தே நாட்டின் விடுதலைக்காக எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருந்தவன். எனது நாட்டு மக்களிடம் நான் கொண்டுள்ள பாசம் என் உயிர் உள்ள மட்டும் எனக்குக் குறையப் போவதில்லை. அவர்கள் நல்லவர்களாகவும் வல்லவர்களாகவும் வாழ வேண்டுமென்ற பேராசை எனக்கு எப்போதும் உண்டு. அந்தக் கண்ணேட்டத்துடன் மக்களின் வாழ்வில் கலந்துள்ள அரசியல், பொருளாதாரம், கலை, சமயப் பண்பாடு இவற்றைக் கவனித்து வருபவன் நான்.

ஆகவே, முப்பது லட்சம் தமிழர்கள் பர்மா, மலேயா முதலிய தூரக்கிழக்கு நாடுகளில் இருந்து கொண்டு, தாய் நாட்டின் விடுதலைக்காகப் போர்முரசு கொட்டி எழுந்ததை என்னுல் மறக்க முடியவில்லை.

நேதாஜி அவர்கள் அமைத்த இந்திய தேசிய ராணுவத்தில் பெரும் பகுதியினர் தமிழர்கள் என்பதும், அவர்கள் தங்கள் உயிர் உடைமைகளைத் துச்சமாக மதித்துப் போரில் குதித்தார்கள் என்பதும் வரலாறு மறைக்க முடியாத நிகழ்ச்சி. வரலாற்று ஆசிரியர்கள் மறந்தாலும், நான் என் வாசகர்களாகிய தமிழ்ப் பெருமக்களுக்கு அவர்களது சகோதரத் தமிழர்களின் போராட்டத்தைச் சுட்டிக் காட்ட விரும்பினேன்.

இருபதாம் நூற்ருண்டுத் தமிழர்கள் போர் சூழ்ந்த உலகில் வாழ்ந்தும் போரின் பயங்கரங்களை அறியாதவர்கள். 'சாகத் துணிந்தவர்களே இங்கு வாழ முடியும்; போராடத் துணிந்தவர்களே வாழ்வில் வெற்றி பெற முடியும்' என்ற கருத்தைக் கொண்டு, கதையின் சூழ்நிலை அன்றே உருவாகியது. இரண்டாவது உலகப் போரைக் கொண்டு தமிழில் எழுதப் பெறும் முதல் கதையாக அதை அமைக்க முடிவு செய்தேன்.

கதாபாத்திரங்களுக்காக நான் எங்கும் தேடிப் போய்ச் சிரமப்படும் வழக்கமில்லை. என்னைச் சூழ்ந்திருக்கும் மனிதர்கள் எல்லோருமே என் கதாபாத்திரங்கள்தாம். வழக்கமான மனிதர்களை விடச் சிற்சில விஷயங்களிலாவது குண மாறுதல்கள் உள்ளவர்களே என்னை மிகவும் கவர்ந்து விடுகிருர்கள். அவர்களை நான் தப்ப விடுவதில்லை!

'நெஞ்சினலைகள்' என்ற தலைப்போடு கதைக் குறிப்பு அனுப்பி வைத்தவுடன், உடனே கதையை எழுதச் சொல்லி திரு கி. வா. ஜ. அவர்களிடமிருந்து கட்டளையும் பிறந்து விட்டது. கட்டளையை நிறைவேற்றுவது இரு வகைகளில் எளிதாக இல்லை.

ஒன்று, ராணுவச் சட்ட திட்டங்கள், அவர்களது வாழ்க்கை முறை, அலுவல் முறை தெரிந்தாக வேண்டும். தற்கால வரலாறு தழுவிய கதையாதலால் உன்

மையான நிகழ்ச்சிகளையும் அவை நடந்த இடங்களையும் எழுத்தில் கொண்டுவர வேண்டும். பர்மா-மலேயாவுக்கு நேரில் போய் வர அவகாசமோ, வசதியோ இல்லை. அதனால் நேரடியாகப் பங்கு கொண்டவர்களையும், தேசப் படங்களையும் வைத்துக் குறிப்புக்கள் எடுத்துக் கொண்டேன். பிரிட்டிஷ் இந்திய ராணுவத்திலிருந்தவர்களையும், தேசிய ராணுவத்திலிருந்தவர்களையும் தனித்தனியே சந்தித்துத் தகவல்கள் சேகரித்தேன்.

அடுத்த சிரமம், எழுதுவதற்கான நேரத்தைத் தேடிப் பிடிப்பதாகும். கலைமகளில் பத்துப் பக்கம் என்றால், கையெழுத்தில் இருபத்தைந்து பக்கங்களாவது வேண்டும். இந்த இருபத்தைந்து பக்கங்கள் எனக்குத் திருப்தியாக வரவேண்டு மென்றால், சுமார் நூறு பக்கங்களாவது எழுதிக் கிழிக்க வேண்டும்! ஆம், ஒரே மூச்சில் பக்கம் பக்கமாக மளமள வென்று எழுதும் பழக்கம், நான் எழுத முற்பட்டுப் பல ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் கை கூடவில்லை. நேரத்துக்கு எங்கு போவது?

பத்து ஆண்டுகளுக்கு முன்பு வரையிலும் இலக்கியப்பணி வயிறு நிறைந்தவர்கள் மட்டுமே செய்யக்கூடிய இலவசப் பணிக்கு ஒப்பாகத்தான் இருந்ததே தவிர, எழுத்தாளனுக்கு வசதி தரும் சக்தி அதற்கில்லை. இன்று கூட இந்த நாட்டில் அறிவுப் பணியாகிய இலக்கியப் பணியை நம்பி யாரும் வாழ முடியாது; வாழ முயலக் கூடாதென்றுதான் சொல்வேன். முன்னேற்றமடைந்த பிற நாடுகளில் உள்ள பாதுகாப்போ, ஆதரவோ இந்த நாட்டில் எழுத்தாளனுக்கு இல்லை.

ஆனால், எழுத விரும்புகிறவனுக்கு வயிறும் இருக்கிறதல்லவா? அதற்காகத் தபால் இலாகாவில் ஆர்.எம்.எஸ். என்ற ரயில்வே மெயில் இலாகாவில் நான் வேலை பார்த்து வந்தேன். அந்த வேலை ஒரு விசித்திரமான வேலை. வேதனை நிறைந்த உடல் உழைப்பு நிறைந்த வேலை: இரவிலும் பகலிலும் ஓடும் ரயிலில் இருந்துகொண்டு பரபரப்புடன் கவனிக்க வேண்டிய இயந்திர வேலை. பல துன்பங்கள் அதில் இருந்தும், உடல்தான் அதில் வேதனையுற்றதே தவிர, உள்ளம் சுதந்திரமாக வளர இடம் இருந்தது. ஆத்மா அழுக்கடையவில்லை.

இரவில் கண் விழித்து ரயிலில் வேலை செய்து கொண்டே வெளியூர்கள் சென்று திரும்ப வேண்டும். இடையில் சில நாட்கள் ஓய்வு உண்டு. இந்த நாட்களில் பகல் உறக்கமும் ஓய்வும் இருந்தாலே, மறுபடியும் வேலை செய்ய முடியும். நிலக்கரிச் சுரங்க வேலைக்கு அடுத்தபடியான வேலை இது.—இந்த வேலையில் இருந்த நான் தொடர் நாவல் எழுத வேண்டுமானால், என்னுடைய உடல் நலத்தைப் புறக்கணிப்பதைத் தவிர வேறு வழியே இல்லை.

எழுத்தார்வம் என் உயிரின் அடித்தளத்தையே பற்றிக் கொண்டு விட்டதால், ஓடும் ரயிலில் உத்தியோகத்தை ஒழுங்காகக் கவனித்துக் கொண்டு, உறங்க வேண்டிய நேரத்தை எழுத்துக்காக ஒதுக்கினேன். உடலும் மனமும் களைத்த வேளைகளில், திரும்பத் திரும்ப எழுதி அடித்து, மாதா மாதம் மூன்று அத்தியாயங்கள் எழுதினேன்.

மனிதன் இயற்கையை மீறும்போது, முதலில் இயற்கை அவனை எச்சரிக்கிறது; பிறகு தண்டிக்கிறது. அடிக்கடி என் உடல் நலம் பாதிக்கப்பட்டது. அதையும் மீறிப் பார்த்தேன். கடுமையான டைபாய்டுக் காய்ச்சலில் அது கொண்டு வந்து விட்டது. ஒரு நாள் நள்ளிரவில் எனக்கு நினைவு தவறிவரும் வேளைகளில், குடும்பத்தார் சூழ்ந்திருந்து கண்ணீர் வடித்த போது, எனக்கு அவர்களைப் பற்றிய கவலையோ, என்னைப் பற்றிய கவலையோ இல்லை. "நான் எழுதிவரும் 'நெஞ்சினலைகள்' கதாபாத்திரங்களின் கதி என்ன ஆவது? அவர்களை எதிர் பார்த்திருக்கும் ஆயிரமாயிரம் வாசகர்கள் என்ன நினைப்பார்கள்? கடவுளே! அந்த நாவலை நல்லவிதமாக முடிக்கும் பொறுப்பு உன்னுடையதுதான். என் கதாபாத்திரங்கள் மீது கருணை காட்டு!" என வேண்டிக் கொண்டேன்.

இடையில், பத்திரிகை வெளிவரும் தேதி நெருங்கியதால் சென்னையிலிருந்து கதைப் பகுதி அனுப்பச் சொல்லித் தந்தி வந்து விட்டது. நானோ, என் கதாநாயகன் வாசு போர்க்களத்தில் அடிபட்டுக் கிடந்ததைப் போல் டைபாய்டில் அவதியுற்றுக் கிடக்கிறேன். டாக்டர் வேறு என்னிடம் கண்டிப்பாக, 'உங்களுக்கு உயிர் மேல் ஆசையிருந்தால் நீங்கள் ஒரு வரிகூட இந்த நிலையில் எழுதக் கூடாது'' என்று உத்தரவு போட்டுப் போய் விட்டார். கதைகளில் வருவது போலவே என்னிடம் ஒரு பிரச்னை எழுந்தது: 'கதையா? உயிரா?'

யோசித்தேன். டாக்டர் வருகிற நேரங்களில் அவர் வரவைச் சொல்லுவதற்கு வாசலில் ஒரு பையன் காவல் இருந்தான். எழுந்து உட்காருவதற்கோ, கையில் பேனாப் பிடிப்பதற்கோ உடலில் தெம்பு திராணி இல்லை. ஆனால், மற்ற

நாட்களில் பிடிக்கு அகப்படாமல் கண்ணு மூச்சி விளையாடி ஊடல் செய்யும் கற்பனையோ, அந்தச் சமயத்தில் உள்ளத்தில் தானாக ஊற்றெடுத்துக் குமுறிக் கொண்டிருந்தது. 'பாவை விளக்'கில் வரும் தணிகாசலம் உமாவிடம் கதை சொல்லி எழுதச் செய்தது போல், நானும் என் மனைவியிடம் கதை சொல்ல, அவள் எழுதி முடித்தாள். அடுத்த மாதக் 'கலைமகளி'ல் ஆசிரியரின் குறிப்போடு கதை வெளி வந்தது.

வாரங்கள் சென்றன. டாக்டர், பிழைத்துக் கொண்ட தமது நோயாளியைப் பாராட்டும் வகையில், "பார்த்தீர்களா? நான் சொன்னபடி நீங்கள் எழுதாமல் இருந்ததால்தான் பிழைத்துக் கொண்டீர்கள்!" என்றார்.

என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. "டாக்டர்! உங்களுடைய மருந்து மிகவும் சக்தியுள்ளது. அது எனக்குக் கதை சொல்லும் தெம்பைத் தந்து விட்டது. கதைதான் என்னைக் காப்பாற்றியது. எழுதியதால் தான் நான் பிழைத்துக் கொண்டேன்" என்றேன். கதையும் உயிரும் எனக்கு ஒன்றுதான் என்றதைக் கேட்டு, ஏதோ ஒரு நூதனப் பிராணியை உற்றுப் பார்ப்பதுபோல் பார்த்தார் அவர்.

இவ்விதமாகப் பிறந்த 'நெஞ்சினலைகள்' அதை எழுதத் தூண்டிய ஆசிரியருக்கு மன நிறைவையும், எனக்குப் புதிய வாசகர்களையும் தனக்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் பரிசையும் ஒருங்கே பெற்றுக் கொண்டது.

நாவலும் வாழ்வும் பின்னிப் பிணைந்து ஒன்றாக மாறி, என்னிடம் இரண்டுமே இரண்டறக் கலக்கும் நிலைக்கு வந்துவிட்டன. என் சொந்த வாழ்வின் திருப்பங்கள் சிலவற்றை நாவல்களில் காணலாம். நாவல்களில் நடைபெறும் சில நிகழ்ச்சிகள் வாழ்வில் பங்கு கொண்டு விடுகின்றன.

என்னைச் சூழ்ந்திருக்கும் வாசக உலகமே பெரும்பாலும் என் கதைகளின் கருப்பொருளாகிறது. அவர்களிடமிருந்து நான் எதைப் பெற்றுக் கொள்ளுகிறேனோ, அதையே அவர்களிடம் என் எழுத்தில் திருப்பிக் கொடுக்கிறேன். எப்போதும் பெரும் திரளான மக்கள் கூட்டத்தை விரும்புகிறவன் நான். அவர்களிடையே நேராகக் கலந்து பழக வாய்ப்பில்லா விட்டாலும், ஒதுங்காமல் அவர்களிடையே நின்று அவர்களது வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குபவன்.

குறிப்பிட்ட ஒரு சில ரசிக மேதைகளுக்கு மட்டுமோ, அல்லது இலக்கியப் பெரு விமர்சகர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொள்ளுகிறவர்களுக்கு மட்டுமோ நான் எழுதவில்லை. நான் எனது சொந்தக் கருத்துக்களைத்தான் எழுதுகிறேன் என்றாலும், என் சொந்த ரசனைக்காக மாத்திரம் எழுதிக்கொள்ளவில்லை. லட்சக் கணக்கான வாசகர்களுக்காக நான் எழுதும்போது, அந்த வாசகர்களுடைய ஆர்வமே என்னை மேன்மேலும் எழுதத் தூண்டுகிறது. கதைகள் படிப்பதற்கு அதிகமான நேரமும் விருப்பமும் உள்ளவர்கள் பெண்கள். அதனால் அவர்களுடைய மனப்போக்குகளைத் துருவி ஆராய்ந்து எழுதுவதில் எனக்குப் பற்றுதல் இருப்பதில் வியப்பென்ன இருக்கிறது?

காதல் இல்லாமல் கதைகளும் இல்லை; காவியங்களும் இல்லை; கம்பன், காளிதாசன், இளங்கோ, வள்ளுவன், ஷேக்ஸ்பியர் யாருமே இல்லை. ஆகவே, காதலை ஒரு முறையாவது தங்கள் வாழ்வில் அநுபவிக்காதவர்களின் முணுமுணுப்பை நான் பொருட்படுத்த முடியாது. தனி மனிதர்கள், வீடு, நாடு, இவற்றுக்கு நான் எது நல்லதென்று நம்புகிறேனோ அதை எழுதுகிறேன். காதலைத் தவிர இன்னும் பல பிரச்னைகள் என் கதைகளில் உண்டு. அவற்றை வரிசையாகப் படித்து வருபவர்கள் அதில் தமிழ்நாட்டின் தற்கால சரித்திர வளர்ச்சியைக் காணத் தவற மாட்டார்கள். அன்பும் அநுதாபமும் கொண்டு ஆழ்ந்து படிப்பவர்களுக்கு அது தெரியும்.

பரந்த வாசக உலகத்தை எனக்குக் 'கல்கி' பத்திரிகையின் ஆசிரியர் திரு சதாசிவம் அவர்கள் தேடித் தந்திருக்கிறார்கள். என் உள்ளத்தில் எழும் குரலுக்கு அவர் தேடித் தந்திருக்கும் மேடை மிகவும் விசாலமானது. எனக்கே தெரியாமல் நாணிப் பதுங்கிய என் எழுத்தார்வத்தைத் தூண்டி விட்டு என்னை முதலில் நாட்டுக்கு அறிமுகம் செய்து வைத்தவர்கள் 'கலைமகள்' ஆசிரியர் என்பதும், எனக்கு இன்னும் அதிகமான வாசகர்களை அறிமுகம் செய்து வைத்தவர்கள் 'கல்கி' ஆசிரியர் என்பதும் நான் மறக்க முடியாத உண்மைகள்.

தொடர் கதை எழுதுவதால் இலக்கியத் தரம் குறைவதாகச் சிலர் குறை கூறலாம். ஆங்கில நாவல் இலக்கிய மேதை சார்லஸ் டிக்கன்ஸ் ஒரு தொடர் கதை ஆசிரியர் என்பதை மட்டும் அவர்களுக்குச் சொல்லி வைக்கிறேன்.

சேர்ந்தே பிறந்து!
சேர்ந்தே வளர்ந்து!
சேர்ந்தே மறைந்த
செல்வங்களின் கதை!



சிவாஜி கணேசன் அளிக்கும்

ராஜாமணி பிக்சர்ஸ்

# பாசமலர்

இப்பொழுது நடைபெறுகிறது
சித்ரா
கிரௌன்
சயானி
மற்ற நகரங்களிலும்

தயாரிப்பு :-
M.R. சந்தானம்
K. மோஹன் (MOHAN ARTS)



சங்கீதம் :-
விஸ்வநாதன்
ராமமூர்த்தி




டைரக்ஷன் :-
A. பீம்சிங்

ELEGANT

கடைசியாக, நாவல் எழுதுவது பற்றி வாசகர்கள் தங்கள் கடிதங்களில் வழக்கமாகக் கேட்கும் சில கேள்விகளுக்கு இங்கு விடையளிப்பது பொருத்தமென்று நினைக்கிறேன்.

'நாவல் பிறக்கிறது' அடுத்த கல்கி இதழில் ஸ்ரீமதி சரோஜா ராமமூர்த்தி நமது அநுபவங்களை யெல்லாம் மிக்க சுவையுடன் எழுதுகிறார்.

நான் பகலில், முக்கியமாக அதிகாலையில் எழுதும் பழக்கமுள்ளவன். எழுதும்போது கண்டிப்பாகத் தனிமை வேண்டும். அந்த வேளைகளில் மட்டும் யாருடைய குறுக்கீடும் எனக்குப் பிடிப்பதில்லை. காபியும் தண்ணீரும் எனக்கு உற்சாகம் தருபவை.

சில நாட்களில் மணிக்கணக்காகச் சிந்தித்தும் ஒரு வரிகூட எழுத முடிவதில்லை. கற்பனைத் தேவியின் ஊடல் மிகவும் தாபத்தைத் தருவதுண்டு. ஆனால் மறுநாளே அநுதாபம் கொண்டு என் வயப்பட்டுப் பல பக்கங்களாக உருவாகிச் சிரித்து விடுவாள் - பத்திரிகாசிரியர்களின் தந்திகளும் அவசரத் தூதுவர்களும் கற்பனை ஓட்டத்தைத் தூண்டி விடுவதும் உண்டு.

'காக்காய்க்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு' என்பது போல் எல்லா நாவல்களுமே எனக்குப் பிடித்தவைதான். ஆனால் கலை முயற்சியில் இன்னும் எனக்குத் திருப்தி ஏற்பட்டு விடவில்லை. இன்னும் சிறந்தவற்றை இனிமேல்தான் எழுத வேண்டும்.

திரை உலகுக்கும் எழுதத் தொடங்கியதால், எங்கே இலக்கியத்தை மறந்து விடப் போகிறேனோ என்ற சந்தேகம் சிலருக்கு இருக்கிறது. திரை உலகுக்கு ஒரு பகுதி நேரத்தை ஒதுக்கியதற்குக் காரணம் என் கதைகள் இந்த நாட்டின் படிக்கத் தெரியாத மக்களிடமும் பரவ வேண்டும் என்பதுதான். மக்களிடமுள்ள பற்றுதலின் விளைவு அது. அதனால் ஒருகாலும் இலக்கியத்தை மறந்து விடப் போவதில்லை. பதின்மூன்று ஆண்டுகளின் பகுதி நேரத்தை ஓடும் ரயிலில் கழித்த பின்பும் ஓய்ந்த வேளைகளில் கதைகள் எழுதியவனுக்கு, இந்தத் திரை உலகப் பிரவேசம் புதுச் சக்தி தருமே தவிர, அதைக் குறைத்து விடாது. எழுத்து என் உயிர் மூச்சு என்பதை மட்டும் வாசகர்களிடம் சொல்லி வைக்கிறேன்.

முடிவாக நாவலின் பிறப்பைப் பற்றிப் 'பாவை விளக்'கில் நான் குறிப்பிட்டுள்ள கருத்தையே இங்கு மீண்டும் வாசகர்களின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன். என்னைப் பொறுத்தவரையில் கதை இப்படித்தான் பிறக்கிறது.

"எழுத்தாளனின் மூளைக் குழப்பத்தின் தெளிந்த வடிகால் அவன் எழுதும் எழுத்து. அவனுடைய இருதயத்தின் ரத்தச் சாறு அவன் உபயோகப்படுத்தும் மை. தன்னைச் சூழ்ந்துள்ள மனிதர்களின் கூட்டத்தையும், சமயங்களில் தன்னையுமே அவன் கதாபாத்திரங்களாக்கி விடுகிறான். எழுத்தாளனின் வாழ்வுக்கும் கதைகளுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கத்தான் செய்யும். எழுதக் கூடிய கதைகள் உயிர்க் கதைகளாக இருந்தால், தனது ரத்தம், வேர்வை, மூச்சுக் காற்று, எலும்பு, சதை லட்சியப் பித்தம் இவற்றைக் கொண்டு அவன் கதை கட்டுகிறான். அந்தக் கதை வீட்டுக்குள் நுழைந்து வாழும் வாசகர்களில் பலர் அவனைப் போற்றுவார்கள்; பலர் தூற்றுவார்கள். அவன் தனது கதைகளால் மக்களின் மனத்தை வளர்க்க வேண்டும், மக்கள் அவன் எழுத்து வாழ்வை வளர்க்க வேண்டும், அவன் எழுதியவற்றை விலை கொடுத்து வாங்கிப் படிப்பதால்."

அட்டைப்பட விளக்கம்

# நூலும் நினைவும்

'தேச தேசங்கள் தாண்டி இட்டுச் செல்ல நூலைப்போல் ஒரு நாவாயும் உண்டா? குதித்துச் சாடிச் செல்ல ஒரு பக்கம் கவிதையை மிஞ்சிய ஒரு புரவியும் உண்டா?' என்று ஓர் ஆங்கிலப் பாடல். ஆட்சேபணை என்ன? இதோ நம் அட்டைச்சித்திரத்தில் விநுவின் கைத்திறனில் துலங்கும் கற்பனைச் சித்திராங்கியைக் கூட அவள் கையிலுள்ள நூல் ஏதோ ஒரு மனோராஜ்யத்துக்கே அல்லவா இட்டுச் சென்றுவிட்டது? கல்லூரிப் பரீட்சையெல்லாம் ஆகிவிட்டது; விடுமுறையை ரசித்தாகிறது; ரிஸல்ட்டும் வெளிவந்து அவளைத் திருப்திப் படுத்திவிட்டது. இனி வாழ்க்கைப் பரீட்சைதான்; திருமணம்தான். தான் படிக்கும் கதையின் நாயகனும் நாயகியும் களிப்புடன் நடத்தும் அந்த ஆனந்த வாழ்வைத் தானே வாழ்வது போல் நினைத்து இன்புறுகிறாள் அவள். கடவுள் அருளில் இந்தக் கலியாண சீஸனிலேயே அவள் மனோரதம் நிறைவேறட்டும் என்று நாமும்தான் ஆசி கூறி வைப்போமே!

# தலை அலங்கரிப்புக்குத் தகுந்த ஹேர் ஆயில்

பாரத மக்கள் சிறுவயதிலிருந்தே தங்கள் தலை அலங்கரிப்பில் எண்ணெய் தடவி தலை வாருவதில் மிகவும் ஈடுபடுகின்றனர். கூந்தல் மிகவும் அழகாகத் திகழ்வதற்கு மண்டைக்குள் செல்லத் தேவையான நல்லதோர் ஹேர் ஆயில் அவசியம். ஆகையால்தான் மயிர்க்கால்களில் இயற்கையான எண்ணெயுடன் சேர்ந்து திகழச் செய்ய நல்லதோர் ஹேர் ஆயிலை உபயோகிக்கவேண்டும்.

டாடாவின் ஹேர் ஆயில்கள் கூந்தலின் அடிமண்டைக்குள் பாய்ந்து அவை அடர்த்தியாகவும் ஆரோக்கியத்துடனும் இருக்க உதவுகின்றன.

டாடாவின் கோகோனட் மற்றும் கேஸ்டர் ஹேர் ஆயில்கள் நறுமணம் வீசும்படி வாசனை கலக்கப்பட்டு மூன்று விதமான சைஸ்களில் கிடைக்கின்றன.




## டாடாவின் ஹேர் ஆயில்கள்



THOY.IS.TAH

# விஷம்



சுபஸ்ரீ

"என்ன, கடிதத்தைப் படித்தீர்களா?" எனச் செண்பகம், குழி நாற்காலியில் அமர்ந்திருந்த கணவரைக் கேட்டாள்.

"உம், படிக்காமலென்ன?" முப்பது ஆண்டுகள் ஆசிரியத் தெய்வமாக இருந்து, மூவாயிரம் மாணவர்களுக்கு எழுத்தறிவித்த இறைவனுக்கா இந்தப் பத்து வரிக் கடிதத்தைப் படிக்க முடியாது?"

"என்ன உரிமை, என்ன ஆணவம்! என் வயிறு எரிகிறது!" நெஞ்சு வெடிக்கக் கூறினான், செண்பகம். பெரியவர் தேவநாதன் நிதானம் இழக்கவில்லை.

"செண்பகம்! இப்படி வருத்தப்பட்டுப் பயனில்லை. பாசத்தையும் பந்தத்தையும் மெள்ளக் குறைத்துக் கொள்ள வேண்டும். என்றுமே அவன் நமது பிள்ளையாக இருக்க முடியுமா? மனைவி என்று வந்த பிறகு அவனுக்குத்தான் உறவு முறை அதிகம்!"

"பத்து மாசம் சுமந்து பெற்றவளுக்கு இல்லாத உரிமையா? அவர்கள்தான் திமிரோடு எழுதினார்கள் என்றால் நீங்களும் ஒப்புக் கொள்கிறீர்களே! நீங்கள் என்றுமே முனிவர் மாதிரி எதிலும் பற்றுதல் இல்லாமல் வாழப் பழகி விட்டீர்கள். அந்த வித்தையை நான் கற்றுக் கொள்ளவில்லை. இருதயம் என்ற ஒன்றை வைத்துக்கொண்டு நான் திணறித் திண்டாடுகிறேன்."

தேவநாதன் செவிகள் மனைவியின் பேச்சில் தோய்ந்திருக்க, கண்கள் கடிதத்தில் பாய்ந்திருந்தன.

"பெண்ணும் மாப்பிள்ளையும் தனியாகக் குடித்தனம் இருக்க வேண்டும் என்று அவர்கள் நினைப்பது நியாயம்தானே? வியாதிக்காரியான நீயும், வயோதிகனான நானும் இங்கு தங்குவது மருமகளுக்குச் சுமையல்லவா? சம்பந்தி எடுத்துச் சொல்லிக் கடிதம் எழு

தும் அளவுக்கு இங்கிதம் தெரியாமல் நடந்து கொண்டு விட்டோம். நாளையே ஊருக்குப் புறப்படுவது நல்லது.''

''மூன்றும் மனிதர் சொல்லி அவனைப் பிரிந்து போகத்தான் நான் 'கண்ணே கண்ணு ஒண்ணே ஒண்ணு' என்று வளர்த்தேனா?''

''பிள்ளையைப் பெற்றதில் குற்றமில்லை, செண்பகம்! மருமகளைத் தேர்ந்தெடுப்பதில் தவறு செய்து விட்டாய்.''

செண்பகம் அதிர்ந்து விட்டாள். வண்ணப் புள்ளியிட்ட கற்கள் பதித்த வழவழவென்ற தரை; தலைக்கு மேலே சத்தமின்றிச் சுழலும் மின்விசிறி; சன்னலுக்கு வெட்டிவேர்த் தட்டி கட்டி வெயிலைத் தடுத்த குளுமை; கோடையின் வெப்பம் தணிந்த தண்மைச் சூழ்நிலை! நேற்றுவரையில் மகனின் இந்த இல்லத்தை அனுபவித்து ஆனந்தித்தவள்தான். ஆனால் இன்று அது அடிசுடும் ஆற்றுமணலாகக் கொதித்தது. நெஞ்சிலே ஏதோ படபடவென்று அடித்துக் கொண்டது. காது ஓரங்களில் ஜ்வாலை தெறித்தது. வேம்பு போன்ற கசப்பான நினைவுகள்.

★

வைகை ஆற்றங்கரையில் ஒரு கிராமத்தில் தேவநாதனுக்கு ஆசிரியத் தொழில். ஆறு



வருடத் தாம்பத்திய உறவில் அகர முதல எழுத்தெல்லாம் உச்சரிக்க ஓர் அழகிய செல்வம் தோன்றவில்லை! பயிலும் குழந்தைகள் மயில் சாயலில், முகம் நோக்கி அகம் நிறைந்து விடுவார் தேவநாதன். ஆனால் மனைவிக்கு? தொட்டும், இழுத்தும், துழாவியும் மட்டற்ற தொல்லை தரும் குழவி இல்லையே என்ற குறை. உண்கலத்தில் உட்கார்ந்தால் கண் கலங்கிப் போய் நிற்பாள் செண்பகம்.

பத்து வருடங்களுக்குப் பிறகு அத்தி பூத்தது. நாள் கழித்துப் பிறப்பதால் சர்க்கார் மருத்துவ மனைக்குச் செல்வது நல்லது என்று நம்பினார்கள். ''ஐயோ எட்வர்டு ஆசுபத்திரியா? சென்றவர் மீள்வதில்லையே!'' என்று அமங்கலம் பாடினர், ஒரு சாரார். வேறு வழியின்றி அங்கு சேர்ந்தாள் செண்பகம்.

அழகிய பெண் குழந்தையைப் பெற்றெடுத்து வீடு திரும்பினாள், மற்றவர் வியக்க. ஒரு மாதத்துக்கெல்லாம் சிசுவுக்குக் காலில் கட்டி. மீண்டும் மருத்துவமனைக்கு ஓடினாள். அவள் கண்ணெதிரிலேயே டாக்டர்கள் கத்தியால் புண்ணைக் கிளறினார்கள். தாயின் நரம்பு துடிதுடித்தது. வைத்தியக் கல்லூரிப் பயிற்சி மாணவர்கள் குழாம் வந்ததும், கட்டவிழ்த்து மீண்டும் குடைந்து ஏதேதோ சொன்னார்கள். ரண வலி பொறுக்காது குழந்தை வீறிட்ட பொழுது செண்பகத்தின் நெஞ்சு வெந்து விட்டது. மாணவர் கோஷ்டி — ஆணும் பெண்ணுமாக — சிரித்துக் கொம்மாளமிட்டு விட்டுச் சென்று விட்டது. இரவு குழந்தைக்குச் சன்னி கண்டு, நர்ஸ் ஒருத்தியின் அரை குறைக் கவனிப்பையும் மீறி, கண்ணை மூடி விட்டது! 'இப்பொழுதே வீட்டுக்கு எடுத்துச் செல்லுங்கள்' என்று நிர்வாகிகள் வற்புறுத்தினர். இருட்டிலே தனியாக உயிரற்ற குழந்தையுடனா? 'காலையில் காப்பியுடன் கணவர் வருவார். போகிறேன்' என்றாள் கண் கலங்க, புண்ணுள்ளம் வெதும்ப. கட்டிலை விட்டு அகற்றி வராந்தாவிலே இருக்கப் பணித்தனர். விடியும் வரை, இமைக்காத கண்களோடு அந்தச் சடலத்தோடு ஓலமிட்டுக் கொண்டிருந்தாள் செண்பகம். 'அழுது சத்தம் செய்து பிற நோயாளிகளுக்குத் தொந்தரவு அளிக்கக் கூடாது' என ஆயா சட்டம் படித்தாள். பச்சிளம் உடலைத் தடவித் தடவிக் கண்ணீர் உகுத்தாள் அவள். நான்கு நாட்களாக மருத்துவ ஆராய்ச்சிப் பொருளாக இருந்து எத்தனை அவஸ்தைப்பட்டு அது இப்போது விடுதலை அடைந்து விட்டது!

குழந்தையைப் பெற்றுப் பறி கொடுத்த துக்கத்தைவிடக் கடைசிக் காலத்தில் அளித்த பயங்கரச் சிகிச்சை அவளது மூளையைத் தாக்கியது. மூன்று மாத காலம் செண்பகம் சித்தப் பிரமை பிடித்தவள் போலக் கலங்கி நின்றாள்.

இரண்டாம் முறை கருவுற்றபோது அவள் மருத்துவ நிலையப் படிகளையே மிதிக்கவில்லை. அதுவும் பெண்தான். ஆனால் ஆறு மாதங்களுக்கெல்லாம் தேள் கொட்டி, விஷம் சிசுவைச் சில மணி நேரங்களில் விழுங்கிவிட்டது!

தவங் கிடந்து பெற்ற இரு குழந்தைகளைப் புதைத்துவிட்ட துக்கம் அவளுள் குமைந்தது. 'செண்பகம், நயினார் கோயில் சாமிக்கு வேண்டிக் கிடு. ஊமைப் பெண்ணைப் பேச

வைத்த கண்கண்ட தெய்வம். எல்லாச் சாதியினரும் வணங்கும் ஆண்டவன்' என்று ஊர்க் கிழவிகள் தேறுதல் கூறினர்.

தோன்றாத் துணையாக இருந்து அடியவருக்கு அருளும் இறைவன் மூன்றாவதை அளித்தான். வேண்டாப் பொருளாக இருந்தால்தான் தங்கும் என்று அந்த ஆண் குழந்தைக்கு 'வேம்பு' என்று செல்லப் பெயர் இட்டனர்.

சந்தர்ப்பம் கிடைத்தவுடன் குழந்தையுடன் நயினார்கோயில் சென்றனர் தம்பதி. முதல் நாள் மாலை குருக்களைச் சந்தித்தார் தேவநாதன். ''மூன்றாவதாக அரும்பிய அருமந்தப் பிள்ளை. கோயிலுக்கு 'விட்டு விடுவதாக' நேர்ந்துகொண்டிருக்கிறோம். நாளைக் காலை ஏலம் போட்டு எங்களுக்கு ஒப்படைத்துவிட வேண்டுகிறேன்'' என்றார்.

''அதற்கென்ன? உங்களுக்கு எவ்வளவு கோயிலுக்குக் கொடுக்க முடியுமோ, சொல்லுங்கள். அதற்கு மேல் விலை ஏற்றாமல் பார்த்துக் கொள்கிறோம்'' என்றார் குருக்கள்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. இருவரும் ஸ்நானம் செய்து சிசுவை முறத்தில் கிடத்திச் சுவாமி சந்நிதியில் வைத்துக் கோயிலுக்கு அளித்து விட்டனர். கோயில் சொத்துடன் ஏலம் விடப்பட்டது. விலை முப்பதை அடைந்தவுடன் கேள்வி நின்றுவிட்டது. பெற்றவர்கள் குறித்த தொகை அதுதான். அவர்கள் பணத்தைச் செலுத்திவிட்டு, அர்ச்சனை முடித்துக் குழவியுடன் ஊர் திரும்பினர்.

''இனிமேல் இவன் உன் உதிரத்தில் உதித்தவன் இல்லை. தெரியுமா?'' தேவநாதன் மெதுவாகச் செண்பகத்தின் வாயைக் கிண்டினார்.

''ஏலத்தில் எடுத்த சொத்தானால் பெற்ற மகன் என்கிற உறவு போய்விடுமா?''

''சொந்தம் கொண்டாட சுவீகாரப் புத்திரன்!''

''விவகாரம் எதுக்கு? ஆண்டவன் இதையாவது தீர்க்காயுசா வைத்திருக்க வேணும்.''

செண்பகத்தின் வேண்டுகோள் நிறைவேறியது. வேம்பு என்ற சுந்தரம் வளர்ந்து, படித்து, இன்ஜினியராக உருவெடுத்து விட்டான். 'அப்பா, இந்த ஆசிரியத் தொழிலை விட்டு விட்டு என்னுடன் வந்துவிடுங்களேன்' என்று அன்புடன் அழைத்தான். 'வேண்டாம் இத்தொழிலில்தான் நிம்மதியைக் காண்கிறேன்' என்று மறுத்து விட்டார் தந்தை.

சுந்தரத்துக்குப் பெண் கொடுக்கப் பலர் போட்டியிட்டனர். ஒன்றுவிட்ட மாமன் பெண்ணைத்தான் குறித்து வைத்திருந்தார்கள். ஏழைக் குடும்பமானாலும் அடக்க ஒடுக்கமான பெண் என்று.

இடையே சுந்தரம் வேலை செய்த காரியாலய அதிகாரி பெண் கொடுக்க முன் வந்தார். ''பின்பு குறையாகச் சொல்லக் கூடாது. என் மகளுக்குச் சமையற்கலை தெரியாது. ஒரே பெண்ணாகச் செல்லமாக வளர்ந்தவள். உங்கள் பையன் அந்தஸ்துக்கு அவள் சமைக்க அவசியம் இல்லை. ஆள் போட்டுக் கொள்ளலாம்'' என்று அப்பட்டமாகவே கூறி விட்டார் பணக்காரச் சம்பந்தி.

எடுப்பும் கவர்ச்சியும் நாகரிகமும் கலந்த மிடுக்கான கன்னிகை; நிறையச் சொத்து; சுகபோக வாழ்க்கை. செண்பகம் இசைந்து விட்டாள். ''அம்மா, இந்த இடம் நமக்கு ஒத்து வராது. நமது நிலைக்கு ஏற்ற இடமாக இன்னும் குடும்பத்துக்கு அடக்கமுள்ள பெண்ணாகப் பாரு'' என்று சுந்தரம் இழுத்தான். ''இருக்கட்டும், வேம்பு!-எங்கள்வரை வாழ்க்கை போராட்டமாகவே அமைந்துவிட்டது. உன் காலத்திலாவது குடும்பம் செல்வத்தில் தழைத்துப் பெருகினால் சந்தோஷம் தான். கல்யாணம் ஆனபிறகு மாறி விடுவாள். உனக்குக் கண்ணுக்குப் பிடித்திருந்தால் சரி'' என்றாள் அவள்.

நல்லதொரு நாளில் நாகஸ்வரம் ஒலிக்க, சுந்தரத்தின் கரத்தை மோகனா பற்றினாள்.

வேலையிலிருந்து ஓய்வு பெற்றதும் தேவநாதன் தம்பதி மகனிடம் வந்தபோது சலசலப்பு ஏற்பட்டது. உடன் அவனுக்கு வட இந்திய மாற்றல் ஏற்பட்டபோது, 'எங்களுக்கு அவ்வளவு தூரம் வரமுடியாது' என்று கிராமத்துக்குச் சென்று தங்கள் பழைய வீட்டிலேயே தங்கினர். ஆனால் மகனுக்கு இந்த ஊர் மாற்றம் சம்பந்தியின் ஏற்பாடு என்று தெரிய வந்தபோது இருவரும் மனம் நொந்து விட்டனர்.

''கிராமத்து வீடு சிதிலமடைந்து வருகிறது. ரிப்பேர் என்று கைவைத்தால் இரண்டாயிரம் ரூபாய் வரை இழுக்கும். ஆனால் கவனிக்காவிடில் ஒரேயடியாக விழுந்து விடும். நமது முன்னோர்கள் வீட்டை எப்படியும் புதுப்பித்துக் காப்பாற்றுவது நமது கடமை.

# ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க் பாலூட்டி...

நீங்கள் பெற்ற செல்வம்...அன்பு கனிந்த ஆதரவுக்கு அன்னை முகம் நோக்கும் ஆமுது...அருமையிலும் அருமையான ஆதரவெல்லாம் அவனுக்கே உரிமையாகும்...பொன்னான அவனது ஆரோக்கியத்திற்கு ...... ஆஸ்டர்மில்க். ஏனெனில், தாய்ப்பாலுக்கு நிகரான ஆஸ்டர்மில்க், சிறு குழந்தைகளுக்கென்றே தயாரிக்கப்பட்டுள்ள தூய பாலுணவாகும்.



பாப்பாவின் பசினம் ஜீரண சக்திக்கேற்றவாறு பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது ஆஸ்டர்மில்க். மேலும், இரத்தசோகை ஏற்படாமல் பாதுகாப்பதற்கான அதிகப்படி அயச்சத்தும், தவிர வைட்டமின் 'டி'யும் அதில் சேர்க்கப்பட்டுள்ளன.

**தாய்ப் பாலுக்கு நிகரானது**

இலவசம்! 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலத்தில்)..குழந்தைப் பராமரிப்பு நூல். 50 ந. பைசாவிற்குத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: ஆஸ்டர்மில்க், தபால் பெட்டி எண் 2420, சென்னை-2.

OS 6-50-M. TM

உன் அபிப்பிராயமும் அப்படியானால் பணம் அனுப்பவும்' என்று தகப்பனார் சுந்தரத்துக்கு எழுதினார்.

"போதுமே, உங்கள் பாழடைந்த கிராமத்து ஓட்டை வீட்டில் பணத்தைக் கொட்டுவானேன்! எங்கள் அப்பா பட்டணத்தில் 'பிளாட்' வாங்கியிருக்கிறார். அங்கேயே நாமும் வீடு கட்டிக் கொள்ளலாம்" என்று மோகனா அடித்துக் கூறிவிட்டாள். சுந்தரம் தகப்பனாருக்குப் பதிலே போடவில்லை.




ஆனால் நிதானமாக அதை மடித்து வைத்து உள்ளே சென்ற மகனை ஏமாற்றம் கலந்தோடக் கண்டு பெருமூச்சு விட்டாள், தாயார். என்ன ஈரமில்லாத நெஞ்சம்!

"பார்த்தீர்களா? அவன் ஒரு வார்த்தை அடித்துக் கேட்பான், ஆதரவாகப் பேசுவான் என்று எத்தனை ஆசையாக எதிர்பார்த்தேன்! பெற்ற வயிற்றிலே தீயை அள்ளிப் போடுகிறானே! வியாதி விழுங்கி விடுமோ என்றுஅஞ்சி அவன் நிழலை நாடி வந்தேன். நெருப்பாக ஆக்கிவிட்டானே! எனக்கு மருமகளை ஆள வேண்டுமென்ற எண்ணமா?" செண்பகம் பொருமினாள்.

'மகன் இப்படிப் பெண்டாட்டி தாசனாக மாறிவிட்டானே!' என்று பெற்ற மனம் அங்கலாய்த்தது.

சென்ற வருஷம் செண்பகத்துக்கு இருதய வலி கண்டது. அதோடு மயக்கமும், இரத்த அழுக்கமும் சேர்ந்து கொண்டன. வைத்தியர் மருந்துகளை வழங்கி ஓய்வு எடுத்துக்கொள்ளச் சொன்னார். தவிர இனி ஒருமுறை அந்த வலி வருமானால் 'ஹெமரேஜ்' ஏற்பட்டு உயிருக்கு ஆபத்து வரலாம் என எச்சரிக்கை செய்தார்.

செண்பகத்தம்மாளுக்கு மரண பயம் ஏற்பட்டு விட்டது. சாவுக்கு அவள் பயப்படவில்லை. ஆனால் மகன் அருகில் இருக்கையில் தனக்கு யமன் வர விரும்பினாள். தூர தேசம் என்று பாராமல் பிறந்த மண்ணை விட்டு அவர்கள் பிரயாணமானார்கள்.

அப்படி ஒன்றும் அவள் படுத்த படுக்கையாகி மருமகள் உழைப்பைக் கோரவில்லை. வேலைக்காரி வீட்டோடு இருந்தாள். மகனது அண்மையில் இருக்கிறோம் என்ற திருப்தியில் முகம் திரிந்து நோக்கும் மருமகளது அகந்தையையும், அலட்சியத்தையும் சகித்துக்கொண்டாள் செண்பகம்.

அந்நிலையில்தான் மோகனாவின் தகப்பனாரது கடிதம் வந்தது. அதன் அடக்கச் செய்தியோ அகத்தை ஒடுக்கியது.

செண்பகத்தம்மாள் மனத்தில் இவ்வளவு நினைவுகளும் ஓடி ஓய்ந்தன. தேவநாதன் தினப் பத்திரிகையில் ஆழ்ந்து விட்டார். ஈன்றெடுத்த மூன்றுவது சிசு, முத்துப் போல் காப்பாற்றிய தன் சொத்து, பெற்ற உரிமையை அர்ப்பணித்து ஆயுசு வழங்கப் பட்ட செல்வம், ஏலத்தில் எடுத்துக் காலன் கையிலிருந்து காப்பாற்றிய செல்லப்பிள்ளை — அவனோடு வாழ்வதற்கு உரிமை இல்லையா?

மாலையில் திரும்பிய மகன் கடிதத்தில் கண்ணோட்டம் விடுவதைச் செண்பகத்தம்மாள் கவனித்துக் கொண்டேயிருந்தாள். கண்கள் சிவக்கக் கடிதத்தைக் கசக்கி, மோகனாவை அழைத்து, 'உங்கப்பன் என்னை அடிமை என்று எண்ணியிருக்கிறாரா? பெற்றவர்களை விரட்டு என்று உபதேசம் செய்கிறவர் மனிதர் தானா?' என்றெல்லாம் அவன் மிகவும் ஆத்திரத்தோடு கேட்பான் என்று அளவற்ற நம்பிக்கையோடு இருந்தாள் செண்பகம்.

"நான்தான் கடிதம் வந்த போதே மூட்டை கட்டி விடு என்று சொல்லி விட்டேனே! நமது வளமிழந்த வீடும், வைகை மண்ணும் தாம் மதிப்புள்ளன" என்றார் தேவநாதன்.

"பெண்ணைக் கொடுத்து விட்டதால் என் மகனையே விலைக்கு வாங்கி விட்டார்களா? என் வயிற்றிலே உதித்த பிள்ளைதானா இவன்?" அடிவயிறு குலுங்க அழுதாள் தாயார்.

"உண்மையை மறந்து பேசுகிறாயே, செண்பகம்! அன்றைக்கு ஆயுசு வேண்டுமென்று ஆண்டவனுக்கு அர்ப்பணித்து ஏலத்திலே எப்பொழுது எடுத்தாயோ, அப்பொழுதே இவன் உன் மகனில்லை. அவன் 'இந்தப் பெண்ணை மணம் செய்துகொள்ளமாட்டேன்' என்றுதான் சொன்னான். ஆனால் நீதான் முறைப் பெண்ணை ஒதுக்கி அதிகப் பணம் வருமென்று பையனை மணச் சந்தையிலே 'ஏலம்' போட்டு விட்டாய். சொத்து வருகிறது என்று சொந்த முறைப் பெண்ணை ஒதுக்கினாய். ஏலம் போன பொருளிலே இவ்வளவு பாசம் கொண்டாடலாமா? கண்ணை விற்றுச் சித்திரம் வாங்கிவிட்டு இப்போது கதறினால்முடியுமா?"

செண்பகம் செயலற்று நின்றாள். உள்ளே மருமகள் குரல் கேட்டது.

"அவர்கள் கிராமத்தில் போய் இருக்கட்டும். மாதம் முப்பது ரூபாய் அனுப்பி விடுங்கள். அது போதாதா இருவருக்கும்?"

மூன்று பத்து ரூபாய்கள்!

செண்பகத்துக்கு நினைவு சிலிர்த்தது. நயினார் கோவில் சந்நிதியில் கிடந்த பச்சிளஞ் சிசுவின் அழுகை, ஏலக்குரல் — யாவும் அவள் காதுகளில் மீண்டும் ஒலித்தன. மகனைப் பெற அன்று கோயிலுக்கு அளித்த பணம் முப்பது! இன்று மகனை ஆட்கொண்ட மருமகள் தர விழைவதும் ரூபாய் முப்பது!! அன்று நாம் கொடுத்த முப்பது ரூபாயை ஆண்டவன் இப்படித் திருப்பித் தருகிறானோ?

"என் புத்தி பெண் புத்திதான். ஆனால் என்னால் இந்த ஊமை அடியைத் தாங்க முடியவில்லையே!"

செண்பகத்தம்மாள் மார்பிலே விரல்கள் அழுந்தின. இருதயத்தில் வலி கண்டு துடித்தாள் அவள்.





மாடல் 0374 :
6 வால்வ் . ஆல்-வேவ் - 4 பாண்ட்
பியானோ - கீ - ஸ்விட்ச்
ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)

யாராக இருந்தாலும் சரி....










உங்களுக்குப் பூரண
திருப்தி அளிப்பது

# மர்பி
# ரேடியோ



மாடல் 0322 :
6 வால்வ் . ஆல்-வேவ் . 3 பாண்ட்
ஏஸி அல்லது ஏஸி டிஸி (இரு மாடல்கள்)



மாடல் 266:

7-வால்வ், ஆல்-வேவ், 5-பாண்ட்
பியானோ-கீ-ஸ்விட்ச், ஏஸி



மாடல் 0724:
6-வால்வ்
ஆல்-வேவ்
8-பாண்ட், முழு
பாண்ட்ஸ்ப்ரெட்
ஏஸி அல்லது
ஏஸி/டிஸி
(இருமாடல்கள்)
மற்றும்
மாடல் 0737:
(டிரை பாட்டரி)
7-வால்வ்



மாடல் 0352:

5-வால்வ், ஆல்-வேவ், 3 பாண்ட்
ஏஸி அல்லது ஏஸி/டிஸி
(இரு மாடல்கள்)



மாடல் 0726:
7-வால்வ்
ஆல்-வேவ்
8 பாண்ட், முழு
பாண்ட்ஸ்ப்ரெட்
ஏஸி அல்லது
ஏஸி/டிஸி
(இருமாடல்கள்)



மாடல் 0298:
5-வால்வ், ஆல்-வேவ், 3-பாண்ட்
ஏஸி/டிஸி
மற்றும்
மாடல் 0299: (டிரை பாட்டரி)
4-வால்வ்



மாடல் 0752:
5-வால்வ்
ஆல்-வேவ்
3-பாண்ட்
ஏஸி அல்லது
ஏஸி/டிஸி
(இருமாடல்கள்)
மற்றும்
மாடல் 0751:
(டிரை பாட்டரி)
5-வால்வ்

**murphy radio**
delights
the home!

# பூவணத்துப் புனிதர்

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

அழகு அனுபவத்தைப் பற்றி எவ்வளவோ ஆய்ந்திருக்கிறார்கள் அறிஞர்கள்! பொதுவாக நாம் இயற்கைக் காட்சிகள், சித்திரங்கள், சிற்பங்கள் முதலியவற்றைப் பார்க்கும்போது அவை அழகாயிருக்கின்றன என்று எண்ணுகிறோம். அதனால் மகிழ்ச்சி அடைகிறோம். இதுதான் அழகு அனுபவம். இந்த அனுபவம் வெறும் கண்ணுக்கும் காதுக்கும் விருந்தளிப்பதோடு அமையாமல் உள்ளம் நிறைந்ததாகவும் இருக்குமானால் அதை வாயால் வர்ணிக்கவும் முடியாது, பாகுபடுத்திப் பார்க்கவும் முடியாது. ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் பரதநாட்டியம் பல வருஷங்களுக்கு முன் அமரர் ரஸிகமணி அவர்கள் வீட்டில் நடந்தது. நாங்கள் பலர் பார்த்துக் கொண்டிருந்தோம். எவ்வளவோ அனுபவங்களைப் பெற்றோம். ஆனால் பெற்ற அனுபவத்தைச் சொல்லத் தெரியாமல், சொல்ல முடியாமல் தவித்தோம். ஆனால் டி. கே. சி. அவர்கள் வீட்டு வேலைக்காரி நடனம் முடிந்ததும் 'அட! பாதகத்திமகள் எப்படி எல்லாம் ஆடுகிறாள்!' என்று சொல்லிக் கொண்டு மூக்கில் விரலை வைத்து நின்றுவிட்டாள். இதைப் பார்த்த டி. கே. சி. 'இதுவே கலை அனுபவம், அழகு அனுபவம்' என்றார்கள். இதே போல் ஓர் அனுபவம் பொன்னனையாள் என்ற கணிகைக்கு. பொன்னனையாள் சிறந்த பண்புகள் நிறைந்தவள்; நல்ல சிவபக்தை. வருகிற சிவனடியாரையெல்லாம் உபசரித்து உணவருந்துவதிலேயே அவள் செல்வம் எல்லாம் கரைகிறது. அவளுக்கு ஓர் ஆசை, சிவபெருமானை நல்ல பஞ்சலோகத்தில் ஒரு மூர்த்தியாக வடித்துப் பார்க்க வேண்டும் என்று. அதற்கு அவளிடம் பணம் இல்லை. அதற்காக வருந்துகிறாள். அவளது விருப்பத்தை நிறைவேற்றத் திருவுளம் கொண்ட சிவபெருமான், ஒரு சித்தர் வடிவிலே வருகிறார். அவள் விருப்பம் என்ன என்று கேட்கிறார். அதற்கு வேண்டிய பொருள் தன்னிடம் இல்லையே என்றதும், 'பரவாயில்லை, வீட்டில் கிடக்கிற இரும்பு, செம்பு, ஈயம், பித்தளை எல்லாவற்றையும் சேகரித்துக் கொண்டு வா' என்கிறார். அத்தனையையும் அன்றிரவே புடம்போட்டுத் தமது ரஸவாதத் திறமையினால் எல்லாவற்றையும் நல்ல உலோகமாக்கிக் கொடுக்கிறார்; வந்த சித்தர் மறைந்துவிடுகிறார் பின்பு. கிடைத்த உலோகத்தால் பொன்னனையாள் தேர்ந்த சிற்பிகளைக் கொண்டு இறைவனது திருவுருவை வடிக்கச் சொல்கிறாள். அப்படிச் சிற்பி வடித்த படிமமும் மிக்க அழகுடையதாக அமைந்து விடுகிறது. அந்த அழகைக் கண்டு ஆனந்திக்கிறாள். அப்படியே அந்த அழகிய பிரானது கன்னத்தைத் திருகி முத்தமிட்டுத் தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கிறாள். இப்படி அழகை அனுபவித்த பொன்னனையாளைப் பரஞ்சோதியார்,

> மழவிடை உடையான் மேனி
> வனப்பினை நோக்கி அச்சோ!
> அழகிய பிரானோ என்னா
> அள்ளிமுத்தங் கொண்டு அன்பில்
> பழகிய பரனை யானும்
> பரிவினால் பதிட்டை செய்து
> விழவு,தேர் நடத்திச் சின்னாள்
> கழிந்தபின் வீடு பெற்றாள்.

என்று நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறார். அப்படிக் கன்னம் கிள்ளிக் கொஞ்சியதால் ஏற்பட்ட வடுவுடனேயே இறைவன் இன்னும் அந்தக் கோலத்தில் இருந்து கொண்டிருக்கிறான். அப்படிப் பொன்னனையாளால் உருப்பெற்று, நகக் குறியும் பெற்ற இறைவன் இருக்கும் தலம்தான் திருப்பூவணம். அந்தத் திருப்பூவணத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.



மின்னனையாள்

திருப்பூவணம், மதுரையிலிருந்து மானாமதுரை செல்லும் பாதையில் மதுரைக்குக் கிழக்கே பன்னிரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. சிறிய ஊர்தான். மதுரை மானாமதுரை லயனில் சென்றும் திருப்பூவணம் ஸ்டேஷனில் இறங்கிச் செல்லலாம். மெயின் ரோட்டுக்கு வடபுறம் ஒரு பர்லாங்கு தூரத்தில் கோயில் இருக்கிறது. கோயில் நிரம்பப் பெரிய கோயிலும் அல்ல, சிறிய கோயிலும் அல்ல. இறைவன் பெயர் பூவணநாதர், இறைவி பெயர் மின்னனையாள். கோயிலுக்கு வடபுறம் வைகை நதி ஓடுகிறது. பாண்டிய மன்னரோடு,

சோழ மன்னரும் சேரரும் வந்து வணங்கிய பெருமை உடையவர் பூவணநாதர். இதை ஞானசம்பந்தர் பாடுகிறார்.

அறையார் புனலும் மாமலரும்
ஆடு அரவார் சடைமேல்

குறையார் மதியம் சூடி
மாதுஓர் கூறுடையான் இடமாம்

முறையால் முடிசேர் தென்னர்,
சேரர்,சோழர்கள் தாம் வணங்கும்

இறையார் ஒளிசேர் செம்மை
ஓங்கும் தென் திருப்பூவணமே.

என்பது அவரது தேவாரம். தமிழ் மன்னர் மூவர் மாத்திரம் அல்ல, தேவர் மூவரில் ஒருவனான பிரமனும் வந்து பூஜித்துப் பேறு பெற்றிருக்கிறான் என்று வரலாறு கூறும்.

இத்தலத்தில் மின்னனையாளையும் மிஞ்சிய புகழ் உடையவள் பொன்னனையாள் என்று கண்டோம். "மின்னனையாள் திருமேனி விளங்க ஓர் தன்னமர் பாகமதாகிய சங்கரன்" என்று பாட ஆரம்பித்த சுந்தரரும்,

முன்றிலையார் புரம்மூன்று எரியூட்டிய
பொன்னனையாள் உறைபூவணம் ஈதோ

என்றுதானே முடித்திருக்கிறார்? பொன்னனையாள் உருவாக்கிய பூவணநாதர் பொன்னனையான் என்ற பெயரோடே விளங்குகிறார். உத்சவமூர்த்தி நல்ல அழகான வடிவம், கன்னத்தைக் கிள்ளி முத்தமிட்ட தழும்பு, வடிவத்தில் இருக்கிறது. வடிவத்தைக் கண்டால் நமக்கும் கூடக் கன்னத்தைக் கிள்ளலாமா என்று தோன்றும். அர்ச்சகர்கள் அனுமதிக்க மாட்டார்களே என்பதனால்தான் கை நீட்டாது வருவோம். பொன்னனையாள் திருவுருவும் செப்புச்சிலையில் கோயிலில் இருக்கிறது. மின்னனையாள் வடிவமும் அழகானதே. சிவபெருமான் பொன்னனையாளுக்காக ரஸவாதியாக வந்த திருவிளையாடலை,

விரிநீர்ச் செம்
போதத் திரு உருவாம்
பொன்னனையாட்கு இந்த

வாதத் திரு உருவாய்
வந்துதித்தோன்

என்று திருப்பூவணநாதர் உலா போற்றுகிறது. கோயிலுக்கு வடபுறம் பொன்னனையாள் மண்டபம் என்று ஒரு கட்டிடம் இருக்கிறது. அது இப்போது இடிந்து பாழடைந்து கிடக்கிறது. அங்குள்ள தூண் ஒன்றில் பொன்னனையாளின் சிலா உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது.

அக்கோயில் வாயிலில் உள்ள நந்தி சிறிது சாய்ந்திருக்கிறது. ஞானசம்பந்தர் இத்தலத்துக்கு வந்தபோது இங்குள்ள மணலெல்லாம் சிவலிங்கமாகக் காட்சி அளித்திருக்கிறது. ஆதலால் அவர் அக்கரையிலே நின்று பாடியிருக்கிறார். அவரைப் பார்க்க இறைவன்



பூவணத்துப் புனிதர்

விரும்பினரோ, இல்லை அவர் தம்மைப் பார்க்க வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று விரும்பினரோ? இறைவன் நந்தியைக் கொஞ்சம் சாய்ந்து கொள்ளச் சொல்லி யிருக்கிறார். இன்னும் சம்பந்தரிடம் வாதில் தோற்ற சமணர்களெல்லாம் கழு ஏறிய இடம் இப்பூவணம்தான் என்பர். அதைக் குறிக்கக் கழுவர் படைவீடு என்று ஓர் இடம் உண்டு என்றும் கூறுவர்.

இத்தலத்துக்குச் சம்பந்தர், சுந்தரர் மாத்திரம் வந்தார் என்றில்லை. அப்பருமே வந்திருக்கிறார். அற்புதமாகத் திருத்தாண்டகம் பாடி யிருக்கிறார்.

மயலாகும் தன்னடியார்களுக்கு
அருளும் தோன்றும், மாசிலாப்
புன்சடைமேல் மதியம் தோன்றும்,

இயல்பாக இடுபிச்சை ஏற்றல்
தோன்றும், இருங்கடல் நஞ்சுண்டு
இருண்ட கண்டம் தோன்றும்,

கயல்பாய கடுங்கல் உழிக்
கங்கை நங்கை ஆயிரமாம்
முகத்தினேடு வானில் தோன்றும்,

புயல்பாய சடை விரித்த
பொற்புத் தோன்றும் பொழில்
திகழும் பூவணத்தெம்
புனிதனர்க்கே

என்ற பாடல் மிக்க சுவையுடைய பாடல் மட்டும் அல்ல; இறைவனது திருக்கோலங்களை யெல்லாம் விளக்கும் பாடலும் ஆயிற்றே.

இக்கோயிலில் பாண்டிய மன்னர்களில், கோநேரின்மை கொண்டான், பராக்கிரம பாண்டிய தேவர் முதலியவர்களின் காலத்தில் செதுக்கப்பட்ட கல்வெட்டுகள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருப்பூவண முடைய நாயனர் என்று குறிக்கப் பெற்றிருக்கிறார்.

இந்த வட்டாரத்தில் இக் கோயிலைத் தவிர வேறு குறிப்பிடத்தகுந்த கோயில்கள் இல்லை. அறுபத்துநாலு திருவிளையாடலில் ஒன்றான ரஸவாதம் நடத்திய இடத்தையும் பார்த்தோம். 63 நாயன்மாரில் ஒருவரான இளையான்குடி மாறனையும் பார்க்க வேண்டாமா? அவர் சரித்திரம் பிரபலமானதாயிற்றே. தமிழரின் விருந்தோம்பல் பண்பாட்டுக்குச் சிறந்த இலக்கியமாக விளங்குகிறவர் ஆயிற்றே. அவர் பிறந்து வளர்ந்த பதி திருப்பூவணத்துக்குத் தென் கிழக்கே முப்பது மைல் தூரத்தில் இருக்கிறது. திருப்பூவணத்திலிருந்து மானாமதுரை வந்து அங்கிருந்து தெற்கு நோக்கிப் பார்த்திபனூர் வழியாய், பரமக்குடி செல்ல வேண்டும். பரமக்குடிக்கு நேர் வடக்கே ஐந்து ஆறு மைல் தொலைவில் இளையான்குடி இருக்கிறது. காரிலேயே செல்லலாம் ஊர் வரை. ஊர் சின்னஞ் சிறிய ஊர். இங்கு ஒரு சிறு கோயில் இருக்கிறது. அத்தலத்தில் உள்ள மஞ்சப்புத்தூர் செட்டிமார்கள் என்னும் ஆயிர வைசியர் இளையான்குடி மாறரைத் தங்கள் இனத்தவர் என்று உறவு கொண்டாடுகிறார்கள். இளையான்குடிமாறர் அவர் மனைவி ஆகிய இருவரது செப்புப் படிமங்களையும் செய்து வைத்திருக்கிறார்கள். இளையான்குடி மாறர் சரித்திரம் தெரிந்ததுதானே. வருகின்ற சிவனடியாரை யெல்லாம் அழைத்து விருந்தருந்த வைக்கும் இயல்புடையவர் அவர். வறுமையால் வாடுகிறார். இந்த நிலையில் ஒரு நாள் இரவில் அகாலத்தில் இறைவனே அடியவர் வேடத்தில் வருகிறார். வீட்டிலோ பிடி அரிசி இல்லை. அதற்காக மாறர் சோர்ந்து விடவில்லை. அன்று விதைத்த நெல்லை வயலிலிருந்து சேகரித்து வந்து கொடுக்கிறார். அதனை வறுத்து, உலர்த்தி, அரிசியாக்கிச் சமைக்கிறாள் அவர் மனைவியார். விறகு இல்லையென்றால் கூரையையே பிய்த்து எடுத்துத் தீமூட்டுகிறாள். தம்பதியர் இருவரது இந்த விருந்தோம்பல் பணியை உலகுக்கு அறிவித்து அவர்களை ஆட்கொள்கிறார் இறைவன். தமிழ் மக்கள் எல்லாம் பின்பற்றி நடக்க வேண்டிய வாழ்க்கை வரலாறாயிற்றே இவரது வாழ்க்கை! அந்த மாறரையும் மனைவியையும் கண்டு தரிசிக்காமல் இருக்கலாமா என்றுதான் இத்தனை தூரம் உங்களைக் கொஞ்சம் இழுத்தடித்துவிட்டேன்.

இப்படி வந்த இடத்திலே ஒரு பழைய பெருமாள் கோயிலையும் பார்த்து விடலாம். அங்கே வேணுகோபாலர் கோயில் கொண்டிருக்கிறார். இந்தப் பெருமான் பெயர் மிக மிக நீளம். ருக்மிணி சத்யபாமா சமேத நின்று குழலூதும் விண்ணகரத்து எம் பெருமான் என்பர். இருக்கை அமர்ந்தும் திருநாராயணன், நெடிய கரிய மாணிக்க மரகத மதன வேணுகோபாலப் பெருமாள் என்று சொல்லி விட்டாலே, பெருமாளின் திருவடிவம் முழுதும் நம் கண்முன் வருமே. இளையான்குடி மாறரைக் காணவந்த இடத்தில் பெருமாள் தரிசனமும் கிடைக்கிறதென்றால் அதை விட்டு வைக்கவா வேணும்!

# பாசமலர்

காந்தன்

ராஜுவுக்குத் தன் தங்கை ராதாவின் மேல் உயிர்; ராதாவுக்குத் தன் அண்ணன் மீது உயிர். தங்கையின் வாழ்வே தன் வாழ்வு என நினைத்துக் கொண்டிருந்த ராஜு அந்தத் தங்கைக்காகவே தன் சொத்து சுகம் யாவையும் துறந்து வீட்டை விட்டு ஓடி, மீண்டும் தங்கையைக் காண வந்து அது நிறைவேறாமல் கண்களையும் இழந்து துடிக்கிறான். கடைசியில் மரணம் இருவரையும் ஒன்று சேர்த்து வைக்கிறது.

ஓர் ஆண்மகன் காதல் வாடையையே காட்டாமல் உடன்பிறந்த சகோதர பாசத்தை மட்டுமே காட்டிப் பழகவும், உடன் பிறந்தவளுக்காக அழவும், அவளுக்காகச் சிரிக்கவும், அவளுக்காகவே ஒருத்தியை மணக்கவும், அவளுக்காகச் சொத்து முழுவதையும் இழக்கவும் கடைசியில் அவளைக் கண்டு அதே ஆனந்தத்தில் உயிரையே துறக்கவும் வேண்டுமானால் அந்த உயர்ந்த பாத்திரத்துக்கு உயிர்த் துடிப்பைக் கொடுக்கச் சிவாஜி கணேசனால்தான் முடியும். ராஜுவாக வரும் சிவாஜி கணேசன் 'பாசமல'ருக்கு மணம் சேர்க்கிறார்.

ராஜுவின் தங்கை ராதாவாக, சாவித்திரி வருகிறார். மிகவும் பொருத்தமாக இருக்கிறது, அண்ணனோடு அன்பாகப் பேசிப் பழகுகிற கட்டங்களில் சக்கைப்போடு போட்டு விட்டார். அண்ணனின் பாசமும், கட்டிய கணவனின் நேசமும், புக்ககத்துப் பேர்களின் மோசமும் ராதாவை அலைக்கழிக்கும்போது சாவித்திரியின் துயர நடிப்பு நம் நெஞ்சை நெகிழ்த்தி விடுகிறது. சாவித்திரியின் கரம் பற்றுகிறவர் ஜெமினி கணேசன்! கணேசனும் கணேசனும் சகதொழிலாளிகளாக இழையும் போதும் நண்பர்களாகக் குழையும்போதும், விரோத பாவத்துடன் மோதிக்கொள்ளும் போதும் மிகவும் நன்றாக நடித்திருக்கின்றனர்.

ஜெமினி கணேசன் வேலையிலிருந்து தள்ளப்பட்ட தொழிலாளர்களுடன் சிவாஜி கணேசனை ஆபீஸில் சந்தித்து நீதி கோரும் கட்டம் மிகவும் நன்றாக இருக்கிறது. இருவரும் சளைக்காமல் நடித்திருக்கின்றனர் என்றாலும் சிவாஜி ஒரு மாற்று கூடவே செய்திருக்கிறார் என்று தான் சொல்ல வேணும்.

காதலனைச் சந்தித்துவிட்டு நேரங் கழித்து வீட்டுக்கு வந்த ராதாவை ராஜு கடுமையான குரலில், "எத்தனை நாட்களாக இம்மாதிரி நடக்கிறது?" என்று கேட்கிறான். ராதா நடுங்குகிறாள். கடைசியில் "'டிரைவிங்' சரியாகக் கற்றுக் கொள்ளாமல் காரை எடுத்துக் கொண்டு தனியாகப் போகலாமா?" என்று கேட்கிறான். அந்த இடத்தில் சிவாஜி, சாவித்திரி இருவருமே சிறப்பாக நடிக்கின்றனர்.

ராதா தோட்டத்தில் காதலனோடு பேசிக்கொண்டிருப்பதை வேலைக்காரன் மூலம் அறிந்து கைத்துப்பாக்கியுடன் வேங்கைபோல் பாய்ந்து செல்கிறான் ராஜு. அங்கு ராதா தன்னிடம் கொண்டிருக்கும் மாசற்ற அன்பையும் அளவற்ற நம்பிக்கையையும் அவள்வாய்மூலமாகவே அறிந்து கொள்ளுகிறான். துப்பாக்கிக்கு வேலையில்லாமல் போகிறது. இது ஒரு நல்ல கட்டம்.

பெண் பார்க்க வரனை அழைத்து வருகிறான் ராஜு. ராதா நிமிர்ந்து பாராமலே அவனை வணங்குகிறாள். பிறகுதான் வந்தவன் தன் காதலனே என்று அவளுக்குத் தெரிகிறது. கடும் பகையையும் மறந்து ராஜு தன் தங்கை விரும்பிய வாலிபனுக்கே அவளைக் கொடுக்கிறான். இந்த இடம் ராதாவை மட்டுமென்ன? பார்ப்பவர்கள் எல்லோரையும் மெய்சிலிர்க்க வைக்கிறது. கடைசிக் காட்சியில் தன் தங்கை ராதாவைக் கண்டதும் ராஜு, "ராதா, நாம் குழந்தைகளாகவே இருந்திருந்தால் இந்தப் பிரிவே நேர்ந்திருக்காதே! அம்மா இறந்த போது நீ ஒரு வயதுக் குழந்தை. எனக்கும் பத்து வயது. உன்னை மடியில் போட்டுக் கொண்டு 'கைவீசம்மா கைவீசு' என்று பாடுவேனே" என்று குமுறி யழும்போது யாருக்குத்தான் கண் கலங்கவில்லை!

எம். என். ராஜம் ராஜுவின் கரம் பற்றுகிறார். குழந்தை பிறந்த பின்பு ராஜுவே அவரை மேல்நாடு அனுப்புகிறான். கடைசிக் காட்சியில், ராஜு இறந்த பிறகு அழுவதற்குச் சரியாக வந்து சேருகிறார்.

எம். என். நம்பியார் எம். என். ராஜத்துக்கு அண்ணனாக வருகிறார். சாதுவான பாத்திரத்தில் பரமசாதுவாகநடித்திருக்கிறார். அதிக வாய்ப்பு இல்லை. தங்கவேலுவின் உண்ணாவிரத ஹாஸ்யம் சிறிது அதிகப்படியாகத் தோன்றினாலும் ரசிக்கத் தக்கதாக இருக்கிறது. ஆரூர்தாஸின் வசனம் அழகாயிருக்கிறது. பாடல்கள் நன்றாயிருக்கின்றன.

நாட்டியம் இல்லாத படத்தைப் பாட்டியும் பார்க்க மாட்டாள்! அதற்காக அதுவே அளவை மீறிவிடலாமோ ....! "பாசமல"ரில் நடனக் காட்சி அடிக்கடி வந்து முட்டுக் கட்டை போடுகிறது.

தீபாவளி வாண விபத்தில் ராஜுவின் கண்கள் ஊனமடைகின்றன என்பது உருக்கமாயிருந்தாலும் "விடிவெள்ளி"யிலும், "பாவ மன்னிப்பி"லும் அதேமாதிரி விபத்துக் காட்சிகள் வந்திருப்பதால் இன்னும் கொஞ்ச காலத்துக்குத் திரையில் மேற்படி விபத்துக்கள் நிகழாமல் இருப்பது நலம்தானே! என்னவானாலும் "பாச மலர்" ஒரு வாச மலர்தான்.






தேர்ந்த ரசிகருக்கென விசேஷ
மாகப் பல ரகங்களைக் கலந்த
தூய இந்தியக் காப்பி
அல்லது இதிலிருந்து
மாறுதலை விரும்பு
வோருக்கு
பிரெஞ்சுக் காப்பி



Stanes

**PURE INDIAN COFFEE**

**STANES FRENCH.**

THE UNITED COFFEE SUPPLY COMPANY LIMITED, COIMBATORE.



வத்திருயிருப்பு கல்கி ஏஜெண்ட் திரு எஸ். என். எஸ். மணி அவர்கள் மருமாள் சௌ. லலிதா திரு சங்கர நாராயணனை மணந்து கொண்டார்.



கமாரியா ஆர்டினன்ஸ் தொழிற்சாலையைச் சேர்ந்த திரு கே. என். கிருஷ்ணமூர்த்திக்கும் சௌ. சரஸ்வதிக்கும் விவாகம் நடைபெற்றது.



மைசூர் பெர்டிலைசர் கம்பெனி மானேஜிங் பார்ட்னர் திரு வி. வேணுகோபாலின் புதல்வர் திரு மோகன் ராவ் நிர்மலாவை மணந்தார்.



சைதாப்பேட்டை அட்வகேட் திரு எஸ். சாமிக்கண்ணுவுக்கும் சௌ. சரஸ்வதிக்கும் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.



சென்னை உற்பத்தித் திறன் குழுவின் நிர்வாகக் காரியதரிசி திரு ஏ. வி. சீனிவாசன் அவர்களின் புதல்வி சௌ. பத்மாவதி திரு வாசுதேவனை மணந்து கொண்டார்.



திருவனந்தபுரம் ஸ்வாதித் திருநாள் சங்கீத கலாசாலையைச் சேர்ந்த திரு சீதாராமய்யரின் புதல்வி சௌ. லக்ஷ்மி திரு பரமேசுவரனை மணம் புரிந்து கொண்டார்.



# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

9

மனித வர்க்கத்தை மூன்று வகையாகப் பிரித்துச் சொல்லுகிருர்கள் நம்முடைய முன்னேர்கள்.

மூவகைப்பட்ட மனிதர்களுக்கு மூன்று விதமாக வந்து அருள் தருகிருன் இறைவன்! அந்தந்தப் பக்குவத்துக்கு ஏற்றவாறு ஞானத்தை வழங்குகிறது இறைவன் திருவருள்.

சாதாரண நிலையிலுள்ள சாமானிய மக்களைச் 'சகலர்' என்பார்கள். ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று அழுக்குகள் தோய்ந்த நிலை அது. இந்தச் 'சகல நிலை'யிலேயுள்ள பக்தர்களுக்கு இறைவன் மனித வடிவிலே குருவாக வந்து தோன்றி ஞானத்தை உபதேசம் செய்கிருன். அதாவது சாதாரண மக்களின் மாசுகளைப் போக்குவதற்காக அவதரிக்கிற ஆசாரியர்கள் எல்லாம் இறைவனுடைய சொரூபமே.

இரண்டாவது பக்குவ நிலையிலே சற்று மேம்பட்டு நிற்கும் மக்கள் மாயை என்ற அழுக்கு நீங்கப் பெற்று, ஆணவம் கன்மம் என்ற இரண்டு மாசுகளால் மட்டுமே தடைபடுகிருர்கள். இவர்கள் ஒரு படி மேலே நிற்பவர்கள். இவர்களுக்கு இறைவன் ஒரு மூர்த்தியாக, வழிபடும் உருவமாக நின்று அந்த வழிபாட்டினுலேயே ஞானம் தோன்றச் செய்து அவர்களைக் கடைத்தேற்றுகிருன்.

மூன்ருவதும் இன்னும் மேம்பட்டதுமான நிலையிலே இருப்பவர்கள், கன்மம் மாயை என்ற இரண்டு மாசுகளும் களையப் பெற்று, ஆணவம் என்ற ஓர் அழுக்கு மட்டுமே எஞ்சி நிற்பவர்கள். மாயை தெளிந்து, கன்மத்தில் சிக்காமல் நிற்கும் பக்குவம் அடைந்தவர்களுக்கு இறைவன் அருவமாக உள்ளத்திலுள்ளே ஞான மயமாக நின்று, ஆணவக் களிம்பையும் நீக்கித் திருவருள் புரிகிருன்.

மூன்று நிலைகளிலுமே இறைவனுடைய கருணையின் துணைகொண்டே 'களிம்பு' நீங்குகிறது. இதைப் பாடுகிருர் மூனிவர்.

**களிம்பறுத் தான் எங்கள்**
**கண்ணுதல் நந்தி**

[களிம்பு அறுத்தான் — அழுக்கைக் களைந்தான். கண்ணுதல் — கண் நுதல், நெற்றியில் கண்ணையுடையவன். நுதல் — நெற்றி. எங்கள் கண்ணுதல் நந்தி — எங்கள் நெற்றிக் கண்ணனுகிய நந்தியெனும் சிவபெருமான். 'கண்ணுதல் நந்தி' என்பது இரு பெயர் ஒட்டு. கண்ணுதலும் நந்தியுமாகிய சிவபெருமான் என்று பொருள்.]

செம்பிலுள்ள களிம்புபோலே உயிரின் அறிவை மறைத்திருக்கும் அழுக்கை எங்கள் நந்தியாகிய நெற்றிக் கண் ஈசன் நீக்கியருளினுன். எங்ஙனம் நீக்கினுன்?

**களிம்பறுத் தான்அருட்**
**கண்விழிப் பித்து**

[அருட்கண் — ஞானக் கண்ணை. இவ்விடம் அருள் என்ருல் ஈசன் அருளால் தோன்றிய ஞானம். விழிப்பித்து — திறக்கச் செய்து]

அகக்கண்ணை விழிக்கச் செய்து உயிரின் இருளை நீக்கினுன்.

**களிம்பணு காத**
**கதிரொளி காட்டி**

[களிம்பு அணுகாத—அழுக்கு வந்து பற்றிக்கொள்ள முடியாதபடி, கதிரொளி காட்டி — சூரிய ஒளி போன்ற தான ஞானச்சுடரை ஏற்றிக் காட்டி.]

நீங்கிய இருட்டு மீண்டும் வராதபடி ஞான வழியைத் திறக்கச் செய்து, நந்தா விளக்கு அதாவது அணையாமல்

எரிகிற சுடரை ஏற்றிக் காட்டினான் இறைவன்! அந்த ஒளி நிலைபெற்று விட்டது. எப்படி?

பளிங்கில் பவளம்
பதித்தான் பதியே

[பதி—இறைவன். பதியாகிய இறைவன், பளிங்காகிய ஆன்மாவிலே செவ்வொளியை நிலைபெறச் செய்து, பவளத்தைப் பளிங்கிலே பதிப்பதுபோலப் பதித்து வைத்து விட்டான்.]

உயிர் பளிங்கு போன்றது. அது ஒரு கண்ணாடி. இந்தக் கண்ணாடியில் அழுக்கு படிந்திருந்தது. அந்த அழுக்கைத் துடைத்து, இனி அந்தக் கண்ணாடியில் ஞான ஒளி பிரதிபலிக்கும்படி ஞான விளக்கை ஏற்றிவைத்து, இந்த உடம்பாகிய வீட்டிலே அஞ்ஞான இருள் வராதபடி வாடா விளக்கு எரியும் வண்ணம் அருள் செய்தான் இறைவன்!

எண்ணெய்த் திரியினாலான சுடர் தீர்ந்துவிடக் கூடியது. இறைவனோ பவளம்போல் வாடாத செவ்வொளியை உயிர்க் கண்ணாடியிலே பதித்துவைத்துவிட்டான். இது அவன் அருள் என்று பாடுகிறார் திருமூலர்.

களிம்பறுத் தான்எங்கள்
கண்ணுதல் நந்தி;
களிம்பறுத் தான்,அருட்
கண்விழிப் பித்து.
களிம்பணு காத
கதிரொளி காட்டிப்
பளிங்கில் பவளம்
பதித்தான் பதியே!

சாதாரண நிலையிலேயுள்ள மக்களுக்கு ஒரு குருவின் வடிவாக ஈசன் எழுந்தருளி வந்து பிரம்மோபதேசம் செய்கிறான். ஆணவ, கன்ம நிலையிலே நிற்போருக்கு மூர்த்தியவதாரத்தில் தரிசனம் தந்து வழிபாட்டின் பயனாக ஞானத்தைத் தருகிறான். ஞான உணர்வு நிலையிலே நிற்கும் பக்குவ ஆன்மாக்களுக்கு ஈசன் உள்ளத்தினுள்ளே அருவமாக இருந்து நந்தாவிளக்காக ஞான தீபத்தை ஏற்றி வைக்கிறான்.

இந்த மூன்று நிலைகளும் ஆன்மாவின் பக்குவப் படிகள். முன்னேறிய போதும் நிலைகுலையக்கூடும். அப்போது மறுபடியும் தாழ்ந்த நிலைக்குத் தக்கவாறு இறைவன் அருள்வான். மேல் நிலை அடைந்த பின்னரும் அந்நிலையைக் காப்பாற்றிக் கொள்ள இறைவன் அருளைப் பெற வழிபட வேண்டும்.

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்

**பனித்துளியின் புதுமையையும், காலை ஸ்நானத்தின் சுகத்தையும் நாள் முழுவதும் அளிக்கும்!**




புத்துணர்ச்சியும், இதமும் அளிக்கும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர்-டால்கம் பவுடரை உங்கள் உடம்பின் மேல் தூவிக்கொள்ளுங்கள். அது வியர்வையை சீக்கிரத்தில் உறிஞ்சி, மிக உஷ்ணகாலத்திலும்கூட ஸ்நானத்திற்குப்பின் உண்டாகும் புத்துணர்ச்சியை நாள்முழுவதும் நிலைக்கச் செய்யும். எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் விளங்க பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்*

**(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். ஏ.யில் இணைக்கப்பெற்றது)**

# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் பத்து

"என்ன சந்திரா!..." அவ்வளவு அகலச் சாலையில் தன் காலருகில் வந்து நின்ற அவள் குறும்பை நினைத்ததும் அவருக்குத் தைரியமும் நம்பிக்கையும் வந்தன. அப்படி ஒடிந்து போய்விடவில்லை அவள் என்று ஓர் ஆறுதல், குழம்பிக் கொண்டிருந்த அவர் மனசைச் சற்று இலேசாக்கிற்று.

"வெளியே கிளம்பிவிட்டாயா?"

"ஆமாம். நீங்கள் வருவீர்கள் என்று காத்திருந்தேன். போதிஸத்வர் அடுத்த அவதாரம் எடுக்கும்வரையில் காத்திருக்க வேண்டுமோ என்று பயமாகப் போய்விட்டது. அதனால் கிளம்பிவிட்டேன்....என்னை இருக்கச் சொன்னீர்களாம். அம்மா சொன்னாள். இரண்டரை வரையில் பார்த்தேன். வரவில்லை. மாமா இருந்தாலாவது அரட்டையடிக்கலாம், அவரும் சாப்பிட்டு விட்டு உடனே எங்கோ போய்விட்டார்."

"மாமா வந்தாச்சா?"

"காலமே வந்தார். காற்றிலே வந்தார் கல்கத்தாவிலேயிருந்து. இப்போது வெளியில் பறக்கிறார்."

"நீ மட்டும் என்ன செய்கிறாய் இப்போது? நானும் உங்கள் மாமாவும் தான் தெருத் தெருவாக, ஊர் ஊராக அலைகிறோம் என்று நினைத்தேன்! உன் காலிலும் சக்கரத்தைக் கட்டிவிட்டான் பகவான். எல்லாம் சரியாகி விடும். கவலைப்படாதே!"

அதைக் கேட்டதும் அவள் முகம் மாறிவிட்டது. சைக்கிள் கைப்பிடிகளை இரு கைகளும் இறுக்கிப் பிடிப்பது தெரிந்தது. பேசாமல் நின்றாள். உதட்டின் ஓர் ஓரம் மட்டும் வெறுப்பாக ஒரு புன்னகை பூத்தது.

"எனக்கு ஒரு கவலையுமில்லையே! நான் ஏன் கவலைப்பட வேண்டும்?"

"சும்மா வார்த்தைக்காகச் சொல்கிறாயா? இல்லை, நிஜமாகவே அப்படிச் சொல்கிறாயா?"

சந்திராவுக்கு உடனே இதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. மௌனமாக நின்றாள். ஆனால் அனந்தசாமி பதிலை எதிர்பார்ப்பது போலிருந்தது.

"இப்ப வரதே இல்லையாமே அவன்?" என்றார் அவர்.

"யாரு?"

"ரங்கன்?"

"அவரா.... ஆமாம். வரக் காணோம்."

"ஏன்?"

"ஆண் பிள்ளைகள் ஏமாற்றி விடுவார்கள், நம்பச் செய்து மோசம் செய்து விடுவார்கள் என்று நான் சொல்ல மாட்டேன் மாமா. அப்படிப் பார்க்கப் போனால் பெண்கள் ஆண்களைவிட இதில் கெட்டிக்காரர்கள். மோசம் செய்து கொண்டேயிருப்பார்கள், செய்வதாகக் காண்பித்துக் கொள்ளவும் மாட்டார்கள். ஆண்பிள்ளைகள் அந்த விஷயத்தில் எவ்வளவோ தேவலை."

அந்த இரக்கத்துக்கிடையே அனந்தசாமிக்குச் சிரிப்பு வந்தது, அவள் சொல்வதைக் கேட்டு.

"காலேஜில் படித்த ஒரு பெண்ணா இப்படிப் பேசுகிறாள்? ஆச்சரியமாயிருக்கிறதே!"

"காலேஜிலே படித்ததனால்தான் மாமா இதைச் சொல்கிறேன். வீட்



தி. ஜானகிராமன்

டோடு கிடந்திருந்தால் இதெல்லாம் எங்கே தெரியப் போகிறது!''

அனந்தசாமி இன்னும் வியப்பு அடங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

''யாரும் துரோகம் செய்ய முடியும் என்று நான் நினைக்கவில்லை. அசட்டுத்தனம், அவ்வளவுதான். அசட்டுத்தனம் தான் இப்படிக் காரியங்களைச் செய்யத் தூண்டுகிறது.''

''அப்படியானால் இந்த ரங்கன் வெறும் அசடு என்றுதானே சொல்கிறாய் ...?''

''இல்லாவிட்டால் எப்படி ஆற்றிக் கொள்ள முடியும்? அவர்கள் சாமர்த்தியமாக நம்மை ஏமாற்றி விட்டதாக நினைக்கலாம். நம் வயிறும் எரியலாம். மனசு, ஆத்மா எல்லாம் கிடந்து பரக்கலாம். ஆனால் இப்படிச் சொல்வது ஒரு சாமர்த்தியத்தில் சேர்த்தியா என்ன? முட்டாள்தனம்'' என்றாள் அவள்.

அனந்தசாமி கூர்ந்து கவனித்தார். வார்த்தைகளில் மன்னிப்பு, பெரிய தன்மை இரண்டும் ஆண்டனவே தவிர, குரலில் ஆற்றாமை கரகரத்தது. ஓர் அசாதாரண வெறுப்பு வேறு. 'அப்பாடா' என்று அவர் மனம் ஒரு பெருமூச்செறிந்தது. அந்தக் குலுங்கும் வாளிப்பிலிருந்து இந்த விரக்திச் சொற்கள் வருவது அவருக்கு என்னமோ போலிருந்தது. நல்லவேளையாகக் குரல் உண்மையைக் காண்பித்து விட்டது. இது விரக்தி இல்லை, தோல்வியடைந்த பெண்மையின் குரோதம் என்று கண்டதும் அவருக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது.

சமயம் வாய்த்தபொழுது அவள் வாயைக் கிண்டி, உள்ளே இருப்பதைக் காணத்தானே காத்துக் கொண்டிருக்கிறார் அவர்! இப்பொழுது விட்டால் மறுபடியும் சந்திக்கிறது கடினம்.

''எனக்குக் கொஞ்சம் அவனைப் பற்றித் தெரியும். அவனை முட்டாள் என்று நினைக்கிறாய்? படித்தவனில்லையா அவன்?'' என்று கேட்டார் அனந்தசாமி.

''ஆமாம் மாமா. படித்தவர்தான். நான் படிக்காமல் இருந்திருக்கலாம். கோபம் வராமல் இருக்கும். வந்தாலும் எல்லாவற்றையும் விழுங்கக் கற்றுக் கொண்டுவிட முடியும். படிக்காதவர்களுக்கு அந்தக் கையாலாகாத்தனமாவது கிடைக்கிறது. என்னை இந்த மாமா, அம்மா எல்லாருமாகச் சேர்ந்து படிக்க வைத்துத் தொலைத்துவிட்டார்கள். இல்லாவிட்டால் அவர் பண்ணுவது சரி, ஆண்பிள்ளைகளுக்கு அப்படியிருப்பது உரிமை சலுகை; நாம் அதையெல்லாம் தடைசெய்யக் கூடாது என்று வாயைக் கட்டிக்கொண்டு இருந்திருக்கலாம்...'' சந்திராவுக்கு மேலே பேச முடியவில்லை. குரல் தழுதழுத்தது. கண்ணில் நீர் ததும்பி நின்றது. அனந்தசாமி திகைத்து நின்றார். பார்த்தால் தைரியம், அழுத்தம் போலெல்லாம் தோன்றியது. அவ்வளவும் அமுக்கி மூடி வைத்திருந்த புகைச்சல் என்று இப்பொழுதுதான் அவருக்குத் தெரிந்தது.

மேலே பேசத் தோன்றவில்லை அவருக்கு. பேசவும் தேவையில்லை. கண்ட கண்ட பெண்களோடு அவன் சுற்றுவதை அறிந்தும், கண்ணால் கண்டும் அவள் அவனை மறக்க முடியாமல், தூக்கியெறிந்து விடாமல் கிடந்து புகைவது தெரிந்தது.

''இதோ பாரு, அழாதே. நாம் உண்மையாக இருக்கிற வரையில் ஒரு குறைவும் வராது நமக்கு.''

சந்திரா உதட்டைக் கடித்துத் தலைப்பால் கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

''எங்கே கிளம்பினே?'' என்று பேச்சை மாற்றினார் அனந்தசாமி.

''எங்கேயும் இல்லை.''

''சிநேகிதி வீட்டுக்குப் போகிறாயா?''

அந்த முகக் கலக்கத்துக்கிடையே சிரித்தாள் அவள். ''ஏன் மாமா, நான் நின்று பேசுகிறதுகூடப் பிடிக்கவில்லையா? உத்தரவு கொடுத்து விட்டீர்களே!'' என்று மூக்கை உறிஞ்சிக் கொண்டே கேட்டாள் சந்திரா.

''ஐயையோ—என்ன இப்படிச் சொல்லுகிறாய்! அவசரமாகப் போகிறாயோ, நான் பாட்டுக்குப் பேசிக் கொண்டு நிற்கிறேனே என்று கேட்டேன். வேறு ஒன்றுமில்லை.''

''எனக்குப் பொழுது போகவில்லை வீட்டில். சுற்றிச் சுற்றிப் படிக்கிற உள், தோட்டம், மாடு, புஸ்தகம்—இதுகளைத்தான் பார்க்க வேண்டியிருக்கு. அம்மாவும் என்னைப் பார்க்கிற போதெல்லாம் 'பாவம் பாவம்'னு கரைந்து கொண்டேயிருக்கிறாற் போல் தோன்றுகிறது. எனக்கு என்னமோ எல்லாம் நஷ்டமாகி விட்டாற்போல் அவள் அழாத குறையாகப் பார்க்கிறாளே—அதைத் தாங்கிக் கொண்டு நிற்க முடியவில்லை. அதுதான் வெளியே சுற்றுகிறேன். என்னை அடக்குகிறவர்களும் கிடையாதோல்லியோ?''

அனந்தசாமி, ''எதுக்காக அடக்கணும் உன்னை? புத்தியில்லாதவர்களாக இருந்தால், சமர்த்து இல்லாதவர்களாக இருந்தால் அடக்க வேண்டும்'' என்று சிரித்துக் கொண்டே குறுக்கிட்டார்.

''நீங்கள் சிரிக்காதீர்கள். கொஞ்சம் அதட்டி அடக்குகிறவர்களாக இருந்தால்

நானும் பயந்து கொண்டு சும்மா யிருந்திருப்பேன். அவர் இழுத்த இழுப்புக்குக் கடற்கரை, சினிமா ...இப்படி யெல்லாம் சுற்றி யிருக்க மாட்டேன்.''

''புருஷர்களுக்கும் அடக்குகிறவர்கள் வேண்டி யிருக்கிறதம்மா. இல்லாவிட்டால் அவன் ஒழுங்காக நடந்து கொண்டிருக்க மாட்டானா?... நீ பழகின வரையில் அவன் குணம் கொஞ்சம் கூடத் தெரியவில்லையா உனக்கு?''

''நல்லவராகத்தான் இருந்தார்!''

''பின்னே ஏன் இப்பொழுது வரவில்லை...?''

''என்னைவிட நல்லவளாக யாராவது கிடைத்திருப்பாள் — கிடைத்திருப்பார்கள்!'' மறுபடியும் அவள் உதடு நடுங்கியது. முகவாய் அசங்கியது. சட்டென்று கடிகாரத்தைப் பார்த்தாள். ''அட, மூன்றாகி விட்டதே, மூன்று மணிக்கே வரேன் என்று சொன்னேன்—நான் வரேன் மாமா, அப்புறம் பார்க்கிறேன்'' என்று சரேலென்று மிதியை மிதித்துப் பறந்துவிட்டாள் சந்திரா.

யாரோ பிடித்துத் தள்ளி விட்டாற் போல் பிரமித்து நின்றார் அனந்தசாமி. இரண்டாம் தடவையாக வந்த அழுகையை மறைத்துக் கொள்ளத்தான் ஓடிவிட்டாள் என்று இந்தத் திடீர் மறைவு தெளிவாகக் கூறியது.

'அவன் மீது உனக்கு வெறுப்பு இல்லை, கோபம். எல்லாவற்றையும் மன்னித்து மறுபடியும் அவனை உன் காலடியில் கிடத்திக் கொள்ளலாம் என்று பார்க்கிறாய் — கட்டின பெண்டாட்டி மாதிரி' என்று மனத்துக்குள்ளேயே அவள் போன திக்கைப் பார்த்துச் சொன்னார் அனந்தசாமி. பிறகு திரும்பி நடந்தார்.

* * *

வாசலைத் தாண்டித் தோட்டத்துக்குள் நுழைந்ததுமே வீட்டு முகப்பில் நாகம்மாள் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார் அனந்தசாமி. அவள் வேறு யாரோ பெண்ணுடன் பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. அவரைக் கண்டதும் நாகம்மாள் எழுந்து, 'வாருங்கள்' என்று வரவேற்றாள். ருக்மிணி உள்ளே போய் விட்டாள்.

''உடம்பு எப்படி இருக்கிறது இன்றைக்கு!'' என்றார் அனந்தசாமி.

''தேவலை, கொஞ்சம்! இன்னும் பலஹீனம் இருக்கு.''

''அப்படியா?.....எல்லாம் சரியாகிவிடும். சந்திராவைப் பார்த்தேன் வழியிலே... அண்ணா வந்து விட்டாராமே!''

''ஆமாம்.''

''சொன்னாள் சந்திரா.''

ஜாப்ரே மானர்ஸ் ஸ்தாபனத்தினர் சமீபத்தில் சென்னையில் நடத்திய பிராந்திய காலினேஸ் பல்லழகுப் போட்டியிலே பெங்களூர் ஈவாங்க்லின் ரோஸும், சென்னை ராமானுஜமும் வெற்றி பெற்றனர். இவர்கள் இனி பம்பாயில் நடக்கும் அகில இந்தியப் போட்டியில் கலந்து கொள்வர். அதன் கிளை மானேஜர் திரு நாராயணன் இந்த வைபவத்துக்கு வந்திருந்தவர்களை வரவேற்று உபசரித்தார்.

வேறு யாரோ வந்திருப்பதை நினைத்துக் குரலைத் தாழ்த்திக் கொண்டே சொன்னார் அவர். ''சந்திரா ரொம்ப ஆடித்தான் போயிருக்கிறாள்.''

''ஏன்? ஏதாவது சொன்னாளா?''

''முன்னால் தைரியமாகத்தான் இருந்தாள். அப்புறம் அழுகை வந்துவிட்டது.''

நாகம்மாள் பெருமூச்செறிந்தாள்.

''நான் இன்று அவனைப் பார்த்துவிட்டுத்தான் வருகிறேன்.''

''யாரை?''

''ரங்கனைத்தான்.''

''எங்கே?''

''ஒரு சினிமாக்காரன் வீட்டிலே!''

''சினிமாக்காரன், நாடகக்காரன் - இல்லாவிட்டால் சினிமாக்காரி, நாடகக்காரி இவர்களோடுதான் சதா சுற்றுகிறான் அவன். இன்னிக்கி எந்த சினிமாக்காரன் வீட்டிலே பார்த்தீர்கள்?''

''அருண்குமாராமே! பெரிய நடிகனாமே. பெரிய அரண்மனைமாதிரி வீடு கட்டிக் கொண்டிருக்கிறான்.''

''அங்கேயா பார்த்தீர்கள்? நிஜமாகவா?''

''ஆமாம்மா.''

''அடப்பாவி!''

''ஏன்?''

''அவனோட சிநேகம் வச்சிண்டவன் எங்கே உருப்படப் போகிறான்?''

''என்ன, இப்படிப் புள்ளியடித்தாற் போல் சொல்கிறீர்கள்?''

''நன்றாகத் தெரியும். சொல்கிறேன். இதோ இந்த வாசலிலே வந்து பழி கிடந்தவன்தானே அவன்!''

''யாரு? அருண்குமாரா?''

"அருண்குமாரும் ]இல்லே. துடைப்பக் கட்டைக் குமாருமில்லே. காசி காசின்னு பேரு அந்தப் பையனுக்கு. அவன் அப்பா அன்னம்பட்டிக் கோயிலிலே காரியம் பார்த்துக்கொண்டிருந்தார். நல்ல மனுஷன். ஒரே பிள்ளை. பதினைந்து வயசிலேயே வீட்டை விட்டு ஓடிப்போய் விட்டது. படிப்பு வரவில்லே. நாடகக் கம்பெனியிலே சேர்ந்தது. அஞ்சாறு வருஷங்கள் முன்னாடி ஒரு நாளைக்கு இதோ இந்தத் திண்ணைக்கிட்ட வந்து நின்று கொண்டிருந்தான். அண்ணாவுக்கு அவன் அப்பாவைத் தெரியுமாம். எங்கேயோ வீட்டை விசாரித்துக் கொண்டு வந்து விட்டான். 'சினிமாவிலே சேரணும் சேரணும்' என்று அண்ணாவை நச்சு நச்சென்று பிடுங்கி விட்டான். இங்கேயே சோற்றைத் தின்றுகொண்டு கிடந்தான். அப்புறம் அண்ணா செட்டியாரிடம் சொல்லி, அவர் இன்னொரு செட்டியாரிடம் சொல்லி ஏதோ படத்திலே சேர்த்தார்கள். சேர்ந்த பிறகு இரண்டே இரண்டு நாட்கள் இங்கே வந்தான். அப்புறம் எட்டிக்கூடப் பார்க்கவில்லே. மூன்றாம் வருஷம், ஏதோ படத்துக்கு வேணும், செட்டியார்கிட்டச் சொல்லி இரண்டு லட்ச ரூபாய் கடனாக வாங்கித் தந்தால் தேவலே, ரண்டு வட்டி மூணு வட்டிகூடக் கொடுக்கத் தயார் என்று வந்தானாம். போடா போ என்று அனுப்பி விட்டார் அண்ணா. அவருக்கு ஆத்திரம். மனுஷர்களுக்கு உதவுகிறது உண்டு, சகஜம். அதற்காக அவர்கள் தினமும் வந்து சலாம் போட்டு விட்டுப் போக வேண்டும் என்று நான் சொல்ல வரவில்லே இப்ப. வாசற்படி இல்லாவிட்டால் வீட்டுக்குள் ஏறிவர முடியாதென்று நமக்குத் தெரியும். அதற்காகத் தினமும் 'உன்னாலேதான் வீட்டுக்குள்ளே வர முடியறது' என்று அந்த வாசற்படியை விழுந்தா கும்பிடுகிறோம்?"



மளமளவென்று பேசிக் கொண்டுபோன நாகம்மாளை இடைமறித்தார் அனந்தசாமி. "கும்பிடுகிறோமே. வாசல் படிக்குத்தானே கோலம் போட்டு அலங்காரம் செய்கிறோம்?" என்றார்.

நாகம்மாள் சிரித்தாள். "அது அழகுக்கு, நன்றியில்லே" என்றாள்.



“எப்படியாவது இருக்கட்டும். ஒரு மரியாதை, ஒரு ஞாபகம் வேண்டாமோ! இப்படியா மறந்து போய் விடும்! அது என்ன மனசா? தண்ணீரா? கலியாணம் பண்ணிக் கொண்டான். நேரே வந்து கூப்பிடவில்லை. அண்ணா போவாரோ? ஒரு கடுதாசி எழுதிவிட்டுச் சும்மாயிருந்து விட்டார். ‘என்னண்ணா இப்படியிருக்கிறானே இவன்?’ என்று கேட்டேன். போடி என்று அந்தண்டை போய்விட்டார். இந்த மாதிரி எத்தனையோ பேரிடம் உதவி வாங்கிக் கொண்டிருக்கிறான். ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொருத்தன் காலிலேயும் போய் நெடுஞ்சாண்கிடையாக விழுகிற தென்றால் ஒரு ஜன்மம் போதாது அவனுக்கு. ‘ஒரு மாசம் சோறு தின்றான். நீ வேண்டுமானால் போய் நாற்பது ரூபாய் வாங்கிக் கொண்டு வந்துவிடு அதற்கு’ என்றார் அண்ணா. அவன்தான் இன்னிக்கு மனுஷ மாணிக்கமாகக் கெட்டி மேளம் கொட்டிக் கொண்டு முழங்குகிறான்.”

“முழங்குகிறதா? எவ்வளவு பெரிய வீடு தெரியுமோ? போகப் போகப் போய்க் கொண்டேயிருக்கிறது அரண்மனை மாதிரி.”

“ராஜா மந்திரிக்கெல்லாம்தான் அரண்மனை வேணும். உலகத்தைக் காப்பாற்றுகிறார்கள். எப்பப் பார்த்தாலும் கவலை, பிடுங்கல், பயம். இன்னும் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். குடியானவன் சோற்றை உண்டாக்குகிறான். வியாபாரி நாலு சாமானை நமக்குக் கிடைக்கும்படியாகப் பண்ணுகிறான். டாக்டர் மருந்து கொடுத்து உடம்பைக் காப்பாற்றுகிறார். எல்லோரும் ஏதோ மனுஷர்கள் உயிரைக் காப்பாற்றி நல்லபடியாக வாழவும் ஏதோ செய்கிறார்கள். இந்தக் காசி என்ன செய்கிறான்? இவன் பண்ணுகிற தொழிலாலே யாருக்கு என்ன லாபம்? ஹிஹி என்று கொஞ்ச நேரம் சிரிக்கிறோம், அழுகிறோம். வாழைப்பழத் தோலில் சறுக்கி விழுகிறானே, அதைப் பார்த்தால் கூடத்தான் நமக்குச் சிரிப்பு வருகிறது.”

“என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்? ஏக காலத்திலே ஆயிரக் கணக்கான பேரைச் சந்தோஷப் படுத்துகிறார்களே. கவலைகளை மறக்க அடிக்கிறார்களே?”

“கம்பம் கூத்தாடி செய்யவில்லையா அதை? நரிக்குறத்தி செய்யவில்லையா? அவர்களைவிடக் கொஞ்சம் நாகரிகமாகச் செய்கிறான், போகட்டும். அதுக்காக, அரிசி, துணி கொடுக்கிறவன், வீடு கட்டுகிற கொல்லன் எல்லாரையும் விட ‘ஒசத்தி’யாகப் பேசிக்கொள்ளும்படியாக இவன் என்ன செய்து விட்டான் என்று கேட்கிறேன். நீங்களே சொல்லுங்கள்.”

“கம்யூனிஸ்ட்காரர்கள் என்று சொல்லுவார்கள். அவர்கள் தேசத்தில்கூட இந்தமாதிரி கலைகளிலே பெரியவர்களுக்கு ஏராளமாகக் கொடுக்கிறார்கள்.”

“யார் கொடுத்தால் என்ன? அதற்காகச் சரியாகி விடுமா அது?”

அனந்தசாமி ஒன்றும் சொல்லவில்லை.

“ஒரு வேளை சாப்பாட்டை நினைத்துப் பார்க்கிற ஞாபகம் இல்லை. கால் ஊன்ற வைத்த ஒரு ஆசாமியை நினைத்துக்கொள்ளத் திராணி இல்லை. இந்த பெரிய பிரபுவுக்கு அரண்மனை அகழி எல்லாம்தான் குறைச்சலாகப் போய் விட்டன....என்னமோ, இவனை நினைத்









ததால் பட படவென்று வந்து விட்டது பேசிவிட்டேன். அது சரி, நீங்கள் எங்கே அங்கே போய்ச் சேர்ந்தீர்கள்?''

அனந்தசாமி விவரமாகச் சொன்னார்.

''பாவம், முதல் குழந்தை. நன்றாக இருக்கப்படாதோ?'' என்று அங்கலாய்த்தாள் நாகம்மாள். ''யாரு எப்படி இருந்தால் என்ன? ஓடியாடித் திரிய வேண்டிய குழந்தை இப்படி ஆணி அடித்தாற்போல உட்கார்ந்து கிடக்கும் படியாக ஆகிவிட்டதே - என்ன கண்ணராவி! தேவலையாயிடுமோல்லியோ?''

''அது பகவான் இஷ்டம். மருந்து கொடுத்து, ஜாக்கிரதையாகப் பார்க்க வேண்டியது நம் பொறுப்பு. குணப்படுத்துகிறது அவன் பொறுப்பு.''

ஐந்து விநாடி மௌனம் நிலவியது.

''இவன் ரொம்பச் சிநேகமோ அவனுக்கு?'' என்று கேட்டாள் நாகம்மாள்.

''ரொம்பவோ, கொஞ்சமோ, நான் பார்த்தது ஒரு க்ஷணம். எப்படித் தெரியும்....போகப் போகத் தெரிகிறது. நானும் என்னால் ஆனதைச் செய்கிறதாகத்தான் சங்கல்பம் செய்துகொண்டிருக்கிறேன். ஏன் தெரியுமோ? உங்கள் பெண் அப்படி உறுதியாக இருக்கிறாள். அவன் இப்படி என்று தெரிந்தும் அவளுக்கு அவனிடமிருந்து மனசு மாற வில்லை என்றுதான் எனக்குப் படுகிறது.''

''அதனால்தானே இவ்வளவு கஷ்டம்! நான் ராத்தூக்கம் வராமல் கஷ்டப் படுகிறது அதனால்தான். இது இந்தக் காலத்துப் பெண்ணாகவும் இல்லை, அந்தக் காலத்துப் பெண்ணாகவும் இல்லை. நான் என்ன செய்வேன்?''

''ஒன்றும் கவலைப் படாதீர்கள்—எல்லாம் சரியாகிவிடும்'' என்று வழக்கம் போலச் சொன்னார் அவர்.

''நீங்கள் சொல்கிறீர்கள், சரி. சாதாரணமாக நீங்கள் சொல்கிறதைக் கேட்டு நான் தைரியத்தை வரவழைத்துக் கொள்கிறது வழக்கம்தான். ஆனால் இந்தக் காசியோடு அவன் திரிகிறான் என்றவுடன் எனக்குப் பயமாயிருக்கிறது. இந்தக் காசி கொல்லு கொலைக்கு அஞ்ச மாட்டான். தான் பெரியவனாக இருக்கணும் என்கிறதற்காக எதற்கும் துணிகிற பேர்வழி. இவனோடு சிநேகம் வைத்துக் கொள்கிறவன் எப்படியிருப்பான்?''

''எல்லாவற்றுக்கும் பொறுமை வேண்டும். குப்பை எல்லாம் எருவாகிக் காய்கறியாக மாறிவிடவில்லையா?''

''உபமானம் சரியாகத்தானிருக்கிறது. நமக்குஅது சரியாயிருக்கவேண்டாமா?''

அனந்தசாமி இரக்கத்துடன் பார்த்தார் அவளை. ''நான்தான் கவலைப்படா

தீர்கள் என்கிறேனே. அதோடுவிடுங்கள்'' என்று கூறிவிட்டு, மூக்குக் கண்ணாடியை எடுத்து மாட்டி மருந்துப் பொட்டலங் களைப் பார்க்கத் தொடங்கினார்.

ஒரு நிமிஷமாயிற்று. அனந்தசாமி பொட்டலங்களை மடித்தார்.

''உள்ளே வந்து உட்காருங்களேன். நான்பாட்டுக்கு வாசல் தாழ்வாரத் திலேயே உட்கார்த்தி வைத்து விட் டேனே, இத்தனை நேரமாக! "என்ன சமர்த்து!'' என்றாள் நாகம்மாள்.

''பரவாயில்லை'' என்று உள் பக்கம் பார்த்தவர் சிறிது தயங்கினார்.

'' தெரிந்தவர்கள்தான், வாருங்கள்.',

பைக்குள் போடாமல் எல்லாவற்றை யும் அப்படி அப்படியே எடுத்துக் கொண்டு உள்ளே எழுந்து வந்தார் அனந்தசாமி. (தொடரும்)










'இது ஓர் அற்புதம். பிரமிக்க வைக்கிறது' என்றார் அமெரிக்க உதவி ஜனாதிபதி லிண்டன் ஜான்ஸன், ஆக்ரா விலே தாஜ்மகாலைக் கண்ட பிறகு. அவர் நமது தேசியத் தலைவர்களுடன் இரண்டு நாட்கள் தங்கி உரையாட இந்தியாவுக்கு வந்தார். அப்படியே இந்தியாவின் அரிய இக் கலைச் சின்னத்தைத் தம் மனைவியாரோடும், ஜனாதி பதி கென்னடியின் சகோதரி ஸ்ரீமதி ஸ்டீபன் ஸ்மித் தோடும் சென்று கண்டு களித்தார். விருந்தினரைப் பாரத ஜனாதிபதி ராஷ்டிரபதி பவனில் வரவேற்றுக் கௌரவித் தார். நம் நாட்டுக் குழந்தைகளோடு லிண்டன் ஜான்ஸன் சிறிது நேரம் மகிழ்ந்து கழித்தார்.






## 28. அகில உலகத் திருவிழா

சோமு

திருச்செந்தூர் வைகாசி விசாகம், சங்கர நயினர் கோவில் ஆடித் தவசு, மயிலாப்பூர் அறுபத்து மூவர், திருவையாறு தியாக ராஜ உற்சவம் முதலிய திருவிழாக்கள் நமக்கு எப்படியோ, அப்படித்தான் மேனாட்டார்களுக்கு எடின்பரோத் திருவிழா! ஆண்டு தோறும் நடைபெறுகிற இந்த அகில உலக நாடக இசைத் திருவிழாவுக்கு என்று, இங்கிலாந்தில் மட்டுமல்லாமல் ஐரோப்பிய நாடுகளிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் மற்றும் உலகின் பல பாகங்களிலிருந்தும் ஏராளமான மக்கள் எடின்பரோவுக்கு வந்து கூடுகிறார்கள். காலையிலிருந்து நடுநிசி வரை ஒரே தொடர்ச்சியாக எடின்பரோ நகரத்தின் பல அரங்குகளிலும் மன்றங்களிலும் சங்கீதக் கச்சேரிகளும், நாடகங்களும் நடந்தவண்ணமாக இருக்கின்றன!

வீதிகளில் எல்லாம் ஒரே கூட்டம்! ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாக 'ஜேஜே' என்றிருக்கிறது. தெருவிலே நடந்து செல்லும்போது, நடைபாதைகளில் எல்லாம் ஜன நெருக்கடி! உலகின் பல நாடுகளிலிருந்தும் பல திசைகளிலிருந்தும் வந்துள்ள மக்கள் கூட்டம் அல்லவா! விதம் விதமான வர்ண ஆடைகள், பல வகையான கௌன்கள்! பலவிதமான கொண்டை அலங்காரங்கள்! பலரகமான மூக்குக் கண்ணாடிகள், தொப்பிகள், திருகுப் பூக்கள், காதணிகள், கைப்பைகள், காமிராக்கள்!

நாம் அணிகிற பருத்தி ஆடைகள் அந்தத் தேசத்தின் குளிரைத் தாங்குவதில்லை. கம்பளி ரோமத்தாலான காலுறைகள், கையுறைகள், உடம்பை இறுக்கிக் கொண்டு பூட்டி நிற்கிற டைகள், அங்கிகள், பல நிறங்களில் பல அலங்காரங்களோடு!

செயற்கைக் கற்களாலான நகைகள்! செயற்கைப் பொன், செயற்கைப் பூச்சரம், செயற்கைக் கூந்தல், செயற்கைச் சாயப்பூச்சு, செயற்கைப் பட்டு, செயற்கை நூல் வகைகள், செயற்கை உறைகள்!

எடின்பரோ, ஸ்காட்லாந்து தேசத்தின் தலை நகரம். அழகான மலைத்தொடரின்மேல் கட்டப்பட்டுள்ள ஒரு சௌந்தர்யபுரம் அது! ஸர் வால்டர் ஸ்காட், ராபெர்ட் லூயி ஸ்டீவன்ஸன், ஸர் ஆர்தர் கானன் டாயில் முதலிய பெரிய பெரிய எழுத்தாளர்கள் பிறந்த ஊர் அது! பல ஓவியர்களும் சிற்பிகளும் தோன்றிய பெருமையும் இந்த நகரத்துக்கு உண்டு. இங்குள்ள கோட்டை மாளிகை பெரிய மலையின் முதுகுக்கு மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு இந்த நகரம் முழுவதையும் மேற்பார்த்து வருவது போல் அமைந்திருக்கிறது.

எடின்பரோவின் முக்கிய வீதியாகிய பிரின்ஸஸ் தெருவில், முட்டி மோதிக்கொண்டு சரிகிற மக்கள் கூட்டத்தின் மத்தியிலே நடந்து சென்று கொண்டிருந்தேன். இரண்டு புறமும் ஓங்கி நின்ற கட்டடங்களின் உச்சியிலே பிரிட்டிஷ் கொடி நிமிர்ந்து ஆடிக் கொண்டிருந்தது. தபால் நிலையம் போன்ற பொது மனைகளில் எல்லாம் 'காமன்வெல்த்' நாடுகள்

அனைத்தின் கொடிகளும், பாரதக் கொடியோடு பட்டொளி வீசிப் பறந்தன! மரக் கம்பங்களில் செடி கொடி போன்ற வர்ண விளக்குகள். கவுதங்களிலே பூந்தொட்டிகள். எங்கு பார்த்தாலும் "அகில உலக இசை நாடகத் திருவிழா" என்ற அறிவிப்பு!

நடைபாதைகளிலே நம்மூர்த் திருவிழாக் கடைகளைப் போலவே பணியாரக் கடைகள்! மேனாட்டு மிட்டாய்கள்! விதம் விதமான ரொட்டிகள், கேக்குகள், வட்டம், சதுரம், நீண்டசதுரம், முக்கோணம் ஆகிய வடிவங்களில் கோதுமை மாவும் சர்க்கரையும் மற்றச் சுவைப் பொருள்களும் சேர்ந்து பிறப்பெடுத்துக் கண்களைச் சிமிட்டிக் கொண்டிருந்தன. எங்கு பார்த்தாலும் தேக் கடைகள், காமிரா கடைகள், கடிகாரக் கடைகள், அடை அங்காடிகள், நகை மாளிகைகள்!

இந்த விழாக் காட்சிகளை யெல்லாம் பார்த்து அனுபவித்துக் கொண்டே பிரின்ஸெஸ் வீதிப் பூங்காவுக்கு நான் போய்ச் சேர்ந்தபோது ஆறுமணி அடிக்கும் தருணம்! அப்போது தோட்டத்தின் ஓர் ஓரத்தில் திரளாக மக்கள் கூடி எதையோ கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டேன். அருகிலே சென்று பார்த்தால், ஒரு விநோதமான காட்சி! மிகப் பெரிய ஒரு வட்டம். பூஞ்செடிகளும், கொடிகளும், இலைகளும் தழைகளுமாக ஒரு கடிகாரத்தின் வடிவத்தில் புதர் வளர்ந்திருந்தது! மத்தியில் பூக்களாலான இரண்டு பெரிய கடிகார முட்கள்! விளிம்பில் கீரைச் செடிகள் வளர்ந்து கடிகாரத்தின் எண்களாக நின்றன! ஆச்சரியம் என்னவென்றால் அந்தப் பூங்கடிகாரத்தின் பூங்கைகளில் பெரிது நிமிஷத்துக்கு நிமிஷம் நகர்ந்து கொண்டிருந்தது! அப்போது மணி ஆறு அடிக்க இரண்டு நிமிஷம்!

முட்களைக் கூர்ந்து பார்த்தேன்! ஆறு மணி ஆனதும், சின்ன முள் ஆறுக்கு நகர்ந்தது. உடனே அந்தக் கடிகாரத்துக்கு அருகிலேயிருந்த உயரமான ஒரு புதருக்குள்ளிருந்து ஒரு செயற்கைக் குயில் வெளியே வந்து 'குக்கூ' என்று கூவிவிட்டுப் புதருக்குள் நகர்ந்து விட்டது. அடுத்த விநாடி மறுபடியும் வெளியே வந்து 'குக்கூ' என்று கூவிவிட்டு மீண்டும் புதருக்குள் சென்று விட்டது. இப்படி ஆறு தடவைகள் 'குக்கூ' 'குக்கூ' என்று வெளியே வந்து தலையை உயர்த்திக் கூவி விட்டுப் புதருக்குள்ளே சென்று மறைந்தது அந்தக் குயில்!

இந்த விசித்திரக் காட்சியைப் பற்றி விசாரித்ததில், கடிகாரம் பூஞ்செடிகளினால் அமைந்தது எனினும், முட்களும் குயிலும் மின்சார விசையினால் இயங்குகின்றன என்று தெரிய வந்தது! ஒவ்வொரு முழு மணி, அல்லது அரை மணியின்போதும் குயில் கூப்பிடும்!

உலக அதிசயங்களில் ஒன்றான இந்தப் பூங்கடிகாரத்தை முதல் முதல் எடின்பரோவில் 1903-ல் செய்தார்களாம்! 1905-ல் இந்தக் குயிலையும் செய்து சேர்த்தார்களாம்!

இதே தோட்டத்தில் இன்னொரு புறத்தில் ஸர் வால்ட்டர் ஸ்காட்டின் பிரும்மாண்டமான சிலை நிற்கிறது. அதற்கு அருகிலே ஒரே புறாக் கூட்டம்! பொரியும் நிலக்கடலையும் கொடுத்துக் கொண்டு ஆங்கிலேயர்கள் இவற்றோடு விளையாடுவதும், இந்தப் புறாக்கள் அவர்களுடைய தோளிலும், தலையிலும், கைகளிலும் ஏறிக் குதிப்பதும் ஒரு வேடிக்கையான காட்சி.



மாளிகை வாசலிலே

சற்றுத் தொலைவிலே திறந்தவெளி அரங்கம்! இங்கே ஸ்காட்லாந்து தேசத்தின் நாட்டுப் பாடல்களும் நடனமும் மாலை நேரங்களில் நடைபெறுகின்றன. 'பாக் பைப்' என்ற காற்றுப் பைக் குழலிலிருந்து எழுகிற இசை நம்மூர் சின்ன நாயனத்தின் ஒலி போன்று இருக்கிறது. இதில் எளிய மெட்டுக்களைக் கவர்ச்சிகரமாக வாசிக்கிறார்கள். இந்த இசைக் கலைஞர்கள் அணிந்திருக்கிற வர்ண உடையும் அவர்களுடைய இசையைப் போலவே கவர்ச்சியாக இருக்கிறது.

இந்தத் தோட்டத்திலிருந்து சுற்றிக் கொண்டு மேலே மலை மாளிகைக்குப் போனால், சரித்திர முக்கியம் வாய்ந்த பல பொருள்களைப் பார்க்கிறோம். கோட்டையும் வாசல்களும் பழைய பீரங்கிகளோடு நின்று போவோர் வருவோரை எச்சரிக்கை செய்கின்றன. காவலாளிகள் அச்சமுறுத்துகிற தோற்றத்தில் நின்றாலும் கூடப் பக்கத்தில் சென்று பேச ஆரம்பித்தால், இந்தியர்களிடத்தில் மிகுந்த பிரியம் காட்டுகிறார்கள்! "உங்களைப் படம் எடுக்கலாமா?" என்று கேட்டேன். "எங்கள் இருவருக்கும் மத்தியில் நீங்கள் நில்லுங்கள். உங்கள் நண்பரை எடுக்கச் சொல்லுங்கள்!" என்று பதில் சொன்னார்கள், உற்சாகத்தோடு!

நண்பர் என்று சொன்னது யாரைத் தெரியுமா? சந்திரசேகரன் என்ற ஒரு தமிழரைத்தான்! எடின்பரோவுக்குப் போனதில் எனக்கு அறிமுகமான நண்பர்களிலே மூன்று பேரை இங்கே குறிப்பிட வேண்டும். ஒருவர் சென்னையைச் சேர்ந்த டாக்டர் சந்திரசேகரன் என்ற இளைஞர். அமெரிக்கா சென்று படித்து விட்டு இப்பொழுது எடின்பரோவில் மேற்கொண்டு நுட்பக் கல்வி பயின்று வருகிறார். இன்னொருவர் டாக்டர் ஓ. எஸ். ரெட்டி என்ற ஆந்திர நண்பர். மூன்றாமவர் இலங்கைத் தமிழர் பவாநந்தம். இந்த மூன்று நண்பர்களும் என்னோடு எடின்பரோவில் பல இடங்களுக்கும் வந்து சுற்றினார்கள். ஒருநாள் நாங்கள் மூன்று

பேரும் எதிர்பாராதமழையில் சிக்கிக்கொண்டு விட்டோம்! ரெயின்கோட்டையும் மீறி மழை கனமாகப் பெய்ய ஆரம்பித்து விட்டது! மூன்று மைல் அந்த மழையில் தொப்புத் தொப்பென்று நாங்கள் நனைந்து கொண்டே நடந்து போனதை இப்பொழுது நினைத்துப் பார்த்தால் தும்மல் வருகிறது!

அகில உலக நாடக இசைத் திருவிழாவில் எடின்பரோ செய்தித் துறையினர் பல நிகழ்ச்சிகளை நான் சென்று பார்க்கும் வண்ணம் ஏற்பாடு செய்து கொடுத்தார்கள். 'ப்ரிட்டிஷ் கௌன்ஸில்' ஸ்தாபனத்தார், கூட்ட நெருக்கடி அதிகமாக இருக்கக்கூடிய சில விசேஷ நிகழ்ச்சிகளுக்குக்கூட எனக்காக மிக்க அன்புடன் வசதிகள் செய்து தந்தார்கள். இது காரணமாக அந்த ஒரு வாரமும் ஒவ்வொரு நாள் மாலையிலும் அற்புதமான கச்சேரிகள் கேட்டேன். சிறந்த நாடகங்கள் பார்த்தேன். அகில உலகத்திலும் புகழ்பெற்ற ஆங்கிலக் கலைக் குழுவினர்கள் நடத்திய நிகழ்ச்சிகள் அவை என்றால், அவற்றின் தரத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா! முக்கியமாக 'ஓல்ட் விக் கம்பெனி'யார் நடத்திய 'ஸீகல்' என்ற நாடகம் அபாரமாக இருந்தது. ரஷ்ய ஆசிரியர் 'ஷெகாவ்' எழுதிய அற்புதமான நாடகம். ஓர் இளம் எழுத்தாளனைப் பற்றிய கதை. காட்சிகளும், பேச்சும், நடிப்பும், உயர்ந்த கலைப் பண்போடு இதயத்தை உருக்கின. இதைப் போலவே 'பால்ஸ்டாப்' என்று ஓர் இசை நாடகம். இத்தாலிய மொழியில் செய்யப்பட்ட பாடல்களைக் கொண்டு இசை நாடகமாக நடிக்கப்பட்டது. சங்கீதத்தின் தரமும், உணர்ச்சிப் பின்னலும் மிக மிக நேர்த்தியாக இருந்தன. நான் பார்த்த நிகழ்ச்சிகளில் இன்னொரு முக்கியமான நிகழ்ச்சி 'ராயல் பாலே' குழுவினர் நடத்திய ஓர் அபிநய நாடகம். அதாவது வார்த்தைகள் இல்லாமல், வாத்திய இசைக் கோலங்களினுலும், அங்க அபிநயங்களாலும் சித்திரிக்கப் பட்ட ஒலி ஓவியம் இது. வண்ண ஜோடனைகளும், குதூகலமான இசைக் கோலங்களும், ஆடை அலங்காரங்களும், கலையழகோடு கூடிய ஒப்பனைகளுமாகத் திகழ்ந்து இந்த ஒலி ஓவியம் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரக்கூடிய உயர்தரமான கலைவிருந்தாக இருந்தது.

இந்த நாடக இசை நிகழ்ச்சிகள் தவிர எடின்பரோவில் நான் பார்த்த ஓர் அற்புதமான பொருட்காட்சியைப்பற்றிக் கட்டாயம் இங்கே குறிப்பிட வேண்டும். எடின்பரோ திருவிழாவை யொட்டி இங்கிலாந்தின் செய்தித் துறையினர் 'காமன்வெல்த் எக்ஸிபிஷன்' என்று ஒரு காட்சி நிர்மாணித்திருந்தார்கள். காமன்வெல்த் நாடுகள் ஒவ்வொன்றின் சரித்திரமும், பூகோளஅமைப்பு, விளைபொருள்கள், அரசியல் பொருளாதார நிலைகள் முதலியனவும் பற்றிக் காட்சிகள் மூலம் எடுத்துக் காட்டக்கூடிய அணி அலங்காரங்களை வரிசை வரிசையாகச் செய்து வைத்திருந்தார்கள். இந்தக் காட்சியில் பாரத நாட்டுப் பகுதி விரிவாகவே அமைக்கப்பட்டிருந்தது. நமது பாரத நாட்டின் ராஜ்யங்கள், இவற்றின் பரப்பளவு, எல்லை முதலிய குறிப்புக்கள் இருந்தன. இவற்றுக்கு மத்தியிலே ஒரு சிறு படக்காட்சி! பதினெட்டுப் படங்கள் ஒவ்வொன்றாகச் சுழன்று வந்து சற்று நேரம் நம் கண்முன் நின்றுவிட்டு மறுபடியும் சுழன்று செல்லுகின்றன. திரைப்படம்மாதிரி ஒளியும் நிழலுமாகச் சுழல்கிற ஓர் அமைப்பு இது. மீண்டும் மீண்டும் சுழன்று வருகிற இந்தப் பதினெட்டுப் படங்களில், பதினைந்து இந்தியாவின் முக்கிய இடங்களின் படங்கள். நம்முடைய தில்லிப் பாராளுமன்றம், வாரணாசி, பெரம்பூர் கோச் பேக்டரி, மகாபலிபுரம் என்று பதினைந்து முக்கிய காட்சிகள். மற்ற மூன்றும் மூன்று இந்தியத் தலைவர்களின் படங்கள். காந்திஜி, நேருஜி, ராஜாஜி ஆகிய முப்பெருந் தலைவர்களின் ஒளிப்படம் அந்த அகில உலகத் திருவிழாவுக்கு வந்திருந்த ஆயிரக் கணக்கான அன்பர்களுக்கும் பாரத நாட்டை அறிமுகப் படுத்தி ஒளி வீசிக் கொண்டிருந்ததைக் கண்டேன். இந்த ஒளிக்காட்சி கலையழகோடும் நுட்பமான மின்சார இயக்கத்தோடும் அமைக்கப் பட்டிருந்ததால் ஆங்கில மக்கள் திரள் திரளாக நின்று பார்த்து அனுபவித்தார்கள். ராஜாஜி அவர்களின் படத்துக்குக் கீழே [Former Governor-General of India, Distinguished Elder Statesman என்ற குறிப்பைப் படித்த ஆங்கில மக்கள் Chakravarti Rajagopalachari, என்ற முழுப் பெயரையும் ஒவ்வொரு எழுத்தாகக் கூட்டி உச்சரித்துக் கொண்டிருந்த அந்தக் காட்சி என் கண்முன் அப்படியே நிற்கிறது.

பொருட்காட்சி, கலைக்காட்சி இசை நிகழ்ச்சி ஆகியவற்ருேடு சேர்த்துப் பார்க்க வேண்டிய இன்னொரு முக்கிய காட்சி 'ம்யூஸியம் ஆப் சைல்ட் ஹுட்' என்ற ஒரு விந்தை இல்லம்! 'ஹை ஸ்ட்ரீட்' என்ற வீதியில் அகில உலகச் சிறுவர் நிலையமாக நிற்கிறது இந்த வீடு. புகழ் பெற்ற ஒரு சீமாட்டி தனது பொழுது போக்குக்கு என்று சிறு வயதில் பொம்மைகளும் வேடிக்கைப் பொருள்களும் சேகரிக்க ஆரம்பித்து, நாளடைவில் தனது வாழ்நாளையே குழந்தைகளுக்கான வேடிக்கைப் பொருள்களைச் சேகரிப்பதிலே அர்ப்பணம் செய்தார்! அந்தச் சீமாட்டியின் நன்கொடையே இது! உலகத்தில் எந்த நாட்டில் எந்தப் பொம்மைகளைக் கொண்டு குழந்தைகள் விளையாடுகிறார்கள்; ஒவ்வொரு தேசத்திலும் குழந்தைகள் என்னென்ன ஆடை அணிகலன்கள் உபயோகிக்கிறார்கள்; உலக மொழிகளில் எல்லாம் சிறுவர்களுக்காக என்னென்ன புத்தகங்கள் அச்சாகி யிருக்கின்றன; ஒவ்வொரு நாட்டிலும் குழந்தைகளுக்கான பாட்டுக்கள், விடுகதைகள், சித்திரங்கள் எவை யெவை? இவையெல்லாவற்றையும் மாடிக்கு மேல் மாடியாகக் கட்டியுள்ள இந்த மாளிகையின் அறைகளிலே வரிசைப்படுத்தி வைத்திருக்கிறார்கள்! இப்பொழுதுள்ளவை தவிர நாள்தோறும் புதிது புதிதாகச் சேர்த்துக் கொண்டும் இருக்கிறார்கள்! இவற்றுக்கு மத்தியிலே நம்மூர்ச் செப்புக்களும், அம்பாரி ஆனையும், மரப்பாச்சியும் மிக ஒய்யாரமாகக் கொலுவிலே உட்கார்ந்து கொண்டிருக்கின்றன.

(தொடரும்)

# நர்வேட்டை ௯

கதை: ஜெயந்தி
சித்திரம்: வினு

வட எல்லையில் சீன ஆக்கிரமிப்புக்குப் பிறகு, காலிம்பாங் ஒற்றர்களும் தேசத்துரோகிகளும் நிறைந்த நகரமாகிவிட்டது. அங்கு சென்ற தன் கணவன் இக்கட்டான ஒரு நிலையில் அகப்பட்டுக் கொண்டதை அறிந்த ஷியாமா, தானும் அதே இடத்துக்கு விரைகிறாள். வஞ்சகர்கள் வலையில் சிக்கிக் கொள்ளப்போவதைப் பாவம், அந்தப் பெண்மான் அறியவில்லை......















போகிறான்.

ரகசியக் குறிப்புகள் சிலவும் என் அடையாளச் சீட்டுகளும் டிக்கியில் திருட்டுப் போகாதிருந்தால் சிறைப் பட்டிருக்க மாட்டேன்.

உங்களுக்கு உதவுமாறு கட்டளை. தேவையான போது சொல்லுங்கள். தயாராக இருக்கிறோம்.

எதிரே நீங்கள் கைதானதால் உங்களுக்கு அங்கே வரவேற்பிராது. வேறு ஜாகை பார்த்துக் கொள்ளுங்கள்.

POLICE STA

தாங்க்ஸ். குட் பை!












விடுதலை பெற்று
வந்துள்ள குமாரைக்
கண்டு பிரமித்து
நிற்கிறாள் லின்யி.

HOTEL
TESEMO

ஹோட்டல்
டெஸிமோ! பேஷ்!
தாய் நாட்டுக்காக
உயிரைத் தியாகம்
செய்த வீரருக்கு
ஞாபகச் சின்னம்
நிறுவியாகி
விட்டதோ!

நீங்கள் கூடமாகப்
பேசுகிறீர்கள். பிறந்த
விநாடி முதல் கடைசி
மூச்சு வரை அவர்
வாழ்ந்து வந்த இந்தத்
தேசம்தான் அவரது
தாய்நாடு.

அப்படியானால்
டெஸிமோ தியாகி
யல்ல, துரோகி!

அப்பாவின் மரணத்துக்கு நீங்களே
காரணம் என்று நான் கருதியது
தவறுதான். அதற்காக ஆத்திரப்பட்டு
அவரைப் பழிக்காதீர்கள். என்னால்
சகிக்கவே முடியாது.

உண்மைதான்.
என் மீது பாயப் போகிற
தென்று நீ ஆசையுடன்
எதிர்பார்த்த கத்தி
குறி தவறி உன் அப்பா
வின் உயிரையே குடித்து
விட்டதை உன்னால்
எப்படிச் சகிக்க
முடியும்?

உங்கள் போக்கே
இன்று விசித்திர
மாக இருக்கிறது.
எனக்கு ஒன்றுமே
புரியவில்லை.

புரியும்படி சொல்கிறேன்
உன்னையும் உன் அப்பாவை
யும் ஒற்றர் கூட்டத்
தைச் சேர்ந்தவர்கள்
என்று ருசிப்
பிக்கக் கூடிய
காகிதங்களைக்
கொளுத்தி
விட்டு, அவை
திருட்டுப் போய்
விட்டன என்ப
தாக இன்ஸ்
பெக்டரிடம்
புளுகி
னாய்!

என்னை இப்படிச் சித்திரவதை
செய்வதில் உங்களுக்
கென்ன சந்தோஷம்?

ஒளிவு மறைவு இல்லா
மல் என்னிடம்
உண்மையைச்
சொல்லிவிட்டால்
ஏன் தொந்தரவு
செய்யப் போகி
றேன்?

தொடரும்












ஒரு தேக்கரண்டி ஈனோ ஒரு டம்ளர் ஜலத்தில் போட்டால் உடனே பொங்கி கரைந்து தேக்த்தியான, புத்துணர்ச்சியளிக்கும் பானமாக மாறும். தளதளக்கும் ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' இதத்தையளித்து சமனூட்டக்கூடியது. வயிற்றுக் கோளாறுகளிலிருந்து உடனடியாக நீடித்த நிவாரணமளிக்கிறது, ஜீரணசக்தியை சரியாக்குகிறது.









ஈனோ அவருக்கு
சீக்கிரத்தில் குணமளித்தது

# ஈனோ
## 'ப்ரூட் ஸால்ட்'

'ஈனோ', 'ப்ரூட் ஸால்ட்', என்ற வார்த்தைகள்
ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்குகள்
பீச்சம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

# வட்ட மேஜை

## உளுத்துப்போன கட்சி

மே 21ந் தேதி கல்கி இதழில் ''அமைச்சரின் சமாதானம்'' என்கிற தலையங்கம் காங்கிரஸ்காரர்களின் புளுகுப் பிரசாரங்களை அம்பலப்படுத்துகிறது. 'காங்கிரஸ் அபிமானம்' என்கிற உபதலையங்கமும் அதே அமைச்சருடைய புளுகுப் பிரசாரத்தை வெளிப்படுத்துகிறது.

இந்தச் சமயத்தில் பழைய சம்பவங்கள் சிலவற்றை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

இந்தியாவில் விடுதலை பெறும் தருவாயில் ஈரோட்டு நாயக்கர் ''இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுக்குமுன் என்னையும் கலந்து பேச வேண்டும்'' என்று அவர் தந்தியடித்ததையும், ஆனால் பிரிட்டிஷ் மந்திரிகள் இவரைச் சட்டை செய்யாமல் போனதையும், பிறகு ஆகஸ்டு 15ம் தேதி சுதந்திர தினமாக முடிவு செய்த போது இவர் 'துக்கதினமாகக் கொண்டாடு' என்று அறிக்கை விடுத்ததையும் யாரும் மறக்க முடியாது.

அப்பொழுது தி. க.விலிருந்து தி. மு. க. பிறக்கவில்லை. அப்பொழுது தி. க. வில் அண்ணாத்துரை பொதுச் செயலாளராக இருந்தார். அவர் ஆகஸ்டு 15ம் தேதி உண்மையான சுதந்திர தினம்தான் என்று அறிக்கை விடுத்ததையும்கூட நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

'ஈரோட்டார் தேசக்கொடியைக் கொளுத்துவேன்' என்று ஆர்ப்பாட்டங்கள் செய்ததையும், அதற்காகச் சென்னை சர்க்கார் சட்டம் ஒன்று கொண்டு வந்து நிறைவேற்றியதையும், அதையும் மீறிப் பல தொண்டரடிப் பொடியார்களை ஸ்ரீ நாயக்கர் சிறைக்கு அனுப்பியதையும் யாரும் மறந்திருக்க மாட்டார்கள்.

காங்கிரஸின் பேரில் ஸ்ரீ நாயக்கருக்கு உள்ள அபிமானத்தை அவர் ஊர் ஊராகப் போய்ச் சிரிக்கச் சிரிக்க அடிக்கிறார். ''எனக்கு நாற்காலி தூக்கிப் போட்டவனுங்கெல்லாம் இன்னிக்கு மந்திரியாக வந்துட்டானுங்க'' என்றும் அவர் அபிமானத்துடன் பேசும்பொழுது மக்கள் கைகொட்டித்தான் சிரிக்கிறார்கள்.

ஆனால் ஒரே ஒரு உண்மையை மட்டும் மக்களுக்கு நாம் சொல்லித்தான் ஆகவேண்டும். சுதந்திரக் கட்சியின் பலம் பெருகி வருவதைக் கண்டு பீதியடைந்து போய்த்தான் இந்தக் காங்கிரஸ் மந்திரிகள் அவரைப் போய்க் கட்டிக் கொள்ளுகிறார்கள்.

திருவண்ணாமலை
19-5-61

கே. வி. ராமதுரை

## மறு பிறப்பு

மே 21-ந் தேதி கல்கி இதழில் வந்துள்ள 'முதல் மலர்' என்ற கதை சில நாட்களுக்கு முன்பு 'ஆனந்த விகடனில்' வெளிவந்த ஜெயகாந்தனின் 'உடன்கட்டை' என்ற கதையின் மறு பிறப்பேயாகும்.

புலியூர்
19-5-61

அகிலா ரகுபதி

## நெஞ்சம் கொதிக்கிறது

நம் இந்திய அரசாங்கம் பிரிட்டிஷ் அரசாங்கக் கொள்கைகளைத் தழுவி எவ்வளவோ காரியங்கள் செய்து வருகிறது. அதில் ஒன்று பெரிய தலைவர்கள், மேதைகள் முதலியோரின் ஸ்டாம்புகளை வெளியிடுவது. இந்தப் பழக்கம் நம் தேசத்துக்குத் தேவையானதா, அவசியமுள்ளதா? பெரியோர்களையும், மகான்களையும் கௌரவிக்க நம் தமிழ்த் திருநாட்டில் வேறு வழிகளே இல்லையா? ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் திருஉருவத்துடன் உள்ள ஸ்டாம்ப் படும்பாட்டைப் பார்த்தால் எந்தத் தமிழ் அன்பருக்கும் நெஞ்சம் கொதிக்காமல் இருக்க முடியாது.

முதலாவதாக நாம் எவ்வளவோ பக்தியுடன் போற்றுபவரின் திரு உருவத்தின்மேல் போஸ்டாபீஸில் முத்திரை குத்தி அவலக்ஷணமாக்குகிறார்கள். அடுத்தபடியாக, ஸ்டாம்பை வாங்குபவர் அதில் யார் உருவம் இருக்கிறது என்று பார்க்கிறார்? அவருக்கு இருக்கும் அவசரத்தில் அதி அவசரமாக நாக்கில் ஸ்டாம்பைத் தடவி, அந்த எச்சில் பசையுடன் ஒட்டுகிறார். இதைவிட நம் நெஞ்சம் கொதிக்கக் காரணம் வேறு வேண்டுமா? கடைசியாகக் கடிதத்தை அடைபவர் கடிதத்தை எடுத்துக்கொண்டு கவரை வீசி எறிகிறார். அந்தக் கவரின் ஸ்டாம்பின்மேல் எத்தனை பேருடைய திருவடிகளும் அகத்தங்களும் படுகின்றனவோ, அந்த ஸ்ரீராமபிரானுக்குத்தான் வெளிச்சம். பூஜை அறையில் வைத்து மலர்களாலும் தூப தீபங்களாலும் பக்தியுடன் போற்ற வேண்டிய மூர்த்தி, இப்படி அகத்தப்படுத்தப்படுவது கண்டு எந்தத் தமிழனின் நெஞ்சம்தான் கொதிக்காது?

சென்னை - 23
7—5—61

சுவாமிகளின் பக்தை

## பாரபட்சம்

ஈரோடு தாலூக்காவைச் சேர்ந்த சித்தோடு நம்பர் 58 கிராமத்தில் சாலையைச் சேர்ந்த இடத்தில் மக்கள் வீடுகளும் கடை, பந்தல் முதலியனவும் கட்டி இருப்பதாக, அதற்கான அபராதங்களைக் கட்டச் சொல்லி வருஷா வருஷம் மேற்படி தாலூக்கா தாசில்தார் நோட்டீஸ் அனுப்புவார். மக்கள் கிராம அதிகாரியிடம் அபராதத் தொகையைக் கட்டி, கலெக்டருக்கு மனுச் செய்வதுண்டு.

இந்த வருஷம் அதிகமான இடத்தைச் சொந்தமாக்கியுள்ளவருக்குக் குறைந்த அபராதமும், ஒரு செண்ட் நிலத்தில் பந்தல் மட்டுமே போட்டிருக்கும் ஏழைகளுக்கு ஓர் அணா வாங்கி வந்ததை மாற்றிப் பன்னிரண்டு ரூபாயும் கட்டச் சொல்லி உத்தரவு போடப்பட்டிருக்கிறது.

சித்தோடு
30—5—61

வி. என். சென்னகேசவலு

**பா**ட்டியின் காரியம் முடிந்து விட்டது. பேரன்தான் வந்திருந்து எல்லாவற்றையும் செய்து அவளைக் கரை ஏற்றிவிட்டான். வந்தவர்கள் எல்லோரும் அவரவர்கள் ஊருக்குப் போய் விட்டார்கள். சீனுவுக்கு இன்னும் நான்கு நாள் லீவு இருந்தது. செங்கல்பட்டில் தன்னுடன் படித்த நண்பனைப் பார்த்து வருவதற்காகப் போயிருக்கிறான். அப்படியே மகாபலிபுரம், வேடந்தாங்கல் இரண்டையும் பார்த்துவிட்டு வரலாமென்ற எண்ணம்.

பாவம்! நீலாவுக்கு 'வெறிச்' சென்றிருந்தது; வாழ்க்கையே வெறிச்சோடிப் போனதுபோல. நேற்றுவரை அவள் உலகம் எல்லாம் அவள் பாட்டிதான். சமீபத்தில்தான் கணவனுடன் குடித்தனம் செய்யத் தொடங்கி யிருக்கிறாள் அவள். அதுவரை அவளுக்குத் தாயாகவும் தகப்பனாகவும், உடன் பிறந்தவளாகவும் இருந்தவள் அல்லவா பாட்டி? பாட்டியும் ஒருநாள் நம்மைவிட்டுப் போகக்கூடும் என்று அவள் எண்ணியதே இல்லை. இப்பொழுதும் அது பொய் போலவே இருந்தது. "எல்லாம் பிரமை! பாட்டி எங்கும் போய்விடவில்லை. இதோ வந்து விடுவாள். மறுபடி யெல்லாம் பழையமாதிரி இருக்கும். எத்தனை பாசம் அவளுக்கு இந்த உலகத்திலே? அவளால் இதையெல்லாம் விட்டு விட்டுப் போய்விட முடியுமா என்ன?"—இவ்வாறு ஓடியது அவள் சிந்தனை. சட்டென்று ஊஞ்சல் பலகையைப் பார்த்தாள் அவள். என்ன ஏமாற்றம்! அது காலியாகத்தான் இருந்தது.

வருகையிலேயே வீட்டில் உள்ள ஜீவனுக்கு அது மூட்டை கட்டிக்கொண்டே வருகிறதே! இல்லையென்றால், போனவாரம் கூட நடமாடிக் கொண்டிருந்த பாட்டி இப்படி கிறுகிறுப்பும் மயக்கமுமாய்க் கண்ணைத் திறக்காமல் ஏன் படுத்துக் கிடக்க வேண்டும்?

ஜெனி புரண்டு படுத்தாள்.

"அம்மா...!"

"உம்..."

"வயிற்றுக்கு ஆகாரம் ஏதாவது..."

"உம்.... ஒண்ணும் வேண்டாம். எழுந்து உட்கார்ந்து பார்க்கட்டுமா?"

"வேண்டாம். ஊஞ்சல் பலகையிலிருந்துவிழுந்து விட்டாயானால் என்ன செய்கிறது? உனக்கு உட்காரணும் போல் இருந்தால் இறக்கிப் படுக்கையிலே விடுகிறேன். சுவரிலே சாய்ந்துகொண்டு உட்கார்ந்து கொள்..."



# அஞ்ஞானம்

து.ரா

**பே**சத் தெரிந்த நாளாக அவள் பாட்டியை 'அம்மா' என்றுதான் கூப்பிடுகிறாள்; அந்த முறை வைத்துக் கூப்பிட அவளுக்கு வேறு யாரும் இல்லாததால்...அவள் அம்மா கமலம் வைசூரி கண்டு இறந்தபோது அவள் நான்கு மாசத்துக் குழந்தை. அவள் தமையன் சீனு — அவனுக்கு நான்கு வயசு — அப்பாவிடமே இருந்தான்; அவர் மறுமணம் செய்து கொண்ட பிறகுகூட. நீலா மட்டும் கமலத்தின் தாயிடமே வளர்ந்தாள். குழந்தைக்குச் செவ்வாப்பு வேறு கண்டிருந்ததால், கழுதைப் பாலிலிருந்து புலிப்பால்வரை போட்டி வளர்த்திருக்கிறாள் பாட்டி இந்தப் பேத்தியை. அவளேதான் வரன் பார்த்து அவளுக்குக் கல்யாணத்தையும் செய்து வைத்தாள். பேத்திக்கு இப்போது நான்கு மாசம்; அதாவது அவள் வயிற்றிலுள்ள சிசுவுக்கு. அது கொள்ளுப் பேரனு, கொள்ளுப் பேத்தியா என்று கொள்ளுப்பாட்டி இருந்து பார்ப்பாளா என்பது சந்தேகமே. வயிற்றில்

அப்படியே பேத்தி இறக்கிவிடவும், படுக்கையில் உட்கார்ந்தாள் பாட்டி. நல்ல சுற்றியதோ என்னவோ; உடனே படுத்துக் கொண்டு விட்டாள்.

"நீ என்னடி பண்ணினே? வயிற்றைக் காயப் போடாதே. பிள்ளைத்தாய்ச்சிப் பெண்ணு..."

"எனக்கென்ன? நன்றாகச் சம்பிரமாகச் சாப்பிட்டிருக்கிறேன்..."

"உடனே கொல்லையிலே போய் வாயிலெடுத்தாய் போலிருக்கிறதே! சத்தம் கேட்டதே."

"ஒண்ணும் இல்லே..."

"பொய் சொல்லாதே! வயிறு காலியாயிருந்தால் ஏதாவது சாப்பிடு."

"இப்போ ஒண்ணும் வேண்டாம்மா."

"குழந்தையாட்டம் படுத்துகிறயேடி? நாளைக்கு உன் புருஷன் வந்தால், எம் மனைவி இளைச்சுப் போய் விட்டாளே என்பானே? நான்தானே பதில் சொல்லணும்?"

நீலா சிரித்துக் கொண்டாள்: "வயதானதற்கு அடையாளம் அம்மாவுக்கு நச்சு அதிகமாகி விட்டது. அப்பா என்ன நச்சு! என்ன



நச்சு!" என்று முணுமுணுத்துக்கொண்டாள்.

"என்னமோ அம்மா. எனக்கு அஞ்ஞானம். மனசு கேட்கவில்லை. கிடந்து அடித்துக் கொள்கிறது" என்றாள் பாட்டி.

பாட்டியின் வார்த்தைகள் நீலாவுக்குப் பதில் சொல்வது போல் இருந்தன. பாட்டியின் அஞ்ஞானம் பேத்திக்குப் புதிதல்ல. ஆசாபாசங்களைத் துறந்தவள் தானே ஞானி? பாட்டி இதொன்றையும் துறக்கவில்லை. எப்போதும் போலவே இப்பொழுதும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாள். எல்லோரிடமும் ஆசை, அன்பு, பாசம் அவளுக்கு. அதையே அஞ்ஞானம் என்ற பெயரால் குறிப்பிடுகிறாள் அவள்.

ஆனால் பாட்டியின் அஞ்ஞானம் ஒரு புரியாத புதிராக இருந்தது நீலாவுக்கு. அவளும் மனிதப் பிறவிதான். ஆசையும் அன்பும் பாசமும் அவளுக்கும் இருக்கின்றன. ஆனால் பாட்டி அஞ்ஞானம் என்று சொல்லிக் கொண்டு அவற்றை ஒரு கலையாகவே வளர்த்துப் பயின்று வருவதுதான் அவளுக்கு வேடிக்கையாக இருந்தது. பாட்டி வேண்டுமென்றே தன் அஞ்ஞானத்தை மிகைப்படுத்திக் காட்டுகிறாளோ என்றுகூட அவளுக்கு ஒவ்வொரு சமயம் சந்தேகம் ஏற்படும்.

அன்றொருநாள் மாவட்டக்குடியிலிருந்து முத்தையா வந்தாரே...

அன்று காலைப்பொழுது. நீலா கூடத்தில் உட்கார்ந்து கொல்லையில் பறித்த சம்பங்கி மலர்களைத் தொடுத்துக் கொண்டிருந்தாள். பச்சையிலே பொன்முலாம் பூசியதுபோல் இருக்கும் அந்த மலரின் வண்ணத்திலும், இலேசாகக் காற்றிலே வந்த அதன் நறுமணத்திலும் அவள் லயித்திருந்தபோது முத்தையா கூடத்தில் வந்து அவள் எதிரிலே நின்றார்.

அவர் நடை உடை பாவனை எல்லாமே அவர் ஒரு வடிகட்டின பட்டிக்காடு என்று கட்டியம் கூறின. முகத்திலே அசடு வழிய வாய்க்கடையிலிருந்து ஒரு பக்கம் வெற்றிலைச் சாறு வழிய அவர் சிரித்துக் கொண்டே அவளைப் பார்த்தபடி நின்றார்.

"யாரு?..."

"உனக்கு என்னைத் தெரியாது!..ஹி..ஹி.."

"தெரியாதுதான். அதனால் தானே யார் என்று கேட்டேன்" என்று நினைத்துக் கொண்டாள் நீலா.

முத்தையா மேலும் சற்று நேரத்துக்குச் சும்மா நின்றார், தம் அசட்டு வெள்ளத்தை வழிய விட்டுக்கொண்டு.

"ஏனம்மா! நீ லக்ஷ்மியின் பேத்திதானே?"

"ஆமாம். நீங்க...?"

"நான் யாருன்னு உனக்குத் தெரியாது! ஹி...ஹி...ஹி..."

அட, கஷ்ட காலமே!

இந்தச் சமயத்தில் சமையலறையிலிருந்து 'சொய்...சொய்...' என்று சத்தம் வந்தது. பாட்டி அப்பளம் பொரிக்கிறாள்.

"ஓ! அக்கா அடுக்களையிலே இருக்காளோ?" என்றார் முத்தையா.

தாம் யார் என்பதை வெளியிடாமல் மர்மமாகவே நிறுத்திக்கொண்டு அடுக்களை வாசலில் போய் நின்றார், இரண்டு கைகளையும் வாசற்படியில் ஊன்றிக்கொண்டு.

பாட்டிக்கும் அவருக்கும் நடந்த பேச்சைக் கவனித்தாள் நீலா. பாட்டிக்கு எப்போதுமே மெதுவாகப் பேச வராது. நாட்டுப்புறத்திலிருந்து வந்த முத்தையாவுக்கோ மெதுவாகப் பேசுவது என்று ஒன்று இருக்கிறது என்பதே தெரியாது. கேட்பானேன்!

"என்ன அக்கா! சௌக்கியமா?..."

"யாரு? முத்தையாவா? வா, வா, வா; எப்போ வந்தாய்? ஊரிலே எல்லோரும் சௌக்கியமா?"

"வந்தேன்...ஹி...ஹி...ஹி!"

"என்னடா முத்தையா இப்படிக் கிழவனாகப் போய்விட்டாயே நீ! அடையாளம் தெரியவில்லையே! யாரோவென்று நினைத்தேன். முதலில் தலையெல்லாம் தும்பைப் பூவா!—புருவம்கூட அல்லவா நரைத்துப் போய்விட்டது. ஏண்டா; உடம்பெல்லாம் சுருக்கம் சுருக்கமாக!..."

"ஏன் அக்கா வயசாகவில்லே? பெரியப்பா வீட்டு ஆளோடியிலே பாண்டியாடிக்கொண்டு இருந்தோமே, அந்த வயசா இப்பவும் நமக்கு...?"

"அது சரி; நான் பாட்டி ஆகி இருபது வருஷங்கள் ஆகின்றன. நீ தாத்தா ஆவதற்கு வயசாகல்லியா? ஏண்டா ஊரிலே எல்லோரும் சௌக்கியந்தானே? நீ எப்போ வந்தே?"

"வந்தேன். ஹி...ஹி...ஹி..."

பேசுகிறவர்களுக்கு அலுக்கவில்லை. இதே ரீதியில் ஓயாமல் பேசினார்கள். கேட்டுக்கொண்டிருந்த நீலாவுக்குத்தான் அலுத்துப் போய்விட்டது.

'ஊரிலே எல்லாரும் சௌக்கியமா என்று எத்தனை தரம்தான் கேட்பாள் இந்த அம்மா? யாராவது காலமாகி விட்டார்கள் என்று இந்த முத்தையா மாமா சொல்கிற வரைக்கும் திருப்தி ஏற்படாதுபோல் இருக்கிறதே இவளுக்கு!' என்று அவள் எண்ணினாள். இதைப் பற்றி அப்புறம் பாட்டியை அவள் கேட்டபோது, "என்னமோ அம்மா; எனக்கு மனசு கேட்கவில்லை. அஞ்ஞானம்! ஒரு தரத்துக்கு நாலு தரமாக விசாரித்தால்தான் திருப்தியா யிருக்கு" என்றாள் பாட்டி.

முத்தையா காப்பி சாப்பிட்டார். குளித்து விட்டு வந்தார். பாட்டி மறுபடியும் பேச்சைத் தொடர்ந்தாள்.

"முத்தையா! உனக்குப் பிஞ்சுக் கத்திரிக்காயை எண்ணெயிலே வதக்கிக் கறி பண்ணினால் பிடிக்குமோ, இல்லையோ? இப்போ கத்திரிக்காய் காலமில்லை. ஏதோ கிடைத்ததை வாங்கி வந்தேன். எண்ணெய்க் கறி பண்ணுகிறேன். சாப்பிடு..."

"ஏன் அக்கா! உனக்குந்தான் எண்ணெய்க் கறி ரொம்பப் பிடிக்குமே!"

"ஆமாம். எனக்குந்தான் பிடிக்கும். நீ ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாயே! நம் ஊரிலே ராமப்பன் தோட்டத்துக்காய் வெண்ணெயாய் இருக்கும்!"

எங்கேயோ தூரத்துச் சிற்றப்பாவின் பிள்ளைக்குப் பாட்டி செய்த உபசாரம் முத்தையாவைத் திணற அடிக்கவில்லை. அது சர்வ சாதாரணமாக இருந்தது அவருக்கு. ஒரு வார்த்தை அவர் மறுத்துப் பேசாமல் பாட்டி செய்த உபசாரத்தை யெல்லாம் ஏற்றுக் கொண்டார். ஒரு வாரம் வரை அவர்கள் வீட்டில் சம்பிரமமாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்து விட்டுத்தான் போனார் தம் ஊருக்கு.

பாட்டியின் அஞ்ஞானம் மனிதர்களைப் பொறுத்த வரையில்தான் என்பதில்லை. வீடு வாசல், பாத்திரம், பண்டம், நகை நட்டு எல்லாவற்றையும் அது வியாபித்துக் கொண்டிருந்தது.

"அம்மா!..." என்பாள் நீலா.

"ஏண்டி அம்மா?"

"இந்தப் பருப்பு வேக வைக்கிற குண்டு இருக்கே, ரொம்பவும் தேய்ந்து நசுங்கிப் போய் விட்டதே...அதைப் போட்டுவிட்டு வேறு ஒன்று வாங்கினால் என்ன?"

"கோதாவரிக் குண்டையா? சேச்சே! ஆகி வந்த குண்டு அது. அதுக்கு என்ன வயசாச்சு தெரியுமோ? உன் அம்மா இருந்தா அவளுக்கு என்ன வயசோ, அவ்வளவு! நாலுமாசக் குழந்தை அவள். உங்கள் தாத்தா பெஜவாடாவில் வேலையாக இருந்தார். ஒரு சமயம் ராஜமகேந்திரத்துக்கு 'காம்ப்' போயிட்டு வந்தபொழுது வாங்கிக்கொண்டு வந்தார்."

நீலாவுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

'நேற்று நடந்த விஷயம் நமக்கு ஞாபகம் இருக்கிறதில்லை. மறந்து போகிறது. இந்த அம்மா எப்படி இவ்வளவு காலத்து விஷயங்களையெல்லாம் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறாள்? ஒருவேளை அம்மா இப்படியெல்லாம் சொல்லிவைக்கிறாளோ, நமக்கு ஒன்றும் தெரியாதே என்று?...'

பாட்டியின் வாயைக் கிளற வேண்டுமென்று அவள் மேலும் கேட்டாள்.

"ஏம்மா; அப்போ இந்தக் காப்பி பில்டரை யாவது போட்டுவிட்டு வேறு வாங்குவோமா? சின்னதாக அழகாக ஒன்று வாங்கினால் போகிறது! என்னத்துக்கு இவ்வளவு பெரிசு நமக்கு...!"

"உம்ம்...பழசாயிடுத்தேன்னு சொல்றியா? பழசானால் என்ன? டிகாக்ஷன் இன்னும் பேஷா இறங்குகிறது. கும்பகோணத்தில் இருந்து எனக்காகக் கிச்சாமி மெனக்கெட்டு வாங்கி வந்தான், போன மாமாங்கத்துக்கு முந்தின மாமாங்கத்தின்போது. 'மாமாங்கத்துக்குப் போறேன் அத்தை! உனக்கு என்ன வேணும்' என்று கேட்டான். நல்லதாக ஒரு



'' எனக்கு இரண்டு மனைவிகள் சார்!''
'' சந்தோஷமா இருக்கிறீர்களா ?''
'' எங்கே சார் ! கஷ்டம்தான். ஒருத்தி கோபித்துக்கொண்டு பிறந்தகம் போய் விட்டா ! இன்னொருத்திக்குக் கோபமே வரமாட்டேங்கறது !''

காப்பி பில்டர் வாங்கி வந்து கொடு என்று சொன்னேன்.'' பாட்டி இவ்வாறு மேலே மேலே பேசிக்கொண்டே செல்வாள்.

'பாத்திரம் பண்டங்களிடம் இந்தக் கிழவிக்கு என்ன பாசம்? இப்படியும் ஓர் அஞ்ஞானமா? இந்த அஞ்ஞானத்தையாவது விலக்கிக்கொண்டு ஞானத்தை அடைந்தால் என்ன?' என்று சிந்திக்கத் தொடங்குவாள் பேத்தி நீலா.

• • •

''என்ன நீலா? தூங்குகிறாயா என்ன?''

தூக்கத்திலிருந்து சட்டென்று விழிப்பவள் போல் திடுக்கிட்டாள் நீலா. தூக்க மயக்கம் அல்ல அவளுக்கு. சிந்தனை மயக்கம்தான்.

பாட்டியின் குரல் என்று நினைத்தவள் ஏமாந்து போனாள். சீனுவின் குரலா இப்படிப் பாட்டியின் குரல்போல் இருந்தது? ஏன் இருக்கக் கூடாது? பாட்டியின் பேரன்தானே அவன்? இல்லை, அவள் செவிப்புலன்தான் அவளை ஏமாற்றி விட்டதோ? அப்படியும் இருக்கலாம். எதை மனம் ஆவலுடன் எதிர் பார்க்கிறதோ அந்தப் பிரமையை யல்லவா உண்டு பண்ணுகின்றன புலன்களும்?

''என்ன சீனு; வந்துவிட்டாயா ? போய்க் குளித்துவிட்டு வா. இலை போடுகிறேன்...'' என்றாள் அவள் எழுந்து கொண்டே.

சீனு சிரித்தான்.

'என்ன, சாதமா? நான் சாப்பிட்டுவிட்டே வந்து விட்டேன் நீலா !'' என்றான்.

''சாப்பிட்டு விட்டே வந்துவிட்டாயா?''

''ஆமாம்; இப்போ வரப் போகிறேன் என்று சொல்லாமலே வந்தால், இங்கே சாப்பாடு தயாராக இருக்குமா, என்ன? சாதம் போதும் போதாததுமாக இருந்தால் நீ மறுபடியும் அடுப்பு மூட்டி எனக்காகச் சமைக்கத்தானே வேண்டும்? அதனால் ஹோட்டலிலேயே சாப் பிட்டுவிட்டு வந்து விட்டேன்.''

'' நல்ல காரியம் செய்தாய் போ! ஒரு வருக்குச் சமைக்கிறது என்ன கஷ்டம்? ஒரு நிமிஷத்திலே நீ குளித்துவிட்டு வருவதற் குள்ளே சாதம் வடித்துவிட மாட்டேனா?''

''சந்தானம் ஆபீசுக்குப் போய் விட்டானோ? ஊரிலேதானே இருக்கிறான்? இல்லை டூர்... கீர்...ஏதாவது...?''

''இல்லை, ஆபீசுக்குத்தான் போயிருக்கிறார். அடுத்தவாரம் தான் போவார்போல் இருக் கிறது சேலத்துக்கு. ராத்திரியாவது நீ அவ ரோடு சேர்ந்து சாப்பிடு. வந்து ஒருநாள்கூட இரண்டு பேரும் சேர்ந்து சாப்பிடவேயில்லை.''

''நானா? நான் மத்தியானம் மூன்றரை மணி பாசஞ்சரில் போகிறேனே. ஊரிலே பாமாவும் குழந்தையும் தனியாக இருக் கிறார்கள் பாரு. குழந்தைக்கு வேறு உடம்பு சரி இல்லையாம்?...''

''ரொம்ப நன்றாயிருக்கிறது போ! பாமா வையும் அழைத்துக்கொண்டு வராமல், வந்து விட்டு வந்ததும் வராததுமாக நீயும் இப்படி உடனே போகிறாயே?...''

''என்ன பண்ணுகிறது, சொல்லு. குழந் தைக்கு உடம்பு ரொம்பக் கேவலமா இருக் கிறது. இல்லை என்றால் பாமாவை அழைத்துக் கொண்டு வராமல் வருவேனா? நீ வீட்டிலே தனியாக இருக்கிறாயே நீலா? ஒரு பேச்சுத் துணைக்காவது வீட்டிலே ஒரு கிழவி இருந்தாள். இனிமே அவள்கூட இல்லை.''

''என்ன பண்ணுகிறது? வேலைக்காரியைத் தான் வீட்டோடு இருக்கச் சொல்லணும் இனி மேல்.'' நீலாவின் கண்களில் நீர் முட்டியது.

சீனுவும் போன பிறகு நீலாவின் மனசிலே ஏக்கம் குடிபுகுந்தது. பாட்டியைப் பற்றிய எண்ணங்களைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டே யிருந்தது அவள் சிந்தனை. உடன் பிறந்த தமையன் ஒருவன்தான். அவனும் யாரோ வேற்று மனிதனைப் போல் உபசார மாகப் 'போய் வருகிறேன்' என்று சொல்லிக் கொண்டு போய் விட்டான். உடன் பிறந் தவள் இந்த நிலையில் இருக்கிறாளே என்று அவன் எண்ணியதாகவே தெரியவில்லை. பிள்ளைப் பேற்றுக்காவது தன்னிடம் வரும் படியும் அவளை அழைக்கவில்லை.

''நாமும் அப்படித்தானே நடந்து கொண் டோம் அவனிடம்?'' என்று எண்ணமிட்டாள் நீலா. பாட்டி இருந்தால் இப்படி அவனைப் போக விட்டிருப்பாளா? 'உங்கப்பா இருக் கிறார் வீட்டிலே பாமாவுக்கும் குழந்தைக்கும் துணையாக. நீ பத்துநாள் இங்கே இருந்து விட்டுத்தான் போகணும். இல்லேயோ தெரி யும் சேதி!' என்று அவனை மடக்கிப் போட்டிருப்பாளே !

பாட்டி போய் விட்டாள். அவள் மட்டுமா போனாள்! அவளுடன் அவள் தலைமுறையே போய்விட்டது: அவள் அஞ்ஞானம் போய் விட்டது: ஆசை, பாசம், அன்பு, எல்லாம் போய்விட்டன.

சிந்திக்கச் சிந்திக்க நீலாவின் மனசில் ஏக்க மும் குழப்பமும் அதிகரித்தன. எது ஞானம், எது அஞ்ஞானம் என்று புரியாமல் விழித் தாள் அவள்.

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப்படுத்துகிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆஸ்மோஸ்கோப்" பரிசைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட <u>மிகத்தீவிரமாக</u> வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபிலின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபிலின் பூரண தன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலேயே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!




வேறு எந்த பற்பசையிலும்
இதைவிட அதிக வீரிய குளோரோபில்
இல்லை — குழந்தைகள் அதன்
பெப்பர்மின்ட் வாசனையை மிகவும்
விரும்புகிறார்கள்!




பெரிய எக்கானமி
சைஸ் லாபகரமானது!

SPA-6-10 TAM.

இருபத்தைந்தாண்டுகளாக மக்களுக்கு அகில இந்திய ரேடியோ கலை, சங்கீதம், இலக்கியம் ஆகிய துறைகளில் அருந்தொண்டாற்றி வந்திருக்கிறது. ஜூன் 8-ந் தேதி பல விசேஷ நிகழ்ச்சிகள் நடத்தி வெள்ளி விழாவைச் சிறப்பாகக் கொண்டாடுகிறது. ரேடியோ ஆரம்ப காலத்தில் பணியாற்றியவர் இக்கட்டுரையின் ஆசிரியர். அவர் எழுதிய பல ரஸமான நிகழ்ச்சிகளடங்கிய இந்தக் கட்டுரையை வெளியிட்டு, அகில இந்திய ரேடியோவின் சேவை மேலும் பல்கிப் பெருகி வளர வாழ்த்துகிறோம்.

—ஆசிரியர்

# ரேடியோ—சில ரஸமான நிகழ்ச்சிகள்

ரா. அ. பத்மநாபன்

'**ப**ழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல, கால வகையினானே' என்பது இலக்கண சூத்திரம். ரேடியோவினால் நமது சங்கீதப் பழக்க வழக்கங்கள் எப்படி மாறி வந்துள்ளன என்பது இதற்கு ஒரு சான்று.

ஏழு, எட்டு மணி நேரம் பாடும் வழக்கமுள்ள வித்துவான்களை மூன்று நான்கு மணி நேரக் கச்சேரி செய்யுமாறு சங்கீத சபைகள் சிரமப்பட்டு வற்புறுத்தி வந்த சமயம். ரேடியோவில் அதிகப்படி ஒன்றரை மணி நேரம்தான் கச்சேரி செய்ய முடியும் என்றும், இதர இசை நிகழ்ச்சிகள் அரை மணி, முக்கால் மணிதான் இருக்கும் என்றும் தெரிந்ததும் பல வித்துவான்கள் ஏமாற்றமடைந்தார்கள். "இது நடக்கும் காரியமா?" என்று அவர்கள் வாதித்தார்கள்.

அது மட்டுமல்ல; ரேடியோ, மின்சாரத்தினால் இயங்குவது, மைக்ரபோன் முன் பாடுவது ஆயுளைக் குறைத்து விடும் என்று நம்பியவர்களும் உண்டு!

சுதந்திரமாய் வாய் வார்த்தையாகக் கச்சேரிக்கு ஒப்பந்தம் செய்துகொள்ளும் வித்வான்களை, 'ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்துப் போடுங்கள். பாடப் போகும் பாடல்களின் அட்டவணை கொடுங்கள்' என்று கேட்கும் போது, அக்காலத்தில், "இதென்ன தொல்லை! இதற்கு எழுத்தில் ஒப்பந்தம் எதற்கு? பாடியதும் பணத்தைக் கொடுங்கள் வாங்கிக் கொள்ளுகிறோம். நீங்கள் முன்பணம்கூடத் தருவதில்லையே, ஆட்சேபிக்கிறோமா? 'செக்'காகத் தருகிறீர்களே, எங்களுக்கு பாங்க் அக்கவுண்ட் இருக்கிறதா? இது தான் போகட்டும் என்றால், பாட்டு ஜாபிதா எதற்கு? மனோதர்மம் போலப் பாடினால் தானே கச்சேரி எடுப்பாக இருக்கும்?" என்று வித்துவான்கள் சொல்வார்கள்! "இந்த உபத்திரவமெல்லாம் ஏற்றுக்கொண்டாலும் கச்சேரியை ஒரு மணி நேரம், ஒன்றரை மணிநேரம் என்று கடிகாரத்தைப் பார்த்து நிறுத்துவது எப்படி? கச்சேரி சூடு பிறக்கவே ஒரு மணி நேரமாகி விடுமே!" என்று முணகியவர்கள் பலர்.



பாட்டு அட்டவணையை நிலைய நிர்வாகிகள் சிறிது மாற்றி விட்டாலும் போச்சு. "காலையில் ஆஹிரி ராகமா! சோறு கிடைக்காதய்யா! நாயகியைத் தர்பார் பக்கத்தில் ப்பாட்டு விட்டீரே! எடுத்தவுடன் காலையில் பிரதிமத்திம உருப்படியா? இதென்ன எல்லாம் சதுச்ருதி ரிஷபமா இருக்கே. அத்தனையும் சம்பிரதாயத்துக்கு விரோதமாச்சே. இந்தநிகழ்ச்சி அட்டவணை அமைத்த ரேடியோ நிர்வாகி சுத்த சங்கீத ஞான சூனியம் போல் இருக்கே!" என்று வித்துவான்கள் குறைப்படுவார்கள். கர்நாடக சங்கீதம் ரேடியோவினால் சீர்குலைந்து போகும் என்றும் சத்தியம் செய்வார்கள்!

இன்னும் சில வித்துவான்களுக்கு, முன்னால் பெரிய சபை இல்லாமல் பாடுவது மிக சிரமமாக இருந்தது. "ஏன் சார், என் பாட்டு பூராவும் ரேடியோவில் போச்சோ? யாராவது கேட்டிருப்பார்களோ?" என்று அவர்கள் கவலையோடு கேட்பார்கள்.

மூடப்பட்ட ஓர் அறையில், முன்பின் அறியாத ஒரு புருஷருடன் (அறிவிப்பாளருடன்) இருப்பதற்குச் சங்கோசப்பட்ட பாடகிகள் பலர். இதைத் தவிர்க்க அவர்களுடன் வரும் பெரியவர்கள் தாங்களும் ஸ்டுடியோவில் இருந்தாக வேண்டும் என்று கண்டிப்பாய்ச் சொல்வார்கள்.

அறிவிப்பாளர், "ஸ்டுடியோவில் சிவப்பு விளக்கு எரியத் தொடங்கி விட்டால் பேசக் கூடாது. உங்கள் பெயரையும் முதல் பாட்டையும் அறிவிப்பேன். பிறகு நீங்கள் பாட ஆரம்பிக்க வேண்டும். அறையிலுள்ள யாரும் பேசவோ, தும்மவோ கூடாது" என்று முன்னதாகவே சொல்லியிருப்பார். இருந்தாலும், ஸ்டுடியோவில் சிவப்பு விளக்கு வந்ததும், பாடகியின்கூட வந்துள்ள பெரியவர்கள், "அம்மா, நீ தயாராக இரு!" என்று எச்சரித்துள்ள சமயங்கள் பல.

அறிவிப்பாளர் என்றால் பேசுபவர் என்று பொருளென்றாலும், அவர் பொதுவாக ஊமையாகவே இருக்க வேண்டியிருக்கும். ஊமை ஜாடைகளில் அவருக்கு நல்ல பரிச்சயம் இருக்க வேண்டும். பாடிக் கொண்டிருக்கும் பாடகர் அல்லது பாடகியிடம் தாம் தெரிவிக்க வேண்டியதை யெல்லாம் சைகையினாலேயே காட்டத் தெரிந்திருக்க வேண்டும் அறிவிப்பாளருக்கு. ஆனால் அவர் தெரிவிக்க வேண்டிய விஷயங்கள் சைகையில் எளிதில் புரியக் கூடியவைகளா? இல்லை. உதாரணமாக, "அதி வேகமாய்ப் பாடுகிறீர்கள், மெது

வாய்ப் பாடா விட்டால் போட்டிருக்கும் பாட்டுகள் மட்டுமல்ல, அதிகப்படியாகக் கொடுத்துள்ள சில பாட்டுகளையும் பாடினால் கூடக் கச்சேரி முன்னதாகவே முடிந்து விடும்'' என்றோ, '' தலையை ரொம்ப ஆட்டாதீர்கள், மைக்ரோபோனில் பாடுங்கள்'' என்றோ, '' ஸ்டுடியோவில் பொடிகூட நீங்கவதோ தும்முவதோ கூடாது, தெரியாதா?'' என்றோ, '' ஐயய்யோ, ஆலாபனை, ஸ்வர விஸ்தாரம் இதற்கெல்லாம் நேரமில்லை. இன்னும் அரை நிமிஷமே இருக்கிறது'' என்றோ, '' நீங்கள் கேட்பது காப்பியா, டீயா, ஜலமா?'' என்றோ எப்படிச் சைகையால் கலபத்தில் காட்டுவது? பல சமயங்களில் அறிவிப்பாளரின் சைகைகள் எதிர்பாராத பலன்களை அளித்ததுண்டு.



தோல்வியாக முடிந்ததாக நினைத்து விடுவதுண்டு. கச்சேரியின் முடிவு அறிவிப்பு ஆகி ஸ்டுடியோவின் சிவப்பு விளக்கு அணைவதற்கு முன்பே '' ஸார்! கச்சேரி எப்படி?'' என்று அவர்கள் கேட்டு விடுவார். இவ்வார்த்தைகளும் ஒலி பரப்பாகிவிடும்!

ஒரு சமயம் அறிவிப்பாளர் '' இந்தப் பாட்டையே நீடித்துப் பாடுங்கள்'' என்று சைகை காட்டினார். பாவம், இளம் பாடகர் பயந்து போய், பாடிக் கொண்டிருந்த பாட்டைப் பாதியில் நிறுத்திவிட்டு, '' டைம் ஆயிடுத்தா?'' என்று கேட்டு விட்டார். அதுவும் ஒலி பரப்பாயிற்று. நிகழ்ச்சி முடியவோ இன்னும் மூன்று நிமிஷங்கள் இருந்தன!

மற்றொரு சமயம், '' விரிவாகப் பாடுங்கள்'' என்று அறிவிப்பாளர் சைகை காட்டியதைத் தமது பருத்த சரீரத்தை அவர் கேலி செய்வதாக எடுத்துக் கொண்டு விட்டார் பாடகர். இதைப் பற்றி நிலைய அதிகாரியிடம் புகாரும் செய்தார் அவர்.

துடை மேல் வலுவாய்த் தாளம் போடும் பழக்கமுடைய ஒரு வித்துவான் எழுப்பிய ஓசை ரேடியோவில் இடி போல் கேட்டது. அறிவிப்பாளர் ஸ்டுடியோவெல்லாம் தேடி ஒரு மிருதங்கக் கம்பளி உறையைக் கண்டு பிடித்துப் பாடகரின் துடை மேல் விரித்து நிலைமையைச் சமாளித்தார்.

சில பாடகர்கள் கண்ணை இறுக மூடிக் கொண்டு பாடுவதுண்டு. இவர்களிடம் சைகை பாஷை பலிக்காது; இவர்களைத் தட்டி, மைக்ரபோனை விட்டு நெடுந்தூரம் அவர்கள் நகர்ந்து விட்டதை உணர்த்த வேண்டியிருக்கும்.

நேரத்தில் முடிப்பதற்காக வேகமாய்ப் பாடும்படி அறிவிப்பாளர் கைகாட்டியதும், ஒரு பாடகர் சட்டென்று பாட்டை நிறுத்தி விட்டு எழுந்து போக ஆயத்தமானார்!

அறிவிப்பாளர், '' அடுத்தபடி மருகேலரா கீர்த்தனை, ராகம்...'' என்று சொல்லி முடிப்பதற்குள் '' ஜயந்தி ஸ்ரீ '' என்று சொல்லிக் கொடுத்தார் ஒரு வித்வான். மற்றொருவர் நடுப்பாட்டில், '' ஸார்! கொஞ்சம் ஸ்வரம் பாடலாமோ?'' என்று விநயமாய் அறிவிப்பாளரைக் கேட்டார்.

சில பாடகர்கள் ஸ்டுடியோவில் நுழையும் போது 'கும்'மென்று ஸெண்ட் வாசனை தலைவைச் சுற்று வைக்கும்; சிலரது முக சேஷ்டைகள் சிரிப்புத் தரும்; பொழுதுபோக்காக அறிவிப்பாளர் தாளம் போட்டால், தங்கள் தாளம் பிசகோ என்று சிலர் தட்டுத் தடுமாறுவார்கள்.

அகில இந்திய ரேடியோவின் சரித்திரத்திலேயே ஒரே ஒரு தடவைதான் என்று நினைக்கிறேன், இசை நிகழ்ச்சி ஒன்றை நடுப் பாதியில் ரத்து செய்ய வேண்டி வந்தது. திருச்சி நிலையத்தில் இது நடந்தது. பிற்பகல் ஒரு மணி முதல் ஒன்றரை வரை பாட்டு. ஒருவர் பாடிக் கொண்டிருந்தார். ஆரம்பத்திலேயே சுருதி சேரவில்லை. முதல் பாட்டை ஒருவாறு முடித்து விட்டார். அடுத்த பாட்டைப் பாட ஆரம்பித்தபோது பொறுக்க முடியாமல் போயிற்று. நிலைய அதிகாரி மேல் மாடியிலிருந்து ஓடோடி வந்து, அந்த ஸ்டுடியோ நிகழ்ச்சி வானில் போகாமல் செய்து, இசைத்தட்டுகளைப் போட்டுக் காலத்தை நிரப்ப ஏற்பாடு செய்தார். பாடகர் முழு நேரமும் 'பாடி' முடித்து 'செக்'கும் வாங்கிக் கொண்டு போனார்! அவரது நிகழ்ச்சி வானில் போகாததை அவர் பின்னரே அறிந்தார்!

இந்தப் பாடகரும் தக்கபடி சோதிக்கப்பட்டே தேர்ந்தெடுக்கப்பட்டவர்தாம். ஆனால் இவரைச் சோதித்தபோது, பரீட்சைக் காலப் பதினைந்து நிமிஷங்களுக்கு ஒரு பாட்டை நன்றாகவே பாடினார். அவருக்குத் தெரிந்தது அந்த ஒரு பாட்டுத்தான்! பரீட்சையின் போது, காலத்தை நீடித்து, இன்னும் ஒரு பாட்டு பாடச் சொல்லியிருந்தால் குட்டு வெளிப்பட்டிருக்கும்!

நல்ல பாட்டைவிட சாதாரணப் பாட்டையே அதிகம் கேட்க வேண்டியிருக்கும் அறிவிப்பாளர் தாம் செவிடாக இருந்திருக்கலாகாதா என்று நினைக்க வைக்கும் கட்டங்களும் வரும். பல கத்துக்குட்டிப் பாடகர்கள் அறிவிப்பாளரது முக பாவத்தைக் கொண்டே தங்கள் நிகழ்ச்சி வெற்றியாக அல்லது



கிராம நிகழ்ச்சி விஷயங்களைச் சலிப்புத் தட்டாமல் நேயர்களுக்கு அளிப்பதற்காகத் திருச்சி நிலையம் தொடங்கி வைத்த கற்பனைக் கிராமம் ஏதோ உண்மையான கிராமம் தான் என்று பல நேயர்கள்

அதன் பெயர் விலாசம் கேட்டு விசாரித்ததுண்டு! கிராம நிகழ்ச்சியில் அசல் கிராமவாசிகள்போல் நாள்தோறும் பேசும் நடர்களில் பெரும்பாலோர் காலேஜூம் ஹைஸ்கூலும் படித்த பக்கா பட்டண வாசிகள் என்பதை அறிந்தால் நேயர்கள் என்ன நினைப்பார்களோ!



அசல் கிராமவாசிகளுக்குப் பதிலாகக் கற்பனைக் கிராமவாசிகள் நடித்துப் புகழ் பெற்றாலும், அசல் நாய், பூனை, கழுதைகளுக்குப் பதிலாக மனிதர் அம் மிருகங்கள்போல் நடித்தால் சிறப்பாயிருப்பதில்லை, எல்லாம் பொய் என்பது எளிதில் தெரிந்து விடுகிறது. திருச்சி நிலையம் ஒலிபரப்பிய ஒரு நீண்ட நாடகத்தில் கழுதை சுபசகுனமாகக் கத்துவதாய் ஆசிரியர் ஒரு வரி எழுதித் தள்ளிவிட்டார். கழுதை கத்துவதை எப்படிக் காட்டுவது? வெகுநேரம் யோசித்து, அசல் கழுதை ஒன்றை ரேடியோ நிலையத்துக்குக் கொண்டு வந்து அதன் குரலை ஒலிப்பதிவு செய்யத் தீர்மானித்தோம். கழுதை வந்தது. அதன் சொந்தக்காரரும் கூட வந்தார். கழுதையை ஒரு மரத்தில் கட்டி விட்டு, ஒலிபரப்புக் கருவியைத் தயாராக வைத்துக் கொண்டு மைக்ரபோனும் கையுமாக நாடகத் தயாரிப்பாளர் நின்றுகொண்டேயிருந்தார்; ஒலிப்பதிவுக் கருவியை எந்த நிமிஷத்திலும் இயங்கச் செய்வதற்காக நிலைய எஞ்சினீயர்களும் காத்துக் கொண்டிருந்தனர். ஆனால் கழுதை வாயைத் திறக்க வேண்டுமே! அதன் காதில் கட்டெறும்பை விட்டது கூடப் பயன்படவில்லை. ஒரு மணி நேரம் இவ்வாறு நின்று அலுத்துப் போய் எல்லாரும் சற்று அப்பால் போன சமயம், எங்கோ தொலைவில் வேறொரு கழுதையின் குரல் கேட்டுப் பிரமாதமாய்க் கத்தியது, மரத்தில் கட்டப்பட்டிருந்த கழுதை. ஆனால் ரேடியோ அதிகாரிகள் ஓடோடி வந்து ஒலிப்பதிவுப் பெட்டியை இயக்குவதற்குள் கழுதை ஓய்ந்து விட்டது! கடைசியில் ஒரு நாள் முழுதும் உயிரை வாங்கி விட்டு, மாலையில் கழுதை எல்லாருக்கும் திருப்தியாகும் வரை கத்தியது. கழுதைக் குரல் பிரமாதமாக ஒலிப்பதிவாகி, நாடகத்தில் சிறப்பாக உபயோகிக்கப்பட்டது.

ஸ்டுடியோவுக்கு வேறு சில ஜீவராசிகளும் விஜயம் செய்துள்ளன. ஒருநாள் திருச்சி நிலையத்தில் முதல் ஸ்டுடியோவில் இசை நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. திடீரென்று வயலின் வித்வான் எழுந்து நின்று வாசிக்க ஆரம்பித்தார். மற்றவர்களெல்லாம் உட்கார்ந்து கொண்டு கச்சேரியை நடத்திக் கொண்டிருந்தார்கள். இவர் மட்டும் இவ்வாறு விசித்திரமாய் எழுந்து நிற்பானேன் என்று அறிவிப்பாளர் அருகில் சென்று கவனித்தார். வயலின் வித்வான் உட்கார்ந்திருந்த இடத்துக்கருகில் ஒரு செந்தேள் க[illegible]மாகக் கொடுக்கைத் தூக்கிக் கொண்டு நின்றது! நடந்து கொண்டிருந்த பாட்டு முடிந்ததும் ஸ்டுடியோவின் மைக்ரபோன்களை மூடச்சொல்லி, தேளை அடித்து, தொடர்ந்து கச்சேரி நடத்தினார்கள்.



எவ்வளவோ இடையூறுகள் இருந்தாலும் தடை ஏற்படாமல் தினந்தோறும் பல மணி நேரம் வாரத்துக்கு ஏழு நாட்களும் ஒலிபரப்பு வேலையை நடத்தி வைக்கின்றனர் நிலைய ஊழியர்கள். பண்டிகை நாளோ, விசேஷ நாளோ அவர்களுக்கு இல்லை; அதற்கு மாறாக அன்று தான் வேலை அதிகமாக இருக்கும்!

எனக்குத் தெரிந்து திருச்சி நிலையம் ஒலிபரப்பு நடத்தியுள்ள 22 வருஷ காலத்தில் மூன்றே மூன்று நாட்கள்தான் ஒலிபரப்பு நடக்காமல் தடங்கல் ஏற்பட்டிருக்கிறது. இந்த மூன்று நாள் கட்டாய ஓய்வு, நிலையம் திறக்கப்பட்ட 1939-ம் வருஷமே நடந்தது. அந்த வருஷம் பெய்த கடும் மழையில் திருச்சியை அடுத்த திருவெறும்பூரில் ஒரு சிற்றாறு உடைப்பெடுத்துக் கொண்டு அந்தப் பக்கத்தையே வெள்ளக் காடாக்கி விட்டது. திருவெறும்பூரில் தான் திருச்சி நிலையத்தின் ஒலிபரப்புக் கருவிகள் இருந்தன. இந்தக் கருவிகள் உள்ள கட்டடங்களில் கழுத்தளவுக்குத் தண்ணீர். நுல்லியமான கருவிகளில் தண்ணீர் புகுந்து அவை இயங்கவில்லை. திருவெறும்பூர் வெள்ளத்தின்போது சென்னையிலிருந்து திருச்சிக்கு வந்து கொண்டிருந்த போட்மெயில் வண்டி திருவெறும்பூர் ஸ்டேஷனில் நின்று விட்டது. இருபுறமும் ரயில் பாதையில் உடைப்பு. வயலின் வித்வான் ராஜமாணிக்கம் பிள்ளை திருச்சி நிலையத்தில் ஒரு கச்சேரி செய்வதற்காக இந்த ரயிலில் வந்தார்.



திருச்சி நிலைய அதிகாரிகள் ஸ்ரீரங்கத்திலிருந்து ஒரு பரிசலை இரவல் வாங்கி, அதை ஒரு ஜீப்பின் மேலே கவிழ்த்து எடுத்துச் சென்று, ராஜமாணிக்கம் பிள்ளையையும் உடன் வந்திருந்தவர்களையும் பரிசலில் ஏற்றித் திருச்சிக்கு அழைத்துச் சென்றார்கள்.

இதுபோன்ற பல சம்பவங்களால் சென்னை, திருச்சி ரேடியோ நிலையங்கள் தமிழ் மக்கள் தினசரி வாழ்க்கையில் இடம் பெற்று விட்டன; ஒன்றி விட்டன. இதுவே ரேடியோவுக்குத் தக்க புகழ்மாலை.

# மணிபல்லவம்

## நா. பார்த்தசாரதி

### 3. வீதியில் நிகழ்ந்த விரோதம்

தன்னைக் காப்பாற்றியது இளங்குமரனே என்பது தந்தையாருக்கும், நகைவேழம்பருக்கும் தெரிய நேர்ந்து அதன் காரணமாய் இளங்குமரனுக்குத் துன்பம் வரக்கூடாதே என்பதுதான் சுரமஞ்சரியின் பயமாக இருந்தது. அந்தப் பயத்துடனேயே துறைமுகத்திலிருந்து தேரில் மாளிகைக்குச் சென்றாள் அவள்.

அன்று பகலில் சுரமஞ்சரியின் தாய் ஆலமுற்றத்து ஆலயத்துக்குச் சென்று இறைவனை வணங்கி வருமாறு அவளை வேண்டினாள்.

"பெரிய கண்டத்திலிருந்து தப்பி உயிர் பிழைத்து வந்திருக்கிறாய் கோவிலுக்குப் போய் இறைவனை வணங்கி விட்டு வா. வானவல்லியையும், உன் தோழியையும் உடன் அழைத்துக் கொண்டு போ" என்று தாய் கூறியபடி கோவிலுக்குப் புறப்பட்டாள் சுரமஞ்சரி. சகோதரியும், தோழியும் உடன்வர அவள் தேரில் கோவிலுக்குச் சென்று கொண்டிருந்த போது நாளங்காடியின் அருகே இளங்குமரன் எதிர்ப்புறமிருந்து இன்னொரு தேரைச் செலுத்திக் கொண்டு



விரைவாக வருவதைக் கவனித்தாள். அவனை நோக்கி அவள் முகம் மலர்ந்தது. ஆனால் அவனுடைய தேர் அவளுக்காக நிற்கவே இல்லை. அவளுடைய தேருக்கு எதிரே இளங்குமரனின் தேர் விரைந்து விலகிச் சென்ற போது கடிவாளக் கயிற்றைப் பற்றியிருந்த அவனது வலது கையும் தோளும் அவள் கண்களில் தோன்றி நிறைந்தன.

விஷ்ணு—

அவனுடைய அழகிய தோள்களிலிருந்து அவளுடைய மனத்தில் தனி நினைவுகள் பிறந்தன. அந்த நினைவுகளில் மூழ்குவதில் தனியானதொரு களிப்பு அவளுக்கு இருந்தது.

'கண்ணைக் கவரும் இந்தச் சுந்தர மணித் தோள்களில் ஒன்றின் மேல் நேற்றிரவு ஒரு விநாடி என் தலையைச் சாய்த்'

திருக்கிறேன்' — என்று நினைக்கும் போது, அந்த நினைப்பினாலேயே அவள் மனத்துக்கு ஒரு பெருமிதம் ஏற்பட்டது. செல்வச் செழிப்பு மிகுந்த பட்டினப்பாக்கத்தில் எத்தனையோ அழகிய இளைஞர்களைச் சுரமஞ்சரி பார்த்திருக்கிறாள். தன்னுடைய பார்வைக்காக எத்தனையோ இளைஞர்கள் நினைவழிந்து தவிப்பதையும் உணர்ந்திருக்கிறாள் ஆனால் அவர்களுக்காகவும், அவர்களுடைய பார்வைக்காகவும் அவள் ஒருபோதும் நினைவிழந்தது இல்லை. இறுமாப்பினால் இறுகிப் போயிருந்த அவள் மனம் நினைவழிந்து நிறையிழந்து நிற்கும்படி செய்த அழகும், ஆண்மையும் இளங்குமரனுடையவையாக இருந்தன.

இளங்குமரன் தொடர்ந்து அவளை அலட்சியம் செய்தான். எந்த அழகினால் தன்மனம் கர்வப்பட்டதோ, அந்த அழகையும் பொருட்படுத்தாமல் தன்னை அலட்சியம் செய்யவும் ஓர் ஆண் பிள்ளை இருக்கிறான் என்பதை முதன்முறையாக அவள் கண்டாள். அவளால் அவனை அலட்சியம் செய்ய முடியவில்லை. தனக்கும் தோற்காத பேராண்மைக்கு முன் அவள் தானே தோற்றுப்போய் நின்றாள். ஆனால் அவன் தன்னுடைய தோல்வியைத் தன்னுடைய வெற்றியாக ஏற்கவும் சித்தமாயில்லை 'ஈடு இணையில்லாத பேராண்மையாளருக்கு நான் மனம் தோற்றேன். அவ்வாறு தோற்றதனால் என் மனம் பெருமைப்படுகிறது'-என்ற நினைப்பை அவள் அடைவதற்குக் கூட அவன் வாய்ப்பு நல்கவில்லை அதனால் தான் அவள் அவனுடன் பிணக்குக் கொள்ள நேர்ந்தது ஆற்றாமையால் விளைந்த இந்தப் பிணக்கும் அவள் உள்ளத்தில் நிலைத்திருக்கவில்லை

அவளால் கப்பலில் சில நாழிகைகள் அவனோடு பேசாமல் இருக்க முடிந்தது. சிரிப்பையும், முக மலர்ச்சியையும் செயற்கையாக மறைத்துக் கொள்ள முடிந்தது. எப்போதும் அப்படி இருக்க முடியவில்லையே !

எவ்வளவு காலம் காத்திருந்தாலும் இளங்குமரனின் சுந்தரமணித் தோள்களுக்கு உரிமை கொண்டாடும் பெருமையைத் தானே அடைய வேண்டும் போல் அந்தக் கணத்தில் அவளுக்கு ஒரு தாகம் ஏற்பட்டது.

''எதிரே அவருடைய தேர் போயிற்றே. பார்த்தீர்களா அம்மா ?'' என்று வசந்தமாலை சிரித்துக் கொண்டே கேட்டாள்.

''பார்த்தேன் ! அதற்கென்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கிறது ?'' என்று அவளைக் கடிந்து கொள்வதுபோல் மறுமொழி கூறினாள் சுரமஞ்சரி.

சுரமஞ்சரி, வானவல்லி முதலியவர்கள் அமர்ந்திருந்த தேர் ஆலமுற்றத்துக் கோவிலுக்குச் செல்வதற்காகப் புறவீதியைக் கடந்து கொண்டிருந்தபோது, முல்லையும் வளநாடுடையாரும் தங்கள் இல்லத்திலிருந்து புறப்பட்டு எதிரே நடந்து வந்து கொண்டிருந்தார்கள்

சிறிது நேரத்துக்குமுன் புற வீதி வழியாக இளங்குமரன் தேரைச் செலுத்திக் கொண்டு சென்ற செய்தியைத் தன் தந்தையிடம் கூறியிருந்தாள் முல்லை. தான் வீட்டு வாயிலில் நின்று கைநீட்டி அழைத்த அழைப்பையும் பொருட்படுத்தாமல் இளங்குமரன் தேரை விரைவாகச் செலுத்திக்கொண்டு போய் விட்டதைக் கண்டு முல்லை மனம் நொந்திருந்தாள்.

அப்பா ! நேற்று நீராட்டு விழாவில் தான் அவரைச் சந்திக்க முடியாமற் போயிற்று. யாரோ ஒரு பெண்ணைக் காப்பாற்றுவதற்காகக் காவிரியில் குதித்துச் சென்றாராம். அதன் பின்பு அவரை மீண்டும் தான் சந்திக்க முடியவில்லை என்று அண்ணன் வருத்தத்தோடு தேடிக் கொண்டு போயிருக்கிறார் அதைக் கேள்விப்பட்டதிலிருந்து அவர் மழையிலும் புயலிலும் காவிரியில் நீந்திக் கரையேறினாரோ இல்லையோ என்று நீங்களும் நானும் துயரப்பட்டுக் கொண்டிருக்கிறோம். அவரானால் இந்த வழியாகத் தேரில் போகும்போதே என்னைப் பார்த்தும் பாராதவர் போல் போகிறார். நாமும் அப்படிக் கல்மனத்தோடு இருந்து விடலாம் என்றால் முடியவில்லையே அப்பா ! அவர் இப்போது கூடப் பட்டினப் பாக்கத்திலிருக்கும் அந்தப் பெண்ணின் மாளிகைக்குத் தான் தேரில் போகிறார் போலிருக்கிறது. அங்கே போயாவது அவரை அழைத்து வரலாம்; வாருங்கள்'' என்று கூறிப் பிடிவாதமாக வளநாடுடையாரை உடன் அழைத்துக் கொண்டு புறப்பட்டிருந்தாள் முல்லை.

ஆனால் எந்தப் பெண்ணின் மாளிகைக்கு இளங்குமரன் போயிருப்பானென நினைத்துக் கொண்டு அவள் தந்தையுடன் புறப்பட்டிருந்தாளோ அந்தப் பெண்ணே எதிரில் தேரேறி வருவதைக் கண்டதும், வழியை மறித்தாற்போல் வீதியில் நின்று கொண்டு, ''தேரை நிறுத்துங்கள்'' என்று இரைந்து கூவினாள் முல்லை. தேர் நின்றது.

'' அன்று இந்திர விழாவின்போது பூத சதுக்கத்தில் அவருடைய ஓவியத்தை வரைந்து வாங்கிக் கொள்வதற்காக அவரைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்ற பெண் இவள்தான் அப்பா ! இவள் பெயர் 'சுரமஞ்சரி' என்று சொல்லிக் கொண்டார்கள் எனக்கு

இவனிடம் பேசத் தயக்கமாயிருக்கிறது. நீங்களே இவளைக் கேளுங்கள் இவளைக் கேட்டால் அவர் இப்போது எங்கே போகிறாரென்று தெரிந்தாலும் தெரியலாம்'' என்று தந்தையிடம் மெல்லிய குரலில் கூறினாள் முல்லை. தேரின் முன் பகுதியிலிருந்த சுரமஞ்சரி மட்டும்தான் முல்லையின் கண்களுக்குத் தென்பட்டாள் உயர்ந்த தோற்றத்தையுடைய வளநாடுடையாரோ பின்புறம் வேறு இரண்டு பெண்கள் இருப்பதையும் அவர்களில் ஒருத்தி முன்புறமிருப்பவளைப் போலவே தோற்றமளிப்பதையும் கண்டு யாரிடம் கேட்பதென்று திகைத்தார். ''கேளுங்கள் அப்பா!'' என்று முல்லை மறுபடியும் அவரைத் தூண்டினாள்

அதற்குள் தேரின் முன்புறம் இருந்த பெண் வளநாடுடையாரை நோக்கி, ''நீங்கள் யார் ஐயா! இந்தப் பெண் எங்கள் தேரை எதற்காக நிறுத்தச் சொல்லிக் கூப்பிட்டாள்?'' என்று சற்றுக் கடுமையாகவே வினவினாள். எனவே ஒருவிதமாகத் திகைப்பு அடங்கி அவளிடமே தமது கேள்வியைக் கேட்டார் வளநாடுடையார்.

''இளங்குமரனைப் பார்ப்பதற்காக நாங்கள் புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிறோம் பெண்ணே! அந்தப் பிள்ளை இப்போது பட்டினப்பாக்கத்தில் உங்கள் மாளிகையில் இருக்கிறான் என்பது எங்களுக்குத் தெரிய வேண்டும். அதைச் சொன்னால் எங்களுக்கு உதவியாயிருக்கும் உன் பெயர்தானே சுரமஞ்சரி என்பது? உன்னைக் கேட்டால் இதற்கு மறுமொழி கிடைக்குமென்று இதோ அருகில் நிற்கும் என்மகள் சொல்கிறாள்.''

''நல்லது ஐயா! சுரமஞ்சரி என்பது என் பெயர்தான். ஆனால் உங்களுக்கும், உங்கள் மகளுக்கும் இப்போது இவ்வளவு அவசரமாக அவரைத் தேடிக் கொண்டு போக வேண்டிய காரியம் என்னவோ?''

தேரின் முன்புறம் இருந்த சுரமஞ்சரி தன் தந்தையிடம் இப்படிக் கேட்டவுடன் அவருக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த முல்லைக்குச் சினம் மூண்டது

''முடியுமானால் கேள்விக்கு மட்டும் பதில் கூறுங்கள்! அவருக்கும் எங்களுக்கும் ஆயிரமிருக்கும். அதையெல்லாம் உங்களிடம் சொல்ல வேண்டியதில்லை'' என்று நேருக்கு நேர் அவளிடம் சீறினாள் முல்லை முல்லையின் கோபத்தைக் கண்டு சுரமஞ்சரி பதற்றமடையவில்லை. அந்தக் கோபத்தையே பொருட்படுத்தாதவளைப் போல் சிரித்தாள்

''பெரியவரே! புறவீதியிலுள்ள பெண்கள் வீரம் மிக்க மரபைச் சேர்ந்தவர்கள் என்பதை உங்கள் மகள் இவ்வளவு கோபத்தோடு நிரூபித்திருக்க வேண்டாம். நீங்கள் கேட்கிற மனிதர் எதிரே தேரில் போவதை மட்டும்தான் வரும்போது நாங்களும் பார்த்தோம். அதைத் தவிர வேறு ஒன்றும் எங்களுக்குத் தெரியாது. உங்கள் வீரப் புதல்வியார் நினைப்பது போல் அவரை நாங்கள் எங்கள் மாளிகையிலேயே சிறை வைத்துக் கொண்டிருக்கவில்லை. வழியை விடுங்கள். தேர் போக வேண்டும்'' என்று கடிவாளக் கயிற்றைப் பற்றி இழுத்தாள் சுரமஞ்சரி. குதிரைகள் பாய்வதற்குத் திமிறின

முல்லையும் வளநாடுடையாரும் விலகி நின்று கொண்டார்கள் சுரமஞ்சரியின் தேர் புறவீதி மண்ணை வாரித் தூற்றி விட்டு விரைந்தது. தேர் சென்ற திசையில் வெறுப்பை உமிழும் கண்களால் பார்த்தாள் முல்லை.

''மனம் இருந்தால் தாமே தேடி வருகிறார்! நாம் எதற்காக அலையவேண்டும்? திரும்பிப்போகலாம், வாருங்கள்'' என்று வெறுத்தாற் போல் கூறிக்கொண்டு தந்தையுடன் வீடு திரும்பினாள் முல்லை. அவள் மனத்தில் இளங்குமரன் மேலும், இருமாப்பின் இருப்பிடமாகத் தெரிந்த அந்தப் பட்டினப் பாக்கத்து நங்கையின் மேலும் எல்லையற்ற ஆத்திரம் கிளர்ந்திருந்தது இளங்குமரன் என்னும் அழகை நினைத்து இன்புறும் உரிமையில் தனக்கு ஒரு விரோதியும் இருக்கிறாள் என்பதை முல்லை இப்போது உணர்ந்து கொண்டாள். அந்தப் பேரழகை நினைத்து மகிழும் உரிமையை இன்னொருத்திக்கு விட்டுக்கொடுக்கவும் அவளால் முடியாது. செல்வத்தையும், அலங்கார அழகுகளையும் கொண்டு அவனை நினைத்தும் கண்டும், பழகியும், மகிழ்வதற்குச் சுரமஞ்சரி என்னும் வேறொரு பெண் இருப்பதை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. சுரமஞ்சரி தேரில் நின்று கொண்டு பேசிய பேச்சும், அவளது கர்வம் மிகுந்த அழகும் முல்லையின் மனத்தில் அமைதி



குலைந்து போகச் செய்திருந்தன. அமைதி யிழந்த மனத்துடனே அவன் வீடு திரும் பியபோது வீட்டில் கதக்கண்ணன் வந்து காத்துக் கொண்டிருந்தான். முல்லை யையும், தந்தையையும் கண்டதும் அவன் ஆவலோடு கூறலானான் :

"முல்லை ! இளங்குமரனை நீலநாக மறவர் சிறிது நேரத்துக்கு முன்புதான் திருநாங்கூருக்கு அழைத்துக் கொண்டு புறப்பட்டுப் போயிருக்கிறாராம். நல்ல வேளை ! நேற்று மழையிலும், புயலிலும், காவிரியிலிருந்து மீண்டு மறுபிறப்புப் பிறந்தாற் போல் பிழைத்து வந்திருக்கிறான். அதுவே பெரிய காரியம். படைக் கலச் சாலையில் போய் விசாரித்துத் தெரிந்து கொண்டு வந்த பின்புதான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது."

"எனக்கு நிம்மதி போய்விட்டது, அண்ணா !" என்று அழுகை நெகிழும் குரலில் முல்லையிடமிருந்து பதில் வந்தது.

## 4 - கவலை சூழ்ந்தது!

துறைமுகத்தில் நீண்ட நேரம் அலைந்து திரிந்து கொண்டிருந்த நகைவேழம்பருக்கு இறுதியில் வெற்றியே கிடைத்தது. சீனத்துக் கப்பல் தலைவனை அவர் சந்தித்து விட்டார். எடுத்துக் கொண்ட காரியத்தை முறையாகத் திட்டமிட்டு முயன்று சூழ்ச்சித் திறனோடு முடிப்பதுதான் அவர் வழக்கமாயிற்றே. அன்று காலை துறை சேர்ந்த கப்பலைப் பற்றித் தெரிந்து கொண்டு ஒவ்வொரு கப்பல் தலைவனிடமும் சென்று, "இன்று காலை கப்பல் கரப்புத் தீவிலிருந்து யாராவது ஒரு பெண்ணை உங்கள் கப்பலில் ஏற்றி வந்து கரை சேர்த்தீர்களா? அப்



படிக் கரை சேர்த்தவர் நீங்களானால் அந்தப் பெண்ணின் பெற்றோர்கள் நன்றி செலுத்திப் பரிசளிக்கக் காத்திருக்கிறார்கள்'' என்று சொல்லிக் கொண்டே வந்தார். சீனத்துக் கப்பல் தலைவனிடமும் அதையே சொல்லியபோது, நகைவேழம்பருக்கு வேண்டிய செய்தி அவனிடமிருந்து கிடைத்தது :

''ஐயா! நீங்கள் கேட்பது போல் ஒரு பெண்ணும் அவளுடைய அன்புக்குரியவர்போல் தோன்றிய ஓர் இளைஞரும் கப்பல் கரப்புத் தீவிலிருந்து எங்கள் கப்பலில் இடம் பெற்றுக் கரை சேர்ந்தார்கள். அந்தப் பெண் கப்பலில் வரும்போது உடன் வந்த இளைஞரிடம் பிணக்குக் கொண்டது போல் கோபமாக இருந்தாள். அவள் இந்த நகரத்திலுள்ள பெரிய கப்பல் வணிகரின் பெண் என்று உடனிருந்த இளைஞர் கூறினார். அதனால் விருப்பத்தோடு எங்களுடைய கப்பலில் கொண்டு வந்த பட்டுக்களையும் மற்ற அலங்காரப் பொருள்களையும் அவளிடம் காண்பித்தேன். அவள் அவற்றில் எதுவும் தனக்குத் தேவையில்லை என்று மறுத்துவிட்டாள்! நீங்கள் கூறுவது போல் அவளையும், அந்த இளைஞரையும் கரை சேர்த்ததற்காக அவள் பெற்றோரிடம் பரிசு எதுவும் வாங்கிக் கொள்ள நான் விரும்பவில்லை. உதவி செய்வதில் இருக்கிற ஒரே பெருமை கைம்மாறு கருதாமல் உதவி செய்தோம் என்பதுதானே? பரிசு வாங்கிக் கொண்டால் அந்தப் பெருமையை நான் அடைய முடியாது'' என்று சீனத்துக் கப்பல் தலைவன் நகைவேழம்பரிடம் கூறினான். அவன் கூறிய அடையாளங்களிலிருந்து அவனுடைய கப்பலில் வந்தது சுரமஞ்சரியாகத்தான் இருக்க வேண்டுமென்பது உறுதிப்பட்டது. உடன் வந்ததாகச் சொல்லப்படும் இளைஞன் இளங்குமரனாகத்தான் இருக்க முடியும் என்பதிலும் நகைவேழம்பருக்குச் சந்தேகம் ஏற்படவில்லை.

'இளங்குமரன் எப்படி எங்கே அவளைச் சந்தித்தான்? கப்பலில் அவன் உடன் வந்ததைச் சுரமஞ்சரி ஏன் எல்லோரிடமும் சொல்லாமல் மறைத்தாள்' என்ற சிந்தனையில் மூழ்கியது நகைவேழம்பர் மனம். 'யாரோ படகோட்டி தன்னைக் கப்பல் கரப்புத் தீவுவரை காப்பாற்றிக் கரை சேர்த்ததாகக் கூறினாளே அந்தப் படகோட்டிதான் கப்பலில் அவள்கூட வந்தானோ?' என்று முதலில் சிறிது மனம் குழம்பினார் அவர். ஆனால் கப்பல் தலைவன் இளைஞனைப் பற்றிக் கூறிய அடையாளங்கள் இளங்குமரனுக்கே பொருந்தின. எண்ணங்களை ஒன்றோடொன்று பின்னிச் சூழ்ச்சிமயமாக முனைந்து உண்மையைக் கண்டுபிடிக்கும் வேகம் அவருக்கே உரிய சாதுரியமாகும். அவர் அச் சாதுரியத்தை எப்போதும் இழந்ததில்லை.

''சீனத்துக் கப்பல் தலைவரே! நீங்கள் சற்றே சிரமத்தைப் பாராமல் என்னுடன் பட்டினப்பாக்கத்துக்கு வரலாம் அல்லவா? அந்தப் பெண்ணையும், இளைஞரையும் நேரில் பார்த்தால் அடையாளம் சொல்லி விடுவீர்கள் என நினைக்கிறேன். சீனத்துக் கப்பல் தலைவராகிய நீங்கள், பூம்புகாரின் சிறந்த கப்பல் தலைவரான பெருஞ் செல்வர் ஒருவரை அறிமுகம் செய்துகொண்டாற்போலவும் இருக்கும். என்னோடு இப்போதே புறப்படுங்கள்'' என்று துணிந்து அவனை அழைத்தார் நகைவேழம்பர்



மறுக்காமல் அவனும் உடனே அவரோடு புறப்பட்டு விட்டான். இருவரும் பட்டினப் பாக்கத்து மாளிகையை அடைந்தபோது சுரமஞ்சரி முதலியவர்கள் கோவிலுக்குப்போயிருந்தார்கள். சுரமஞ்சரியின் தந்தையாரிடம் அந்தக் கப்பல் தலைவனை அறிமுகம் செய்துவைத்தார் நகைவேழம்பர். அவன் துறைமுகத்தில் தன்னிடம் கூறிய விவரங்களையும் அவரைத் தனியே அழைத்துப் போய்க் கூறினார் :

'உங்கள் பெண்ணரசி நம்மையெல்லாம் ஏமாற்றியிருக்கிறாள். தன்னுடன் கப்பலில் வந்த இளங்குமரனைப் பற்றிச் சொல்லாமலே மறைத்து விட்டாள்.''

''உடன் வந்தவன் அந்தப் பிள்ளைதான் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?''




பையன்: (ஒரு வாரமாய்த் தங்கியிருக்கும் விருந்தாளியைப் பார்த்து) ஏன் மாமா உங்களுக்கு ஞாபக மறதி அதிகமோ?

விருந்தாளி: ஏண்டா அம்பி எதுக்கு அப்படிக் கேட்டே?

பையன்: இல்லே, உங்க ஊர் ஞாபகமே இல்லாம இருக்கேளேன்னு தான் கேட்டேன்!

விருந்தாளி: ????

"இதோ, அதையும் நிதர்சனமாக தெரிந்து கொண்டுவிடுகிறேன்" என்று கூறிவிட்டுச் சுரமஞ்சரியின் மாடத்துக்குப் போய் அங்கேயிருந்த இளங்குமரனின் சித்திரத்தை எடுத்துக் கொண்டு வந்து சீனத்துக் கப்பல் தலைவனிடம் காண்பித்தார் நகைவேழம்பர். கப்பல் தலைவனின் முகம் அந்தச் சித்திரத்தைக் கண்டதுமே மலர்ந்தது.

"இதே இளைஞர்தான். இதே அழகிய கண்கள்தாம். எனக்கு மிக நன்றாக நினைவிருக்கிறது."

இதைக் கேட்டவுடன் சுரமஞ்சரியின் தந்தைக்கு அடங்காத சினம் மூண்டது. 'பெண் உயிர் பிழைத்து வந்தாளே. அதுவே போதும்' என்று காலையில் உண்டாகியிருந்த மகிழ்ச்சி கூட இப்போது ஏற்பட்ட சினத்தில் ஒடுங்கி விட்டது. அந்நியனான அந்தக் கப்பல் தலைவனுக்கு முன் தம் குடிப் பெருமையை விட்டுக் கொடுக்கலாகாதே என்ற நினைவு மட்டும் தடுத்திராவிட்டால் அவர் இன்னும் கடுமையாக உணர்ச்சி வசப்பட்டிருப்பார்

சீனத்துக் கப்பல் தலைவன் அவர் நிலையைக் கண்டு ஒன்றும் புரியாமல் மருண்டான். 'பெண்ணைக் காப்பாற்றியதற்காக அவள் பெற்றோர் நன்றி சொல்லப் போவதாய்க் கூறியல்லவா இந்த ஒற்றைக் கண் மனிதர் நம்மை அழைத்து வந்தார்? நடப்பதென்னவோ வேறுவிதமாக இருக்கிறதே' என்று எண்ணி வியந்தான் அவன்.

'சுரமஞ்சரி நீராட்டு விழாவில் நீந்துவது போல் சென்று முன்பே இளங்குமரனைப் படகுடன் ஆற்றில் காத்திருக்கச் செய்து அவனுடன் புறப்பட்டுப் போயிருப்பாளோ?' என்று தம் மனம் எண்ணிப் பழகிய கெட்ட வழியிலேயே எண்ணினார் நகைவேழம்பர் அதைச் சுரமஞ்சரியின் தந்தையிடமும் காதருகில் சென்று மெல்லக் கூறினார். தன்னை வரவழைத்து உட்கார வைத்துக் கொண்டு அவர்கள் இருவரும் தங்களுக்குள் ஏதோ பேசிக் கொள்வதும், எதற்காகவோ கோபப்படுவதும் கண்டு சீனத்துக் கப்பல் தலைவன் வருந்தினான். அவர்கள் பண்புக் குறைவாக நடந்து கொள்வதாகத் தோன்றியது அவனுக்கு. இனிமேலும் தான் அங்கே இருப்பதில் பயனில்லை என்ற எண்ணத்துடன் மெல்ல எழுந்து நின்றான் அவன். "நான் போய் வருகிறேன். ஐயா!" என்று கூறி விடைபெற்றான்

அந்த நேரத்தில் கோவிலுக்குச் சென்றிருந்த தேர் திரும்பி வந்து வாயிலில் நின்றது. சுரமஞ்சரியும், வசந்தமாலையும் தேரிலிருந்து இறங்கிச் சேர்ந்தாற் போல் நடந்து வந்து உள்ளே புகுந்தார்கள். உள்ளே அந்தக் கப்பல் தலைவனையும், இளங்குமரனின் ஓவியத்தையும் சேர்த்துப் பார்த்த சுரமஞ்சரி திடுக்கிட்டாள்.

"உங்கள் கப்பலில் வந்தது இந்தப் பெண்தானே?" என்று சுரமஞ்சரியின் பக்கம் கைநீட்டிக் காண்பித்துக் கேட்டார் நகைவேழம்பர்.

அவர்கள் தன்னிடம் பண்புக் குறைவாக நடந்துகொண்டதில் சிறிது மனம் குழம்பியிருந்த சீனத்துக் கப்பல் தலைவன் ஒரே விதமான தோற்றத்தில் தெரிந்த இரண்டு பெண்களையும் கண்டு இப்போது இன்னும் குழப்பமடைந்து தன் கப்பலில் வந்தது யாரென்று சொல்லத் தெரியாமல் மருண்டான். மாறி மாறி இருவரையும் பார்த்தான்

"இவள்தானே?" என்று சுரமஞ்சரியைச் சுட்டிக் காண்பித்து இரண்டாம் முறையாகக் கேட்டார் நகைவேழம்பர்.

அவசரத்திலும், குழப்பத்திலும், அங்கிருந்து உடனே வெளியேறிப் போக வேண்டுமென்ற பதற்றத்திலும் அந்தக் கப்பல் தலைவன் திகைத்து, "இவள் இல்லை! அவள்தான் என் கப்பலில் வந்தவள். சந்தேகமே இல்லை. அந்தப் பெண்தான்" என்று வானவல்லியைச் சுட்டிக் காண்பித்துவிட்டு வேகமாக வெளியேறிச் சென்றுவிட்டான்.

# நீங்கள்

# ஆஸ்துமா-வினால்

# அவஸ்தைப்பட்டால்

## இதை அவசியம் படியுங்கள்

இபஸோன் மாத்திரைகள் இந்தியாவிலே திரும்பவும் கிடைக்கின்றன. ஆஸ்துமா, ப்ராங்கைடிஸ், ப்ராங்கைடிஸினால் ஏற்படும் ஜலதோஷம், மார்புச் சளி, ஹே காய்ச்சல், மற்றும் இது சம்பந்தப்பட்ட நோய்களினால் அவஸ்தைப்படுகிறவர்களுக்கு இபஸோன் மிகவும் உதவியளிக்கிறது. இபஸோன் எளிதில் உட்கொள்ளக்கூடியது. பயமின்றி உபயோகிக்கலாம். உடனடியாகச சமனமூட்டி, நிச்சய பலனளிக்கிறது.

இபஸோன் தயாரிப்பில் சேர்க்கப்பட்டுள்ள வைத்திய முறையின் அம்சங்களின் இயல்புகள் சுருக்கமாக கீழே குறிப்பிடப்பட்டுள்ளன:

1. சுவாசக் குழாய்களின் தசைநார்களுக்கு ஏற்படும் வலிப்புக்கு சமனமூட்ட ஒரு சக்தி வாய்ந்த தன்மை இபஸோனுக்கு உண்டு. சுவாசாசயங்களில் மூச்சு எளிதில் செல்லவும், வெளியில் வரவும் இது உதவி செய்கிறது. அது மாத்திரமல்ல; ஆஸ்துமாவினால் ஏற்படும் உக்கிரத்திற்கு ஆசுவாசமளிக்கிறது.
2. சுவாசக் குழாய்களிலும் மற்றும் மார்பு உறுப்புகளிலும் உள்ள கபத்தை இபஸோன் மிருதுவாக்கி, திரவமாக இருமலில் எளிதாக வெளியே தள்ளிவிடுகிறது.
3. சுவாசாசயத்திலுள்ள இரத்தக் குழாய்களில் ஏற்படும் அடைப்பிற்கு இபஸோன் சமனமூட்டுகிறது.
4. இபஸோன் இருதயத்தின் கஷ்டங்களைக் குறைத்து, அதிகம் வேலை செய்யக்கூடிய அளவுக்கு சக்தியை அளிக்க உதவி செய்கிறது.
5. இபஸோன் ஆஸ்துமாவினால் நிச்சயமாக ஏற்படும் உக்கிரத்தைக் குறைத்து, ஏக்கத்தை நிவர்த்தி செய்து, மிருதுவாக நரம்புகளுக்கு சமனமளிக்கிறது. அது மட்டுமல்ல; ப்ராங்கைடிஸினால் ஏற்படும் அகோரமான இருமலைக்கூட சரிசெய்து விடுகிறது.

ஆஸ்துமா வெகு சீக்கிரம் உங்களைப் பிடிக்கிறது. ஆஸ்துமாவினால் நீங்கள் பீடிக்கப்படுவீர்கள் என சிறிய சந்தேகம் வந்தவுடன் ஒரு இபஸோன் மாத்திரையை உட்கொண்டு, அதிசீக்கிரத்திலே நிச்சயமாக நிவாரணமடையுங்கள்.

இபஸோனின் அரிய தன்மைகள், ஆஸ்துமாவினால் அவஸ்தைப்பட்டு இதை உபயோகித்து குணமடைந்தவர்களாலும், அதை சிபார்சு செய்யும் டாக்டர்களாலும் நிரூபிக்கப்பட்டுள்ளன.

வழக்கத்தை ஊட்டிவிடும் மருந்துகள் எதுவும் இபஸோனில் சேர்க்கப்படவில்லை.

இபஸோன் 15, 45, 100 மாத்திரைகள் கொண்ட வசதியான பாக்கட்டுகளில் எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கின்றன.




# EPHAZONE

இபஸோன் தயாரித்து, வினியோகிப்பவர்கள்:-

ஜே எல் மோரிஸன் சன் அன்டு ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்

பம்பாய் – கல்கத்தா – மதராஸ் – டில்லி.

சீனத்துக் கப்பல் தலைவன் கூறிவிட்டுச் சென்றதைக் கேட்டு நகைவேழம்பர் பெரிதாக வாய் விட்டுச் சிரித்தார். அவர் அதைச் சிறிதும் நம்பவில்லை என்பதை அந்தச் சிரிப்பு எடுத்துக் காட்டியது.

"இவர்கள் இரட்டைப் பிறவி என்பது அந்தக் கப்பல் தலைவருக்குத் தெரியாது, ஐயா! பாவம். போகிற போக்கில் ஏதோ பிதற்றி விட்டுப் போகிறான் அவன். அவனுடைய கப்பலில் வந்தவர்கள் சுரமஞ்சரி தேவியும், அந்தப் பிள்ளையாண்டான் இளங்குமரனும்தான் என்பதைப் பற்றி உங்களுக்குச் சந்தேகமே வேண்டாம். இதோ உங்கள் முன் சுரமஞ்சரி தேவியார் திகைத்துத் தலைகுனிந்து நிற்பதே இதற்குச் சான்றுதான்."—இவ்வாறு நகைவேழம்பர் கூறி விளக்கியபோது சுரமஞ்சரியின் தந்தை சீற்றத்தோடு அவளை நிமிர்ந்து பார்த்தார். அவள் நாணி நடுங்கித் தலை தாழ்ந்து நின்றாள். தந்தையார் சுரமஞ்சரியைக் கோபித்துக் கொள்ளும்போது தாங்கள் அருகிலிருப்பது நாகரிகமல்ல என்று கருதிய வானவல்லியும், தோழி வசந்தமாலையும் அங்கிருந்து மெல்லவிலகி உள்ளே சென்று விட்டார்கள். சுரமஞ்சரி தனியே நின்றாள். நகைவேழம்பர் இவ்வளவு விரைவாக அந்தச் சீனத்துக் கப்பல் தலைவனைத் தேடி அழைத்து வருவாரென்றோ, அவனிடம் தனது மாடத்திலுள்ள இளங்குமரனின் ஓவியத்தைக் காண்பித்துத் தன்னுடன் இளங்குமரனும் கப்பலில் வந்ததைக் கண்டுபிடித்து விடுவாரென்றோ அவள் எதிர்பார்க்கவில்லை. கோவிலிலிருந்து திரும்பி மாளிகைக்குள் நுழைந்ததுமே தான் இவ்வளவு விரைவில் எதிர்பாராத இந்த நிகழ்ச்சி தன்னை எதிர்கொண்டதைக் கண்ட பின் திகைப்பிலிருந்தும் அச்சத்திலிருந்தும் அவளால் விடுபட இயலவில்லை. தந்தையாரின் குரல் சீற்றத்தோடு அவளை நோக்கி ஒலித்தது :—

"நமது குடிப்பெருமைக்கு மாசு தேடும் செயல்களையே தொடர்ந்து நீ செய்து கொண்டு வருகிறாய்!"



"நீர் ரொம்பக் கெட்டிக்காரர்! நான் தாடி வளர்த்திருக்கிறேன். கண்களில் வேறு கறுப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டிருக்கிறேன். நீர் எப்படி ஐயா வெகுநாளைக்கப்புறம் என்னை அடையாளம் கண்டு விட்டீர்கள்!"

"உங்கள் கையிலுள்ள என் குடையிலிருந்துதான்!"

"அப்படியானால் நான் உயிர் பிழைத்து வந்ததே உங்கள் குடிப் பெருமைக்கு மாசு தேடும் செயல்தான்! என்னைக் காப்பாற்றிக் கரை சேர்த்தவருக்கு நன்றியும், பரிசும்தந்து மகிழவேண்டியநீங்கள் அவரைப் பற்றி இப்படி நினைப்பது சிறிதும் நன்றாயில்லை அப்பா!"

"இப்போது இப்படி நினைக்கிற நீங்கள் முதலில் உங்களைக் காப்பாற்றியவரைப் பற்றி ஏன் பொய் சொல்லி மறைத்தீர்கள்? யாரோ ஒரு படகோட்டி கரை சேர்த்ததாகவும் அங்கிருந்து சீனத்துக் கப்பலில் இடம் பெற்று வந்ததாகவும் கூறி உங்களோடு வந்த உதவியாளரை ஏன் மறைத்தீர்களோ?" என்று குறுக்கிட்டுக் கேள்வி கேட்டார் நகைவேழம்பர்

"உங்களுக்கெல்லாம் அவரைப் பிடிக்காது என்று தெரிந்துதான் கூறவில்லை" என்று சுரமஞ்சரியும் இந்தக் கேள்விக்குத் தயக்கமின்றி மறுமொழி கூறினாள்.

"நீங்கள் கூறாவிட்டால் என்னம்மா? நாங்கள் கண்டுபிடித்துத் தெரிந்து கொண்டோமா, இல்லையா? சொந்த மகளிடமே ஏமாந்து போய் நிற்கிற அளவுக்கு உங்கள் தந்தை ஆற்றல் குறைந்தவரில்லை. அவரும், அவரைச் சுற்றியிருப்பவர்களும் ஏழு உலகங்களையும் ஏமாற்றி விட்டு வருகிற சாதுரியம் படைத்தவர்கள்" என்று நகைவேழம்பர் தற்பெருமை பேசிச் சிரித்தபோது தன் தந்தையும் சேர்ந்து சிரித்ததைக் கண்டு சுரமஞ்சரி தன் மனத்தை அடக்கிக் கொள்ள முடியாமல் பொறுமையிழந்து கொதிப்படைந்தாள்.

"என் தந்தையார் பெருமைப் படுவதற்கு மற்றவர்களை ஏமாற்றுகிற திறமை அவரிடம் இருப்பது ஒன்றுதான் காரணமென்று அவர் முன்பே துணிந்து கூறுகிற அளவுக்கு அவர் உங்களுக்கு இடமளித்திருப்பதை எண்ணி வெட்கப்படுகிறேன்" என்று சுரமஞ்சரி குமுறிப் பேசத் தொடங்கியபோது, "பேசாதே! நீ உள்ளே போ!" என்று அவளை நோக்கி இரைந்தார் அவள் தந்தையார். தலை

குனிந்தபடி உள்ளே செல்வதைத் தவிரச் சுரமஞ்சரியால் அப்போது வேறு ஒன்றும் பேச முடியவில்லை. தன் தந்தையார் நகைவேழம்பருக்கு அளவு மீறித் தகுதி மீறி இடங் கொடுப்பதன் காரணம் என்ன என்பது அவளுக்கு விளங்காத மர்மமாயிருந்தது.

மாளிகையும், மதிப்பும், செல்வமும், சிறப்பும் உள்ளவருக்கு மகளாகப் பிறந்திருக்கிற தன்னைக் காட்டிலும் புறவீதியில் கிழத் தந்தையோடு தன் தேருக்கு முன் வந்து நின்ற அந்த வீரக்குடிப் பெண் கொடுத்து வைத்தவள் என்று எண்ணும் தாழ்வு மனப் பான்மையை அப்போது சுரமஞ்சரி அடைந்தாள்

அந்த வீரக்குடிப் பெண்ணின் தந்தை ஆதரவாக அவளோடு தெருவில் நடந்து வந்ததையும், தன் தேருக்கு முன் நின்று இளங்குமரனைப் பற்றி அறிய முயன்றதையும் நினைத்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள் சுரமஞ்சரி. புறவீதியின் வீரக் குடும்பங்களில் ஏதாவதொன்றில் தானும் பிறந்திருந்தால் என்ன என்று நினைத்துத் தவித்தது அவள் உள்ளம். செல்வமும் செல்வாக்கும் நினைத்தபடி வாழ முடியாமற் செய்யும் தடைகளாக அந்தக் கணத்தில் அவளுக்குத் தோன்றின. 'புறவீதியிலுள்ள ஆயிரக்கணக்கான மறவர் குடும்பங்களில் ஏதாவதொன்றில் யாராவதொரு அன்பு நிறைந்த தந்தைக்கு மகளாகப் பிறந்திருந்தால் தேரையும், பல்லக்கையும், எதிர்பாராமல் மனம் விரும்பியவரைச் சந்திக்கக் கால்களால் நடந்தே புறப்படலாம். வான் வெளிப் பறவைபோல் தன்போக்கில் திரியலாமே!'' என்று எண்ணியபோது புற வீதியிற் சந்தித்த மறக்குலத்து நங்கை மேல் சுரமஞ்சரி சிறிது பொறாமையும் கொண்டாள். தன்னைவிட அந்தப் பெண்ணே வசதிகள் நிறைந்தவளாக அந்நிலையில் அவளுக்குத் தோன்றினாள்.

அன்று மாலை சுரமஞ்சரி மேலும் கலக்கமடையும்படியானதொரு செய்தி தோழியின் மூலம் அவளுக்குத் தெரிய வந்தது. இளங்குமரனின் ஓவியத்தைக் கொடுத்து, அவன் பூம்புகாரிலும், அதன் சுற்றுப்புறப் பகுதிகளிலும் எங்கே தென்பட்டாலும் உடனே தன் மாளிகைக்குக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்று நாலைந்து முரட்டு யவன ஊழியர்களைத் தன் தந்தையாரும் நகைவேழம்பரும் சேர்ந்து இரகசியமாக அனுப்பி வைத்திருக்கும் செய்தியை வசந்தமாலையின் வாயிலாக அறிய நேர்ந்தபோது சுரமஞ்சரியைப் பெருங்கவலை சூழ்ந்தது.

'இந்தச் செய்தியை முன் அறிவிப்புச் செய்து 'அவரை' எங்காவது பாதுகாப்பாக இருக்கச் செய்யலாமே' என்ற எண்ணத்துடன், ''வசந்தமாலை! ஓவியன் மணிமார்பன் எங்கிருந்தாலும் நான் கூப்பிட்டேன் என்று உடனே அழைத்து வா. 'அவருக்கு' முன்பே இந்தச் செய்தியைக் கூறி எச்சரிக்கை செய்யலாம்'' என்றாள்

''ஓவியன் சில நாட்களாக இந்த மாளிகையில் எங்குமே தென்படவில்லை அம்மா! திடீரென்று காணமற் போன தன் காரணமும் புரியவில்லை. ஆனாலும் தேடிப் பார்க்கிறேன்'' என்று புறப்பட்டாள் வசந்தமாலை.

முன்பு தான் இளங்குமரனுக்கு எழுதிய அன்பு மடல் நகைவேழம்பர் கைக்குக் கிடைத்ததைக் கண்டறிந்திருந்தே ஓவியன்மேல் ஐயம் கொண்டு வெறுப்பாயிருந்தாள் சுரமஞ்சரி. ஆயினும் இப்போது இரண்டாம் முறையாகவும் அவன் உதவியை நாடுவது தவிர வேறு வழி அவளுக்குத் தோன்றவில்லை. அவன் வரவை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்தாள் அவள். (தொடரும்




ஆசிரமத்தைச் சுற்றிக் கோல மணிகளால் பூமாதேவி தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். அருகிலிருந்த மரங்கள் புஷ்பங்களைத் தூவி மலர்ப்பாதை தயாரித்து விட்டிருந்தன.

"அனசூயை!"

குரல் கேட்டு ஆசிரமத்து உள்ளிருந்து அனசூயை வெளியே வந்தாள். தேஜோமயமான சொரூபம். சுருக்கம் கண்டுவிட்ட முகம் முதிர்ந்த வயதை எடுத்துக் காட்டிய போதிலும் மஞ்சள் பூச்சிடையே மின்னிய குங்குமம் முகப் பிரகாசத்தைப் பன்மடங்கு அதிகரிக்கச் செய்தது.

ஆசிரமத்து வாயிலில் அன்புக் கணவர் அத்ரி நின்று கொண்டிருந்தார். "இதோ வந்தேன்" என்று கூறிய அனசூயை உள்ளே சென்றாள். பாத்திரம் ஒன்றில் நீர் மொண்டு வந்து கணவரின் பாதங்களைக் கழுவினாள். நீரைச் சிரமேற்கொண்டு பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

அத்ரி அப்பொழுதுதான் தெள்ளிய நீரில் நீராடி விட்டு வந்திருந்தார்.

"அனசூயை! இன்று எங்கு நோக்கினும் புது மலர்ச்சி தோன்றுகிறது, பார்த்தாயா? என் உள்ளத்திலோ புதிய ஆனந்த அனுபவம். எம்பெருமானைத் தரிசித்து விட்டது போன்ற பிரமை" என்று அத்ரி அருகிலிருந்த பாறை ஒன்றில் அமர்ந்தவாறு கூறினார்.

அனசூயை சற்று மௌனமாக இருந்தாள். பிறகு மென்னகையுடன் கூறினாள். "சுவாமி! எனக்கு என்றுமே ஆண்டவனைத் தரிசித்து விட்ட மனக் களிப்பு உண்டு. என்னை விட்டுப் பிரியாமல் என் அருகிலேயே தாங்கள் இருக்கும்போது எனக்குக் குறைவேது? ஆயினும் நீங்கள் கூறுவது போல் இன்று எங்குமே ஒரு மலர்ச்சி காணப்படத்தான் செய்கிறது. விட்டுப் பிரிந்த குழந்தைகளையெல்லாம் மீண்டும் காணும் தாய்ப்பாசம் பெருக்கெடுக்கும் உணர்ச்சி ஏற்படுகிறது."

"எங்குமே கோல இழைகளால் நன்கு அலங்கரித்து விட்டாய். மண இல்லம் போல் காணப்படுகிறது."

"ஆமாம், என்றோ நம்மை ஒன்றுகூட்டிய திருமண வைபவத்தின் நினைவு வந்தது. அதை நினைத்தபடி மனம் நிற்க, கைகளோ அன்று செய்த வேலையை இன்று தாமாகவே செய்து விட்டன..."

அத்ரி மெள்ளத் தம் கிருகலக்ஷ்மியை நோக்கி "அனசூயை!" என்று அழைத்தார்.

அனசூயை கணவரை ஏறிட்டு நோக்கினாள்.

''அனசூயை! மும்மூர்த்திகளுமே தத்தாத்ரேயன், துர்வாசன், ஸோமன் என்ற பெயர்களுடன் குழந்தைகளாகவே அடையும் பாக்கியம் பெற்றேன். மேலும் எவ்வளவோ பாக்கியங்கள். ஆனால் நிழல் போல் என்னோடும் என் மனத்தோடும் ஒன்றிவிட்ட உன்னை அடைந்த பாக்கியத்துக்கு முன்னால்...''

''சுவாமி, நிழல் போல் என்று நீங்களே கூறி விட்டீர்களே! உங்களைப் போல் சத்குணம் எனக்கும் தன்னால் வரவேண்டியது அவசியம்தானே!''

''நன்றாகத்தான் பேசுகிறாய், அனசூயை!'' என்று கூறி, ஆசிரமத்தினுள்ளே காலடி வைத்தார். அங்கே கீழே கிடந்த ஆபரணங்களைக் கண்டு விட்டு அனசூயையை நோக்கினார்.

ஏலக் கம்பெனிக்காரர்!




கேள்விக் குறியைப் புரிந்து கொண்டு விட்ட அனசூயை தானே பதில் கூறினாள். ''நம் திருமண நினைவு வந்தது என்று கூறினேனல்லவா? அத்துடன் என் தோழி பிருகத்ருசம் எனக்களித்த நகைகளின் நினைவும் வந்தது. அவளது அன்புப் பரிசான ஆபரணங்களை எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்...''

''நல்ல தோழியாகத்தான் தேடிப் பிடித்திருக்கிறாய், அனசூயை! உன்னைப் போலவே அசூயை இல்லாமல் அவள் எல்லா நகைகளையும் அளித்து விட்டாளே!'' என்று கூறியபடி அத்ரி பூக் குடலையுடன் வெளிப் புகுந்தார்.

அனசூயை பழைய நினைவுகளிடையே தன்னைப் புகுத்திக் கொண்டாள்.

தக்ஷப்பிரஜாபதியின் மகள்தான் அனசூயை. ஒரு குறையும் வைக்க வில்லை தந்தை. பிருகத்ருசமும் அனசூயையும் சிறு வயது முதற்கொண்டே ஒன்று கூடி விளையாடி மகிழ்ந்தவர்கள். தக்ஷப்பிரஜாபதியின் தேரோட்டி ஸாரபுத்திரனின் மகள்தான் பிருகத்ருசம்.

கைப் பிடித்த மணாளன் அத்திரியுடன் அனசூயை கிளம்பிய போது பிருகத்ருசம் நெஞ்சின் அலைகளாக வெளிவந்த கண்ணீரைக் கஷ்டத்துடன் உள்ளடக்கினாள்.

''பிருகத்ருசம்! நான் சென்று வரட்டுமா?'' அனசூயை குரல் அடைக்கக் கேட்டபோது பிருகத்ருசத்தினால் பதில் கூற முடியவில்லை.

''குழந்தாய்! ஏனம்மா, மௌனமாக நிற்கிறாய்? உன் நினைவாக உன் தோழிக்குப் பரிசு ஏதேனும் அளிக்க வேண்டாமா?'' தேரோட்டி தன் மகளை நோக்கிக் கேட்டான்.

பிருகத்ருசம் திகைத்து நின்று விட்டாள். என்ன அசட்டுத்தனம். இவ்வளவு நேரம் இதைப்பற்றி யோசியாமலே இருந்து விட்டோமே! தன் நினைவாக அருமைத் தோழிக்கு என்னதான் கொடுக்க முடியும்?

''ஸாரபுத்திரா! தோழமை என்பது அழியாப் பொருள். அதற்கு நினைவுச் சின்னம் அவசியமா?'' என்று அனசூயை கேட்டாள்.

''தோழமைக்கு நினைவுப்பொருள் அல்ல, குழந்தாய். தோழிக்கு நினைவுப் பொருள். தோழி அளிக்கும் அன்புப் பொருள் பழைய கால ஏட்டைத் திருப்பிக் காட்டி மனத்திலே ஓர் உற்சாகம் காட்டும் அல்லவா?'' ஸாரபுத்திரன் சமாதானம் கூறினான்.

''அப்பா, இதைப்பற்றி நினையாமலிருந்து விட்டேனே! எந்தப்பொருளைக் கொடுப்பது என்றே எனக்கு இப்பொழுது தோன்ற வில்லையே!'' பிருகத்ருசம் பலத்த யோசனையுடன் கூறினாள்.

''இதோ பாரம்மா பிருகத்ருசம், அனசூயை உனக்கு உற்ற தோழி. பொன்போன்ற குணம் கொண்டவள். உலகத்தில் நீ ஆழமுடன் நேசிப்பது அனசூயை ஒருத்தி. அவளுக்குச் சமமாக உனக்குப் பிடித்தவை உன்னுடைய ஆபரணங்களே...''

அனசூயை சிரித்தபடி கூறினாள். ''ஆமாம், பிருகத்ருசம், நகைகள் என்றால் உனக்கு எல்லையற்ற விருப்பம். உன் அம்மாவிடம் சண்டை போட்டு எவ்வளவு நகைகளைப் பெற்று விட்டாய் நீ!''

''சரிதான் போதுமம்மா, நீ பெரிய வேதாந்தி. நகைகளே போடமாட்டாய்... நகையே வேண்டாமென்று உன் அப்பாவுடன் சண்டை போடுபவள் நீ...'' எதிர்க்குற்றம் சாட்டினாள் பிருகத்ருசம்.

''குழந்தாய் ஒன்று செய். உன் நகைகள் அனைத்தையும் உன் தோழிக்கு உன் அன்புப் பரிசாக அளித்து விடம்மா...'' என்று தேரோட்டி கூறினான்.

தேரோட்டியின் மகளோ உடனே தன் நகைகளைக் கழற்ற ஆரம்பித்து விட்டாள். திடுக்கிட்ட அனசூயை அவளைத் தடுத்தாள்.

''இது முறையல்ல, பிருகத்ருசம்! நீ எவ்வளவு ஆசைப்பட்டு இவற்றைச் செய்து கொண்டாய். இவற்றை அணிவதாலுண்டாகும் ஆனந்தத்திலிருந்து உன்னை வஞ்சிக்க நான் விரும்ப மாட்டேன்.''

''தனக்குப் பிடித்ததை அளிப்பதே உண்மையான அன்பளிப்பு அனசூயை...நகையே அணியாமல் என்னை ஏமாற்றி வந்தாயேடி, தோழி! எங்கே, இவற்றை அணிந்து கணவருடன் உல்லாசமாகப் புறப்படு, பார்க்கலாம்...''

பிருகத்ருசத்தின் பிடிவாதத்தின் காரணமாகக் கணவருடன் புறப்பட்டபோது அனசூயை சர்வாலங்கிருதபூஷிதையாகக் காணப்பட்டாள். அவளை வழியனுப்பிய பிருகத்ருசம் விட்டுப் பிரியும்போது மெள்ள அவளுடைய காதோடு கூறினாள். ''அனசூயை! என் நினைவாக இந்த ஆபரணங்களை நீ வைத்துக்

கொள். ஆபத்துக் காலத்தில் உண்மைத் தோழமை உதவுவதுபோல் இந்த ஆபர ணங்கள் உதவ வேண்டுமென்பதே என் விருப்பம். இந்த நகைகள் இல்லாமலே ஆபத்தைச் சமாளிக்கும் சக்தி உனக்கு உண் டென்பதை நான் அறிவேன்...ஆனால்...''

''என்ன தயக்கம், பிருகத்ருசம்?''

''இந்த நகைகள் உன் மட்டோடு நட்புரிமை பந்தத்தை இழந்துவிடக் கூடாது என்பது என் விருப்பம். உனது முதுமைப் பருவத்தில் உன்னைப் போலவே பதிவிரதா தர்மத்தில் சிறந்து உனக்குப் பிடித்தமான ஒருவருக்கு இதை அளிப்பதன் மூலம், ஏதேனும் ஆபத்து நேரும்போது உதவி புரியும் துணைப்பொரு ளாக இதை வைக்க வேண்டுமென்பதே என் விருப்பம்'' என்று பிருகத்ருசம் மெள்ளக் கூறினாள்.

''உன் விருப்பத்தை நான் மறக்க மாட் டேன். உறவுமுறை விடுத்து மனத்துக்குப் பிடித்த தோழியிடம் இவற்றை அளித்துத் தோழமையின் உயர் பொருளாக இதை ஆக்க முயலுகின்றேன்'' என்றாள் அனசூயை.

இருவரும் பிரியாவிடை பெற்றனர்.

தோழியின் நினைவாக எடுத்து வந்துவிட்ட நகைகள் அவை. அனசூயை கவனமாக அதைப் பாதுகாத்து வந்தாள். கணவருடன் இல்வாழ்க்கை சுகமே ஆரம்பித்தது. வாழ்க் கைப் படிகளில் கணவருடன் மேலேறும் போது எத்தனையோ சோதனைகள். பதிவிர தாத் தன்மையும் அசூயையற்ற குணமுமே பல இன்னல்களைச் சமாளித்து விட்டன...அவள் மட்டும் இன்னமும் அந்த ஆபரணங்களைப் பத்திரமாகப் பாதுகாத்து வந்தாள். முதுமை யும் வந்து விட்டது. பதிவிரதா தர்மத்தில் சிறந்தவளும் தன் மனத்துக்குப் பிடித்தவ ளாகவும் இன்னமும் தகுந்த பாத்திரம் அனசூயைக்குக் கிடைக்கவில்லை.

இன்று காலையிலிருந்தே அனசூயையின் மனம் காரணமறியாது மகிழ்ச்சியில் நிரம்பிக் கிடந்தது. அதனோடே விவாக சம்பவம் நினை வுக்கு வந்தபோது தோழி அளித்த நகைகளும் நினைவுக்கு வந்தன.

''அனசூயை!'' மீண்டும் வெளியே கண வரின் குரல் வந்தது. அனசூயை வெளியே எட்டிப் பார்த்தாள்.

ஆஹா! மற்றொரு உஷையின் வருகை இங்கு எப்படி நேர்ந்தது! குனிந்த தலை நிமி ராது முகக் காந்தி நான்கு புறமும் ஒளிவீசப் பொற்கொடி என நிற்கும் இவள்..இ..வள்..

'' அனசூயை! மகிழ்ச்சிக்கான சூழ்நிலை இப் பொழுது புரிந்து விட்டதல்லவா? உயிர் நீங்காது நாம் இன்னமும் இவ்வுலகில் வாழ் வது நாம் செய்த பாக்கியம்...இதோ நிற் கிறாளே, இவள்தான் மிதிலேச நந்தனி. மிதிலை பெற்ற தவசீலர் ஜனகர் கண்டெடுத்த அருந்தவப் புதல்வி சீதை...'' என்று அத்ரி அறிமுகம் செய்து வைத்தார்.

'வாம்மா குழந்தாய், உன் வரவு நல்வர வாகட்டும். கண்களைப் பெற்ற பயன் இன்று தான் எனக்கும் கிடைத்தது'' என்று குதூகலம் பொங்க அனசூயை ஜனகபுத்திரியின் கரங் களைப் பற்றினாள்.

ராமப்பிரியை அனசூயையின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அனசூயை அவளை அணைத்து உச்சிமோந்தாள்.

அனசூயையின் பார்வை எதிரில் தன் கணவ ருடன் ஒட்டி நின்ற தவப்புதல்வர்கள் மீது சென்றது. ராஜ கம்பீரம்; ஆயினும் இருவரும் தவக்கோலத்துடன் ஜடை முடியுடன் நிற் கின்றனர்.

அனசூயை சீதையின் தோளில் கை வைத்து மெதுவாகக் கேட்டாள். '' குழந்தாய்! அவ் விருவரும் உன் சொந்தம் என்று புரிகிறது.... இருவருடைய பரிச்சயம் எனக்கு அவசிய மல்லவா?'' என்றாள்.

'' அம்மா! அதோ சேவை செய்யும் நோக் கத்தையே குறிக்கோளாகக் கொள்பவராகச் சற்றே பின்தள்ளிச் செம்மேனியோடு நிற் கிறாரே, அவர்தான் அயோத்யாதிபதி தசர தரின் இளைய புத்திரர், என் மைத்துனர்....''

'' மற்றவர்....''

''அவர்...'' ஓரக்கண்களை அந்தப் பக்கம் ஓடவிட்டுத் தலை குனிந்து விட்டாளே இப்பெண்! முகமெல்லாம் செம்மை படர்ந் தது. பெண்களுக்கு அணிகலனான நாணப்பூ மலர்ந்து விரிந்தது....

'' சொல்லம்மா, மகளே!'' விஷமப் புன்னகை யுடன் அனசூயை விடாமல் கேட்டாள்.

'' அ....வர்....'' சற்றுத் தயங்கிய ஜனக் புத்திரி, சட்டென்று நினைவுக்கு வந்தவள் போல், '' அம்மா! நீங்கள் என்னை மகள் என்று சொந்தம் கொண்டாடினீர்கள் அல்லவா? இப்பொழுது பரிச்சயப் படலம் எளிதாகி விட்டது. அவர் உங்கள் மகளின் கரம் பற்றிய அருமை மருமகன் அம்மா!'' என்று கூறினாள்.

'' எனக்கு வாய்த்திருக்கும் மகள் பேச்சு வன்மை மிக்கவள்தான்.'' அனசூயை பூரிப் புடன் சீதையின் இரு கன்னங்களையும் தொட்டு திருஷ்டி சொடுக்கினாள்.



ஞானகியின் உடல் களிப்பினால் விரிந்தது. அவளது குதூகலம் அனசூயைக்கு எல்லையற்ற ஆனந்தத்தை அளித்தது.

இவர்கள் சம்பாஷணையைக் கவனியாமலிருந்து விட்ட அத்ரி, "அனசூயை! இந்த இரு பிள்ளைகளும் யார் தெரியுமல்லவா ?" என்றார்.

" மகள் காட்டிக் கொடுத்து விட்டாளே எனக்கு ! நீலமேக சியாமளமேனியிலும் ஒளிப் பிழம்பாக நிற்பவன் தான் என் மருமகனும். அடக்கத்தின் மத்தியிலும் வீர புருஷசிம்மமாக நிற்கிறானே அவன்தான் மருமகனின் தம்பியாம்..." என்று அனசூயை அத்ரியிடம் கூறினாள்.

" உறவு முறை உள்ளத்தை நிரப்பிவிட்டது அனசூயை....இவர்கள் தசரத குமாரர்கள் ராமன், லக்ஷ்மணன். இன்று நம் குடிலில் பூரணப் பிரகாசம் நிரம்பிவிட்டது..."

தசரத குமாரர்கள் இருவரும் பெரியவர்களை வணங்கினர்.

" சீதை, உள்ளே வாம்மா. இன்று உற்ற தோழியாகவும் மகளாகவும் வந்திருக்கும் உனக்கும், உன் உறவினர்களுக்கும் நாவுக்கு இனிய நல்விருந்து படைக்க வேண்டும்..."

அனசூயை ஜானகியைப் பர்ணசாலையின் உள்ளே அழைத்துச் சென்றாள். இரு குமாரர்களையும் அழைத்துக் கொண்டு அத்ரி விருந்துக்கு வேண்டிய சாமான்களைச் சேகரிக்கப் புறப்பட்டு விட்டார்.

அனசூயை மைதிலியை அருகில் உட்கார வைத்துக் கொண்டாள். ராமன் வனத்துக்கு ஏகிய காரணமும், சீதை அவரைப் பின்பற்றிய விவரமும் அறிந்து பதிவிரதா தர்மத்தின் பலாபலன்களை உபதேசித்தாள்.

பிறகு சீதையின் சுயம்வரத்தைப் பற்றி அவளது வார்த்தைகளின் மூலமே கூறக் கேட்டுக் கொண்டாள். கௌசல்யா புத்திரனை உத்யானவனத்தில் சந்தித்தது பற்றியும், அவர் வில் வளைத்த அற்புதத்தைப் பற்றியும், அப்பப்பா, அவள் எவ்வளவு நாணப் பூக்களை உதிரவிட்டுக் கூறிவிட்டாள்! அவளது செம்பருத்த முகத்தில் காணப்பட்ட பொலிவு அனசூயையின் மனத்தில் பரமானந்தத்தை அளித்தது.

விருந்து தயாராகிவிட்டது. லக்ஷ்மணன் தன் அண்ணனுடன் விருந்துண்ண அமரவில்லை. அத்ரிக்கு அன்று உபவாச நிலை. சிறிதளவு பழங்களே ஆகாரம்.

" சீதை! கணவருக்கு அன்னம் பரிமாறி விடம்மா" என்று அனசூயை கூறினாள்.

சீதைக்கு உடலெல்லாம் புத்துணர்ச்சி ஏற்பட்டது. அயோத்தியில் இருந்தவரையில் கணவருக்கு அன்னம் பரிமாற வேண்டிய அவசியம் இருக்கவில்லை. வனத்துக்கு வந்த போதும் பெரியவர்களுக்கு எதிரில் கணவருக்குப் பரிமாறவேண்டிய நிர்ப்பந்தம் இருக்கவில்லை. இப்பொழுது அனசூயையின் எதிரில் பரிமாற வேண்டுமே!




பரந்தாமனும் இதே நிலையில் இருந்தார். சீதை கூசிக் கூசிப் பரிமாற ரகுராமன் கூச்சத்துடனே உட்கொண்டார். இந்தக் காட்சியைக் கண்டு அனுபவித்தாள் அனசூயை.

விருந்தெல்லாம் முடிந்த பிறகு அனசூயை லக்ஷ்மணனிடம் கேட்டாள். " ஏனப்பா சீதையைக் கண்டு களிக்கும்பாக்கியம் பெற்று விட்டேன். அதே போல் உன் மன அரசியைக் காண என்று தான் பாக்கியம் கிடைக்குமோ? அவளை நீ இங்கு அழைத்து வரவில்லையா ?"

லக்ஷ்மணர் மென்னகை புரிந்தார். " அம்மா! நான் அவளை இங்கு அழைத்து வராததிலிருந்து அவள்மீது எனக்குள்ள அன்பை நீங்கள் தெரிந்து கொண்டிருக்கலாமே !"

" உக்கும்! பெரிய அன்புதான்....! இங்கு அழைத்து வந்து விட்டால் தனக்குப் போட்டியாக அண்ணா மன்னிக்குச் சேவை செய்ய வந்துவிடப் போகிறாளே என்ற பொறாமை !" புன்னகையுடன் கூறினாள் ஜனக புத்திரி.

" அப்படித்தான் இருக்கட்டுமே, மன்னி ! சேவை செய்து மிருதுவான உடலை என் அருமை ஊர்மிளை வாட்டிக் கொண்டு விட்டால் என் நெஞ்சு பொறுக்காது என்று வைத்துக் கொள்வோமே !" இளையவர் சிரித்தபடியே கூறினார்.

" ஏமாந்து விட்டாய், லக்ஷ்மணா! நீயோ, ஆனந்தமாக இங்கு பொழுதைக் கழிக்கும் எங்கள் இருவருக்குமே சேவை செய்கிறாய். ஊர்மிளையோ மூன்று மாமிகளின் துயர் தீர்க்கும் பெரும் பாரத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறாள். அவள் உடல் வாடிப்போயிருக்கும்" என்றார் சீதாராமன் புன்னகையுடன்.

" உடல் வாடினாலும் உள்ளம் வாடாமல் இருக்கட்டும், அண்ணா !"

" எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். இன்று இங்கு வந்து இக்குடிலில் ஆனந்தமாகப் பொழுதைக் கழிக்கக் கிடைத்து விட்ட வாய்ப்பைப் பார்த்தால் ஊர்மிளையைவிட நான் பாக்கியசாலி என்றே கூற வேண்டும்" என்று கூறிச் சீதை அனசூயையை நோக்கி, "என்னம்மா நான் சொல்வது சரிதானே?" என வினவினாள்.

" லக்ஷ்மணன் ஊர்மிளையை அழைத்து வராத காரணம் எனக்குப் புரிந்து விட்டது. 'சீதையைப் பார்த்துப் பூரிப்பினால் ஒரு சுற்றுப் பருத்து விட்டாள் இந்த மூதாட்டி அனசூயை. ஊர்மிளையையும் சந்தித்து விட்டால் களிப்பின் மிகுதியில் உடல் பலமாகப் பருத்து விடும். வயதான காலத்தில் இந்த உடலைத் தாங்க சக்தி இராது' என நினைத்து முன்யோசனையுடனும் தூரதிருஷ்டியுடனும்



## குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் நல்லது




கிருமி நாசினியான வேப்ப எண்ணெயிலிருந்து தயாரிக்கப்பட்டதும், மனோகரமான மணம் தருவதுமான மார்கோ மிக மெல்லிய சருமமுடையவர்களுக்கும் உத்தமமானது. மார்கோ சோப்பின் இளகும் சத்து நிறைந்த நுரை சரீரத்தின் துவாரங்களில் ஆழமாகப் புகுந்து சென்று, சருமத்திலுள்ள எல்லா அழுக்குகளையும் போக்கி சுத்தப்படுத்துகிறது. இதன் தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் சோதிக்கப்பட்டுள்ள மார்கோ சோப் உங்களுக்கு அதிக சுகத்தையும், நாள்முழுதும் அதிகத் தூய்மை உணர்ச்சியையும் அளிக்கிறது.

# மார்கோ சோப்

குடும்பத்துக்கு உத்தமமான சோப்

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்., கல்கத்தா-29

தென்னிந்திய ஆபீஸ் 5/149 பிராட்வே சென்னை-1

CHC-15 TM

---

# ரிப்ராக்டரீஸ் சர்விஸ்

### சுட்ட கல்

சூளைக் களிமண் செங்கல், உச்ச வெப்பம் தாங்கும் சூளைக் களிமண் செங்கல், அலுமினா நிறைந்த செங்கல், ஸிலிக்கா செங்கல், மாக்னஸைட் செங்கல், ஸில்லிமனைட் செங்கல், க்ரோம் செங்கல், அமிலத்தை எதிர்த்து நிற்கும் செங்கல், இன்ஸுலேடிங் செங்கல்.

### ஏர்-ஸெட்டிங் சிமெண்ட்

'பர்னைட்' நெ.1 ($750^{\circ}C/1100^{\circ}C$), நெ. 2 ($1100^{\circ}C/1350^{\circ}C$), சூபர் ($1350^{\circ}C$க்கு மேல்), நியூட்ரல் (க்ரோம்ஆதாரம்)($1200^{\circ}C$க்கு மேல்), ஹை-ஸின்ட் ($1350^{\circ}C$க்கு மேல்)

அமிலத்தை எதிர்த்து நிற்கும் சிமெண்ட்

### ரிப்ராக்டரி மானோலித்

''பர்னோலித்''

### சுண்ணச் சாந்துகள்

சூளைக் களிமண், காஸிஸ்டர், க்ரோம், ஸில்லிமனைட் ஸிலிக்கா.

### மொத்த தயாரிப்புகள்

பொடியாக்கப்பட்ட சூளைக்களிமண், அதி வெப்பம் தாங்கும் செங்கல் பொடி, பொடியாக்கி பஸ்பமாக்கப்பட்ட சூளைக் களிமண், தரம் பிரிக்கப்பட்ட ''க்ராக்'', மாக்னஸைட் பீஸ், பஸ்பமாக்கப்பட்ட லேசான மாக்னஸைட் முதலியன. ''யூனிபில்'' இன்ஸுலேஷன் தயாரிப்புகள்.

இரும்பு, உருக்கு ஆலைகள், ரயில்வேக்கள், கண்ணாடித் தொழிற்சாலைகள், வார்ப்படச்சாலைகள், சிமெண்ட் உற்பத்திசாலைகள், சர்க்கரை ஆலைகள், சூளைகள், விசை உற்பத்தி நிலையங்கள் முதலியவற்றில் பயன்படுபவை.

# பர்ன் & கம்பெனி லிட்.

ரிப்ராக்டரி சிராமிக் தொகுதி

12, மிஷன் ரோ, கல்கத்தா-1

தொழிற்சாலைகள்: மேற்கு வங்கம்: ராணி கஞ்ச், துர்க்காபூர், ஒந்தால், பீஹார்: குல்பர்பாரி, மத்தியப் பிரதேசம்: ஜபல்பூர், சென்னை: சேலம்

மானேஜிங் ஏஜெண்ட்கள்: மார்ட்டின் பர்ன் லிட்., மார்ட்டின் பர்ன் ஹவுஸ், 12, மிஷன் ரோ, கல்கத்தா-1

கிளைகள்: புது டில்லி, பம்பாய், கான்பூர்.

தென்னிந்திய ஏஜெண்ட்கள்: தி ஸௌத் இந்தியன் எக்ஸ்போர்ட் கம்பெனி லிட்., சென்னை

RCC-11 TM

அவளை இங்கு அழைத்து வரவில்லை. எப்படியாயினும் சரி; வனவாசம் முடிந்த பிறகு ஊர் மிளையை ஒருமுறை அழைத்து வா, லக்ஷ்மணா!''

''அந்த வேண்டுகோளை மட்டும் விடுக்காதீர்கள் அம்மா! நாங்கள் இங்கு உங்கள் இல்லத்தில் அனுபவித்த ஆனந்தத்தையும், தங்களைச் சந்தித்த பாக்யத்தையும் கூறினாலே போதும். 'நானும் வனம் போக வேண்டும்' எனப் பிடிவாதத்தைக் கிளப்பி விடுவாள். அண்ணனைப் பின்பற்றித் தம்பி கிளம்பி விட்டது போல், அப்பொழுது தம்பியைப் பின்பற்றி அண்ணன் கிளம்பி விடுவார். பிறகு ராஜ்ய பாரம் என்ன ஆவதாம்?'' என்றார் லக்ஷ்மணர்.

''தம்பி ஒருவரையே அடக்கி நாட்டோடு விட்டு வரத் துணிவு இல்லாத உங்கள் அண்ணா நாட்டின் பிரஜைகளை எப்படித்தான் அடக்கி ஆளப் போகிறாரோ!'' என்று சீதை கூறியதும் அனசூயை சிரித்து விட்டாள். ஒட்டி ஒட்டிப் பழகும் அவர்களுடன் அனசூயையும் ஒட்டிக் கொண்டாள்.

இன்பமாகப் பொழுதைக் கழித்து விட்டு ராமர் அங்கிருந்து கிளம்பி விட்டார். அனசூயையின் மனத்தில் என்றும் கண்டிராத துயரம்பரவியது. அன்புக்குரியவர்களை விட்டுப் பிரிவதனால் உண்டாகும் வேதனை சூழ்ந்தது. அவளே சற்று ஆச்சரியம் அடைந்தாள். இது போன்ற அனுபவம் அவளுக்கே இதுவரை இருந்ததில்லை. ஒட்டிப் பழகிவிட்டாள் சீதை. தோழமையும் பாசமும் அனசூயையின் மனத்தில் ஊற்றுப் பெருக்கெடுத்தன. சீதையை விட்டுப் பிரியும் துயரம் மனத்தை அரித்தது.

துயரே உருவாக நிற்கும் அனசூயையிடம் அத்ரி கூறினார்: ''அனசூயை! ஜானகிக்கு உன் ஆசியாக ஏதேனும் கொடுக்க வேண்டாமா? வயது வித்தியாசத்தைப் பாராட்டாமல் இருவரும் நெருங்கிப் பழகி விட்டீர்களே!'' அனசூயை ஸ்தம்பித்து நின்று விட்டாள்.

'இது பற்றி நினையாமலே இருந்து விட்டோமே! சீதைக்கு எதைக் கொடுத்தால் உசிதமாக இருக்கும்!' என்று யோசித்தாள் அனசூயை.

அப்பொழுதுதான் சடக்கென்று அவளுக்கு நினைவு வந்தது. அவளது வாழ்நாள் முடிவதற்குள் தோழி அளித்த பரிசைத் தகுந்த பாத்திரமாகக் கண்டு அளிக்க வேண்டுமல்லவா? சீதையைத் தவிர அதற்கு ஏற்றவள் யார் இருக்க முடியும்?

உடனே நகைகளை எடுத்து வந்தாள். ஒவ்வொன்றாகச் சீதைக்குப் பூட்டி அலங்கரிக்க ஆரம்பித்து விட்டாள்.

''அம்மா, வனத்தில் வசிக்கப் போகும் எங்களுக்கு இதெல்லாம் எதற்கம்மா?'' என்று சீதை கேட்டாள்.

## வீட்டுக்கு வீடு!



''சும்மா! இருடி, பெண்ணே! இவ்வளவு நேரம் எங்களுடன் இருந்து மகிழ்வு தந்த உனக்கு அன்பளிப்பாக ஏதேனும் அளிக்க வேண்டாமா?'' அனசூயை கூறியபடி சீதையை அலங்கரித்து விட்டாள். இயற்கை அழகுடன் செயற்கை அழகும் மிளிரத் தெய்வப் பெண்ணாகக் காட்சி அளித்தாள் மைதிலி. அனசூயை அவளைத் தழுவி உச்சி முகர்ந்தாள். ரகுராமன் பரவசத்துடன் நின்றார்.

பிறகு அனசூயை கூறினாள். ''சீதை, வனத்தில் வசிக்கப் போகிறாய். சோதனைக் காலம் ஏதேனும் நேரிடச் சந்தர்ப்பம் உண்டு. உன் கணவன், மைத்துனனின் வீரத்துடன் உன்னுடைய பதிவிரதா தர்மமும் உனக்குப் பாதுகாப்பாக இருந்து ஆபத்துக்களைச் சமாளிக்க உதவும் என்பதில் ஐயமில்லை. அத்துடன் இந்த எளிய நகைகளும் சிறு துரும்பாக ஆபத்துக் காலத்தில் துணைப் பொருளாக உதவட்டும். இதுவே என் ஆசிகள்'' என்றாள்.

ராமன் முன்னால் ஏக, சீதை வழி தொடர, லக்ஷ்மணன் காவலாகப் பின் செல்வதைப் பார்த்தபடி அத்ரியும் அனசூயையும் குடிலின் வாசலில் நின்று விட்டனர்.

விதியின் குறுக்கீட்டில் மாயப் பொன் மானாக உருவெடுத்தான் மாரீசன். மனைவியின் வேண்டுகோளுக்கிணங்க மானைப் பிடிக்கச் சென்று விட்டார் ஸ்ரீ ராமர்.

மானைப் பிடித்து வரும் கணவருடன் உல்லாசப் பொழுதாகக் கழிக்க விரும்பிய சீதை அனசூயை அளித்த அணிகலன்களை அணிந்து கொண்டாள். அப்பொழுதுதான் அந்தச் சோகக் குரல் எழும்பியது. ''ஹா சீதே, ஹா லக்ஷ்மணா!'' சீதையின் உயிர்த் துடிப்பில் கிளம்பிய ஏக்கப் பேச்சைக் கேட்டு லக்ஷ்மணர் சென்று விடக் கபட சந்நியாசியின் வலையில் சிக்கி விட்டாள் ஜானகி.

ஜடாயுவின் மரணத்துக்குப் பிறகு கதறித் துடித்து ராவணனது பிடியில் சென்று கொண்டிருந்தாள் சீதை. 'யார் போய்ச் சொல்வார் ராமனிடம்? அவளுக்கு உதவி புரிபவர் யார்தான் கிடைப்பார்? அண்ட சராசரங்கள் நடுங்கும் இந்த மாயாவியின் பிடியிலிருந்து காப்பாற்றுவார் யாரே இருக்க முடியும்? இராவணன் தெற்கு முகமாக எடுத்துச் செல்லும்




அலங்கோலத்தை ரகுநாதன் எவ்விதம் அறிவார்? ராமனிடம் தூது செல்வார் யார்?"

பிதற்றிப் பிதற்றிக் கதறி ஓலமிட்டுக் குற்றுயிராகிக் கைதியாகச் சென்று கொண்டிருந்த சீதை புடவைத் தலைப்பினால் முகத்தை மூடியபோது அதைத் தடைப்படுத்தி மாட்டி இழுத்தது அவள் அணிந்திருந்த ஆபரணம்.

ஆபரணத்தை நோக்கியவுடனே அனசூயையின் அன்பு முகம் அவள் கண்ணெதிரே விரிந்தது. 'ஆபத்துக் காலத்தில் உதவ வழி காட்டட்டும்' என அவள் கூறிய வார்த்தைகள் நினைவுத் திரையில் பளிச்சிட்டன. மனத்தில் திடீரென்று பிரகாசம். ஒரு துளி ஆதாரம் அகப்பட்டுவிட்ட ஆறுதல்.

ஒவ்வோர் ஆபரணமாகக் கழற்றினாள். ஒவ்வொரு நகையாகக் கீழே எறிந்தாள். அவளது பிராணேசன் அவளைத் தேடிக் கண்டிப்பாக வனம் முழுதும் அலைவார். அவர் கையில் அந்நகைகள் கிடைக்கும்; சீதை அபகரித்து எடுத்துச் செல்லப்பட்ட திசையை அறிந்து கொள்வார். உடனே அந்தத் திக்கில் அவளைத் தேடுவதற்கான முயற்சியில் ஈடுபடுவார்...

சீதையின் எண்ணம் வீண் போகவில்லை.

பிரலாபித்துத் திரிந்து அலைந்த பரந்தாமனும் அனுஜனும் சுக்ரீவனைச் சந்திக்கும்படி நேரிட்டது; தமையனால் அடித்துத் துரத்தப்பட்ட சுக்ரீவன், மந்தரை என்னும் விதியின் மூலம் வனத்துக்கு அனுப்பப்பட்ட தசரத மைந்தனுடன் நட்புரிமை கொண்டாடினான். சீதை அபகரித்துச் செல்லப்பட்ட விருத்தாந்தத்தை அறிந்து மனம் கலங்கினான். ரிஷ்யமூக பர்வதத்தில் இருந்தபோது ஆகாய மார்க்கமாக ஒரு பெண் அலறித் துடித்துச் சென்றது அவனுக்குத் தெரியும். ஆயினும் அவள் சீதைதான் என்று எந்த அடையாளம் கொண்டு கூறமுடியும்?

"சுவாமி! ஒரு விண்ணப்பம்" என்று வாய் பொத்தி கைகட்டிப் பணிவுடன் கூறினார் ஆஞ்சனேயர்.

"என்னப்பா?"

"பிரலாபித்துச் சென்று கொண்டிருந்த அப்பெண் தனது சில நகைகளைக் கீழே எறிந்தபடி சென்றது தங்களுக்கு நினைவிருக்குமே! அந் நகைகளைக் காட்டினால் ஒருகால்..."

சுக்ரீவன் நன்றியுடன் அஞ்சனைபுத்திரனை நோக்கினான். சமயத்துக்கு நினைவுபடுத்திய சமய சஞ்சீவியை வாழ்த்தினான். எடுத்து வைத்திருந்த நகைகளையெல்லாம் ரகுராமரிடம் காட்டினான்.

ஆம், சந்தேகமில்லை. சீதையின் நகைகள் தாம் இவை! அனசூயை, அத்ரியின் இல்லத்தில் சீதைக்கு அன்பளிப்பாகக் கிடைத்த நகைகளைக் கண்டதும் கோசலைமைந்தனின் நினைவு அத்ரியின் ஆசிரமத்தை நோக்கிச் சென்றது.

**வா**லி வதம் முடிந்ததும் சுக்ரீவ பட்டாபிஷேகத்துக்குப் பிறகு சீதையைத் தேடுவதற்கான முயற்சிகள் ஆரம்பமாயின.

ஆபரணங்கள் காரணமாகச் சீதை இருக்கும் திசையை ஒருவாறு உணர்ந்த சீதாபதி தெற்குத் திக்கில் நம்பிக்கைக்குப் பாத்திரமான வானரனை அனுப்ப விரும்பினார். ஆஞ்சநேயர் தமக்கு அளிக்கப்பட்ட இப்பொறுப்பை நிறைவேற்றத் தயாராகி விட்டார்.

கடவுளின் பரம பக்தனேயாயினும் அதர்மத்தில் செல்பவன் தோல்வியுற்று மரணத்தின் வாயிலை அடைவான் என்பதை ராம ராவண யுத்தம் ஓர் எடுத்துக்காட்டாக விளக்கியது. லோக அபவாதத்துக்கு அஞ்சிக் கண்ணெனப் போற்றி வந்த மனைவிக்கும் அக்னிப் பரிக்ஷை வைக்கத் தவறவில்லை பரந்தாமன். அக்னியில் காய்ந்தும் குளுமையோடு புன்சிரிப்புடன் வெளிவந்த மிதிலைசநந்தினி கணவருடன் சேர்ந்து விட்டாள்.

புஷ்பக விமானத்தில் இலங்கையிலிருந்து புறப்பட்ட ரகுராமன் தம் அன்புக்கினியவருக்கு ஒவ்வோர் இடமாகக் காட்டிவந்தார். சுக்ரீவனின் வேண்டுகோளுக்கிணங்க, கிஷ்கிந்தாபுரியில் இறங்கினார். தாரையும், ருமையும் சீதையை வரவேற்றனர்.

"சீதை! இவள் தாரை, அவள் சுக்ரீவனின் மனைவி ருமை. இங்குள்ள வானரர்கள் காரணமாகத்தான் நான் உன்னை எளிதில் மீட்டுவர முடிந்தது" என்று ராமன் கூறினார்.

"ஸ்வாமி, இப்பெருஞ் சொல்லைக் கூறி எங்களை அசக்தர்களாக்கி விடாதீர்கள்... சீதை முன்யோசனையுடன் விட்டெறிந்து சென்ற ஆபரணங்களே நமக்குப் பெருத்த உதவியாக இருந்தன. அழுது புலம்பிச் சென்றது சீதைதானென்பதையும், சென்ற திக்கு தெற்கு என்பதையும் நமக்குப் புலப்படுத்தியவை இந்த ஆபரணங்கள்தானே?"

ருமை அந்த ஆபரணங்களால் சீதையை அலங்கரித்தாள். ஆபரணங்களைப் பார்த்தவுடன் ஜனக குமாரிக்கு அனசூயையின் நினைவு வந்தது. 'ஆபத்துக்காலத்தில் தோழியைப் போல் உதவும்' என்று கூறிய வார்த்தைகள் பளிச்சிட்டன. அவள் உடலில் புல்லரிப்புத் தோன்றியது. மானசீகமாக அனசூயையின் தேஜோமய உருவத்துக்கு வணக்கம் செலுத்தினாள் சீதை.

உங்கள்

டார்ச்சில்

எஸ்ட்ரெலா

பொருத்தி

இரவில்







எஸ்ட்ரெலா

ஃப்ளாஷ் லைட் பாட்டரிகள்
டார்ச்கள் மற்றும் பல்புகள்



## டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிகைவைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்






"பரம ரகசியத்தைச் சொல்லப் போகிறீர்களாக்கும், நெல்லுக்குள்ளே அரிசி இருக்குன்னு!"

"அது தான் இல்லே. நெல்லுக்குள்ளே அரிசி இல்லே என்று தான் சொல்றேன். சீனாவில் கூட்டு விவசாயத்தினால் பஞ்சம் வந்து நெல்லுக்குள் அரிசியையே காணுமாம்!"

★

ஒரு தொழிலாளி தொழிற்சாலே இடைவேளையின் போது காண்டீனுக்குச் சென்று அங்குள்ள பெஞ்சியின்மேல் பலகாரம் செய்ய உட்கார்ந்தான். "ஹா!" என்று ஒரே தாவலாகத் தாவினுன்.

"என்ன? என்ன?" என்று பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர்கள் கேட்டார்கள்.

"ஒரு ஆணி பெஞ்சியின் வெளியில் நீட்டிக் கொண்டிருக்கிறது. அது நன்ருகக் குத்தி விட்டது" என்ருன்.

"ஏன்! அதைச் சுத்தி கொண்டு வந்து அடித்து விட்டு உட்காரேன்!" என்ருன் பக்கத்திலிருந்த தொழிலாளி நண்பன்.

"நல்லாச் சொன்னீங்க. டிபன் வேளையின் போது கூடவா வேலே செய்வது? மாட்டவே மாட்டேன்!" என்ருன் அந்தத் தொழிலாளி.

★

"வயதாகி அசிங்கமான தோற்றம் உண்டாவதற்குள் மடிந்து விடத் தீர்மானித்து விட்டேன் என்று ஒரு நாள் உம்மிடம் சொன்னது ஞாபகம் இருக்கா?"

"ஆமாம்: அப்புறம் ஏன் மனத்தைமாற்றிக் கொண்டு விட்டீர்கள்?"




பொம்மை செய்கிற ஒருவன் ஆச்சரியத்துடன் உட்கார்ந்திருந்தான்.

"என்ன ஐயா, ஆச்சரியப்படறே?" என்ருர் வந்தவர்.

"வெளியே சொன்னல் வெட்கக் கேடு. பிள்ளையார் பொம்மை செய்ய ஆரம்பித்தால் அது கடைசியில் குரங்காக வந்து முடிந்தது. என்னடா இப்படி உருவம் மாறி விட்டதே என்று யோசித்தப்போ என் கடையில் ஒரு ரசிகர் வந்து அதைப் பார்த்து, 'ஆஹா! என்ன அற்புதமான நாயின் உருவம்!" என்று ஐந்து ரூபாய் கொடுத்து வாங்கிப் போய் விட்டார் அவர்."

"விநாயகரை நினைந்துப் பண்ணின காரியம் எதுவும் வீண் போகாது சார்!" என்ருர் அந்த ஆஸ்திகர்.

★



"உங்க பையனுக்குக் கணக்கே வரவில்லே. நூறுக்கு மேல் எண்ணத் தெரியவில்லே!"

"அவன் எதற்கு எண்ண வேண்டும்? அவனுக்கென்று தனியா ஒரு அக்கவுண்டென்ட் போட்டு விட்டால் போச்சு! ம்...இன்னும் ஏன் நிற்கிறீர்கள்?"

"பையனுக்கு அக்கவுண்டென்டாக என்னைப் போட்டுக் கொள்ள முடியுமா என்று தான்...!"

★

"உங்க பேனுவைக் கொஞ்சம் கொடுக்க முடியுமா?"

"ஓ, பேஷாகத் தருகிறேன்!"

"ஒரு துண்டுக் காகிதம் தரமுடியுமா?"

"அவசியம் தருகிறேன்."

"நான் இந்தக் கடிதாக எழுதி முடிக்கும் வரையில் இருக்க முடியுமா?"

"பேஷா முடியும்!"

"நீங்கள் போகும் போது கடிதாசைத் தபாலில் போட்டுட முடியுமா?"

"ஓ! நிச்சயம்!"

"கவர் ஒன்று வேண்டுமே?"

"இதோ! நான் தருகிறேன்."

"ஸ்டாம்பு."

"அதுவும் தருகிறேன்!"

"ரொம்ப சந்தோஷம். உங்கள் காதலியின் விலாசத்தைச் சொல்ல முடியுமா! அவளைப் பெண் பார்க்க வேண்டும்."

— சாமா

# அறிமுகப்படுத்துகிறோம்...

## பாமாலிவ்
## லவண்டர் டால்க்

பெருமிதமும்... வசீகரமும் தரும் பிரசித்தி பெற்ற லவண்டரின் நறுமணம் இப்பொழுது உங்களுக்குப் பிடித்தமான பாமாலிவ் டால்க் மூலம் கிடைக்கிறது. இந்த மிக நுண்ணிய நேர்த்தியான டால்க் உங்கள் சருமத்தில் பரவி நாள்முழுவதும் நீடித்திருந்து, உங்களைப் புத்துணர்ச்சியுடனும் பரிமள அழகுடனும் வைத்திருக்கும் நேர்த்தியை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்.

**லவண்டர்**
பெருமிதமும்... வசீகரமும் தரும் மணமுடையது

**டீ லக்ஸ்**
17 மயக்கும் ஸெண்டு களின் அற்புதக் கலவை

PALMOLIVE
Lavender
TALC POWDER

PALMOLIVE
Talcum Powder
DE LUXE

# பாமாலிவ்

டால்கம் பவுடர்

PTC 3 T.



# படித்துப் பாருங்கள்



## திருப்புகழ் பாராயணத் தவநெறித் திருமுறை

மந்திரம் என்றால் என்ன? மற்றப் பாட்டுக்கள், செய்யுள்கள், கீர்த்தனைகளுக்கும் மந்திரத்துக்கும் என்ன வித்தியாசம்? மந்திரம் என்பதும் பாஷைகளின் இலக்கண வரம்புக்குள் அடங்குமா? இந்த மந்திரங்களை யார் செய்கிறார்கள்? புதிதாகவும் மந்திரம் தோன்ற முடியுமா?—என்றெல்லாம் பக்தர்களுக்குப் பல சந்தேகங்கள் உண்டாவது இயல்பு. இந்தச் சந்தேகங்களுக்குத் தெளிவான ஒரு விளக்கத்தைத் தருகிறார் தொல்காப்பிய முனிவர்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த இந்த முனிவர் அகஸ்தியரின் மாணவர். பாஷைகளையும் வழிபாட்டு முறைகளையும் நன்கு கற்றுத் தேர்ந்த இந்த ஞான முனிவர், தமிழ் மொழிக்கு எழுதியுள்ள 'தொல்காப்பியம்' என்ற இலக்கண நூலில் மந்திரம் எப்படி உண்டாகிறது என்பதற்கு இலக்கணம் சொல்லுகிறார்:

> நிறைமொழி மாந்தர்
> ஆணையில் கிளக்கும்
> மறைமொழி தானே
> மந்திரம் என்ப!

“நிறைந்த மொழி வளம் கொண்ட பெரியோர்கள், தமது ஆணையின் மூலம் சொல்லுகிற விழுமிய மொழிகளே மந்திரம் ஆகும்!” என்கிறார். 'ஆணை'யும் 'மறைமொழி'யும் சாதாரணப் புலவர்கள் செய்கிற வெறும் செய்யுள்களுக்கு அப்பாற்பட்டவை! நிறைந்த தவத்தினாலும், மனம் ஒன்றிய பெரும் ஞான நிலையினாலும், புறக்கண்ணை மூடி அகக் கண்ணைத் திறந்து அந்த மறை நோக்கிலிருந்து தெய்வத்தைக் காணும் சாதனையினாலும், இத்தகைய பெரிய மந்திரங்களை அருளுகிறார்கள் மகான்கள்!

சமீப காலத்தில் நம்முடைய புண்ணியத் தமிழ் நாட்டில் இத்தகைய ஞானத் தவ மொழிகளை வழங்கியவர்களுள் ஒருவர் அருணகிரிநாதர். 'நிறைமொழி' கொண்ட அவருடைய திருப்புகழ்ப் பாடல்களிலும், கந்தர் அலங்காரம், அநுபூதி முதலிய ஞான மொழிகளிலும் மந்திர சக்தி இருப்பதை எத்தனையோ பல பக்தர்கள் தங்களுடைய பாராயணத்தின் மூலம் வாழ்க்கையனுபவத்திலே கண்டிருக்கிறார்கள்; இன்றும் கண்டு வருகிறார்கள்! இப்படிப்பட்ட பக்தர்களின் தினசரிப் பாராயணத்துக்கு ஒரு கிரமமான முறையை வகுத்துக் கொடுக்கிறது “திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை” என்ற ஞான நூல்!

1870ம் ஆண்டிலே கோயம்புத்தூர் மாவட்டத்தில் பூநாச்சி என்ற கிராமத்தில் சிதம்பர ஜோஸ்யர் என்ற பரம பக்தருக்கு மகனாகத் தோன்றினார் அர்த்தநாரி. மைசூர் அரசரின் சமையற்காரராகப் பணியாற்றி வந்தபோது தமது குடும்பத்தில் நேர்ந்த பல துன்பங்களின் காரணமாக வாழ்வில் அவருக்கு ஒரு விரக்தி ஏற்பட்டது. இந்நிலையில் குன்ம நோயும் உண்டாகவே பழநி சென்றார். வைத்தியர்களால் தீர்க்க முடியாத நோய் மகா வைத்தியனாகிய பழநியாண்டவனால் தீர்க்கப்பட்டது. அவ்வளவுதான்! அன்றிலிருந்து அக்கோவிற் பணிவிடைகளிலேயே ஈடுபட்டு வாழ்ந்தார் அர்த்தநாரி. இப்படியிருக்கும்போது ஒரு நாள் பழநியாண்டவன் சந்நிதியில் நடைபெற்ற ஒரு நடனத்தின் போது தேவதாசி ஒரு திருப்புகழைப் பாடி நடனம் ஆடினாள். அர்த்தநாரிக்கு மெய்ப்பாடு தோன்றி மனோலயம் சித்தித்தது! அந்த விநாடியிலிருந்து திருப்புகழையே தமது வேத நூலாகக் கொண்டு அதை ஓதுவதே திருவருளுக்கு வழி என்று கொண்டார் அர்த்தநாரி. இதன்பிறகு ஸ்ரீ ரமண மகரிஷி, ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் போன்ற பெரியோர்களின் தொடர்பு கிட்டியது. அர்த்தநாரி சச்சிதானந்த சுவாமிகள் ஆனார். சென்னையில் திரு வ. த. சுப்பிரமணிய பிள்ளை என்ற பக்தரும் அவருடைய மைந்தர் அறிஞர் திரு வ. சு. செங்கல்வராயப் பிள்ளையும் சுவாமிகளுக்குப் பலவிதத்திலும் தொண்டுகள் செய்தனர். சுவாமிகள் வள்ளிமலையில் நீண்டகாலம் முருகனை வழிபட்டுத் தவம் புரிந்தார். 'வள்ளிமலைச் சுவாமிகள்' என்றும் 'திருப்புகழ்ச் சுவாமிகள்' என்றும், 'முருகப் பிரும்மம்' என்றும் பல பெயர்களில் அழைக்கப்பட்டார். அவர் தமது பூஜைக் கிரமத்துக்கும், தியானத்துக்கும், வழிபாட்டுக்குமாகத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி செய்து வந்த திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, திருவகுப்பு, கந்தபுராணச் செய்யுட்கள், 'வேல்மாறல்', திரு எழுகூற்றிருக்கை முதலிய பாடல்களைத் தொகுத்து வெளியிட்டுள்ள நூலே “திருப்புகழ்ப் பாராயணத் தவநெறித் திருமுறை” யாகும்!

சுவாமிகளின் மறைவுக்குப் பின் அவரது சமாதியில் தட்சிணாமூர்த்தியும் வேலும் பிரதிஷ்டை செய்து அந்த வள்ளிமலை ஆசிரமத்தில் ஸ்ரீ மௌனகுரு சுவாமிகள் என்ற பெரியார் இன்றும் இருந்து வருகிறார். சுவாமிகளின் அடியார்கள் அவருடைய பெயரால் ஒரு சபையை ஏற்படுத்தி அதன் மூலமே இந்த நூலை வெளியிட்டிருக்கிறார்கள். சுவாமிகள் வகுத்த வழிப்படி இந்தப் பாடலை, எந்த வரிசையில், எந்த முறையில், எப்படிப் பாராயணம் செய்வது கிரமமோ, அந்த வரிசைப்படி அதே முறையில் அச்சிட்டு வழங்கியிருக்கிறார்கள் இந்த நூலிலே!

'முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்பான்' என்று முருகனைப் பாடுகிறார் அருணகிரிநாதர். அப்படியானால் அருணகிரியின் அமுத மந்திரத் தமிழினாலே வாழ்த்துவோரையெல்லாம் முருகன் எப்படி ஆட்கொள்வான் என்பதை நமது ஊகத்துக்கே விட்டுவிட்டார் அந்த ஞானி!

மந்திரத் தமிழில் இன்பமாகப் பாடிக் கொண்டு, அந்த இசைப் பாராயணத்தின் மூலமே தாளத்தைத் தட்டிக் கொண்டே முருகப் பெருமானின் திருவருளைப் பெறுவதற்குரிய ஓர் எளிய உல்லாச வழியை வகுத்துத் தருகிறது இந்த நூல் !

இந்த அரிய நூலை வெளியிட்டதன் மூலம் சச்சிதாநந்தா திருப்புகழ்ச் சபையார் தமிழுக்கும் பக்தி மார்க்கத்துக்கும் மந்திர வழிபாட்டுக்குமே ஒரு சிறந்த சேவை செய்திருக்கிறார்கள். முருகன் திருவருளை நமக்குச் சம்பாதித்துத் தருகிற இந்த மந்திர நூலின் விலை இரண்டரை ரூபாய்தான் !

கிடைக்குமிடம் : கே. ஆர். முருகேசப் பிள்ளை, 78, கந்தசாமி கோயில் தெரு, குயப் பேட்டை, புரசை, சென்னை-12 ; பி. எஸ். கிருஷ்ணய்யர், 36, எர்ரபாலு செட்டித் தெரு, சென்னை-1 ; ஜி. வேம்பு, 291, தம்பு செட்டித் தெரு, சென்னை-1. — சிவமணி

## பாற்கடல்

கார்லைல் என்ற ஆங்கிலப் பேராசிரியர், ஷேக்ஸ்பியர் என்ற பெரும் புகழ் படைத்த நாடகாசிரியரைப் பார்த்து வியந்தார். எத்தனை வகைப்பட்ட மனிதர்களையும், அவர்களது குணாதிசயங்களையும் கூர்ந்து பார்த்து அனுபவித்து எழுதியிருக்கிறார் இந்தக் கவிஞர் என்று வியந்து பாராட்டியிருக்கிறார்.

ராஜாஜியின் கதைகளைப் படிக்கும் போது நமக்கும் அத்தகைய உணர்ச்சிதான் எண்ணத் தான் ஏற்படுகின்றன !

'கட்டின தாலி' என்பது முதல் கதை. அதில் ராமபத்திரன்-சீமைக்குப் படிக்கப் போனவன், ஊரிலிருக்கும் மனைவியை விவாகரத்து செய்து விட்டு, இஸபெல் என்ற வெள்ளைக் காரியுடன் வாழத் தொடங்கி விட்டான். இந்த அடாத செயலைக் கண்டு மனமுருகிய அவன் நண்பன் முத்து, ராமபத்ரன் கைவிட்ட இளம் மனைவியைத் தானே விவாகம் செய்து கொண்டு வாழ்வளிக்கத் தீர்மானிக்கிறான்.

ஹிந்து சமுதாயத்தில் இத்தகைய எண்ணம் முப்பதாண்டுகளுக்கு முன் ஒருவர் உள்ளத்தில் எழும் என்று சொல்ல முடியாது. ஆனால் இது நவீன யுகத்தின் சிந்தனை !

இந்தச் சிந்தனையை வாங்கி வடித்திருக்கும் பண்பைப் பார்க்கும்போது நமக்கு வியப்பாக இருக்கிறது. அதைவிட வியப்பும் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது, ராமபத்ரனுடைய முதல் மனைவியின் நடத்தையைப் பார்க்கும் போது ! பாரதப் பண்பின் சிகரத்தைத் தொட்டுக் காண்பித்து விடுகிறார் ராஜாஜி இக்கதையில் ! கட்டின தாலி மிக அருமையான கதை.

ராஜுலு செட்டியார் பரம லோபி. அப்படிப்பட்டவர் பெரிய தர்ம கைங்கரியம் செய்து விட்டுப் போகிறார் !

இந்த விந்தையை அவர் உள்ளத்தில் நிகழ்த்தியது யார் ; ரஸவாதத்தைப் புரிந்தது யார் என்பதை ஓர் அரிய கற்பனைக் கதையாக வடித்துத் தருகிறார் ராஜாஜி.

அத்துவைத விஷயத்துக்கு இரண்டு கதைகள் மூலம் புதிய நோக்கு, விளக்கம் தருகிறார் ராஜாஜி. மிக மிக உருக்கமும் கட்டுக் கோப்பும் அமைந்த கதைகள்.

முட்டிதாசன், மந்திரி சீதாராமய்யர், நீதிபதி ஜெயராமய்யர், ரிக்ஷாக்காரன் நல்லி முதலிய கதைகள் ஒவ்வொன்றும் ராஜாஜியின் உள்ளத்தின் விரிவையும் அதிலிருந்து பொங்கி வரும் அநுதாப ஊற்றுக் கண்ணின் வேகத்தையும் புலப்படுத்துவனவாகும்! இது வரை வந்த ராஜாஜியின் கதைத் தொகுதிகளுக்குச் சிகரம் வைத்தாற்போல் விளங்குகிறது பாற்கடல் கதைத் தொகுதி. பிரசுரம் : பாரதி பதிப்பகம், சென்னை - 17; விலை ரூ. 2.

## திருக்குறள்

இலக்கியம் மகோந்நத நிலையை அடைந்த நாட்டிலே நாம் பிறந்தோம் என்று மகிழும் தனிப் பெரும் உரிமை நமக்குக் கிடைத்திருக்கிறது வள்ளுவன் தந்த குறளினால்.

நூலுக்கு ஒரு வடிவம் கொடுக்கும் முறையிலே கிறிஸ்தவ வேதமாகிய பைபிளுக்கு எத்தனையோ பதிப்புகள் வெளிவந்துள்ளன. உயர்ந்த பதிப்பிலிருந்து மிக மிக மலிவுப் பதிப்புவரை பலப்பல பதிப்புகள் வந்துள்ளன. அப்படித் திருக்குறளுக்கும் வரவேண்டும் என்ற உணர்வுடனே பாரதி பதிப்பகத்தினர் திருக்குறளைப் பரிமேலழகர் உரையுடன் மலிவுப் பதிப்பாகக் கொண்டு வந்திருக்கிறார்கள். டாக்டர் மு. வ. அவர்கள் "இப்பதிப்பைக் குறைந்த விலையில் பிழையில்லாப் பதிப்பாக வெளியிட்டிருப்பது பாராட்டத்தக்க செயலாகும். கற்பார் உள்ளத்தில் பதியுமாறு ஒவ்வொரு குறளின் இறுதியிலும் கருத்துரையைச் சேர்த்துள்ளனர்" என்று பாராட்டியுள்ளார்.

கிடைக்குமிடம்: பாரதி பதிப்பகம், உஸ்மான் ரோட், சென்னை—17 விலை ரூ. 2.

## சுகமாய் வாழ்வது எப்படி ?

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.' 'சுவரை வைத்துக் கொண்டுதானே சித்திரம் எழுத வேண்டும்?' இப்படியாகப் பல பழமொழிகள் உடல் நலம் பேண வேண்டும் என்னும் கொள்கையை உறுதிப்படுத்துகின்றன. உடல் நலம் உள்ளத் திண்மையை அளிக்கும் என்பதும் அநுபவ பூர்வமான உண்மை. இந்த உண்மையை இன்னும் வலியுறுத்துகிறது திரு டி. வி. திருவேதியின் 'சுகமாய் வாழ்வது எப்படி ?' என்னும் இந்த நூல்.

சுகமாக வாழ விரும்பாதவர்கள் இவ்வுலகில் யாருமே கிடையாது. அதற்கு என்ன செய்ய வேண்டும் ? இயந்திரங்கள் ஒழுங்காக அதிக வருஷங்கள் உழைக்க வேண்டுமென்றால், எண்ணெய் போட்டுத் துடைத்துத் துப்புரவாக வைத்துக் கொள்வது போல் இந்த உடலாகிய இயந்திரத்தையும் உடற் பயிற்சி மூலம் பல வருஷங்கள் நோயின்றி இருக்கச் செய்யலாம் என்பதைத் தெளிவு படுத்துகிறார் ஆசிரியர். உடற்பயிற்சியின் வகைகளைப் பல படங்கள் தயாரித்து இலகுவில் புரியும்படியாக விளக்கி யிருக்கிறார். குறைந்த விலையில் இப்புத்தகத்தைக் கொடுக்க முன் வந்திருப்பது பாராட்டுக்குரியது.

வெளியிடுவோர்: டி.வி.எஸ். ரெக்ரியேஷன் கிளப், மதுரை, விலை ரூ. 1.25.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# இல்வசம்!

நல்லதொரு
முகக் கண்ணாடி
உங்களுக்கே

ஹிமாலயா
புக்கே
டாய்லெட் பவுடர்




அடங்கிய இவ் விசேஷ டப்பாவிலே!

*சரக்குகள் தீர்ந்துவிடுமுன் முந்துங்கள்!*

HBP. 7-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இளஞ்சிவப்பு, உதயச் செவ் வானம்போலும்

இளஞ்சிவப்பு, புதுரோஜா இதழேபோலும்




வண்ணமாய் வந்தபுதுமை

# ப்ரீஸ்

அழகுசாதன சோப்




நலமோங்கும்
மேனியெழிலுக்கு ப்ரீஸ்
இளஞ்சிவப்பு நிற
ப்ரீஸ்